இப்போது முன்கேட்கப்பட்டிருக்கிறமோக்ஷசாதனங்களையெல்லாஞ்சொல்லுகிறேன் அதைநீர்சாவதானமாயிருக்கின்ற புத்தியுடனேகேளும்.

முதற்சருக்கமுற்றிற்று.

# இரண்டாவது சருக்கம்.

இச்சருக்கத்திலிச்சாஸ்திரத்துக்கதிகாரியும் பூருவ ராமாயணத்துடன் உத்தரராமாயணஞ்சம்மந்தப்படுவதும் பிரமதேவருத்தரவினாலிந்த உத்தரராமாயணஞ்செய்ததுஞ் சிவன்முத்தனதுநடத்தையுஞ் சொல்லப்படுகின்றன.

கடவுள்வாழ்த்து. சின்மாத்திரசொரூபியாயும் விபுவாயுமிருக்கின்ற பரமாத்மாவானவர்சொர்க்கலோகமாகவும் பூலோகமாகவும் அந்தரட்சலோகமாகவும் பிரிதிவியாதிபூதங்களாகவும் தேகாதியாத்மாவாகவுமிந்திராதிதெய்வங்களாகவும் ஏனக்கவிததையினால் நாநாவிதமாகத்தோற்றியும் ஏதார்த்தத்தில நிர்விகாரசின்மாத்திர சுபாவத்தையுடையவராயுஞ்சர்வப்பிராணிகட்குமாத்மாவாயுமிருக்கின்ற அப்பரமாத்மாவைநமஸ்காரஞ்செய்யாநின்றேன் [இச்சருக்கத்தில மங்களஞ்செய்தது இச்சாஸ்திரத்தை மாணாக்கருக்குபதேசஞ்செய்கிற ஆரம்பத்துக்காக முன்சருக்கத்தில் மங்களஞ்செய்தது சாஸ்திரஞ்செய்கிற ஆரம்பத்துக்காக அதன்றியும் எந்தச்சாஸ்திரமுதலிலுநடுவிலுமுடிவிலுமங்களத்தையுடையதாகவிருக்கின்றதோ அந்தச்சாஸ்திரநிர்விக்கினமாய்நிறைவேறிப்பிரசித்தமாகுமென்றுமதைப்படிக்கிறவர்களுங்கேட்கிறவர்களும் வீரராளாயுமாயுளையுடையவர்களாயுஞ்சிரேஷ்டமானபதத்தையுமடைகிறார்களென்று மகாபாஷியத்திற்சொல்லியிருப்பதாற்கூறியதுகூறலென்கிறதோஷமில்லையென்பதுகருத்து]

(அ-கை) இச்சாஸ்திரத்துக்கு எவனதிகாரி அஞ்ஞானியாஞானியா முதற்சொன்னதுகூடாது ஏனெனில் அவனுக்குத்தேகத்திலாத்மபுத்தி திடமாகவிருப்பதாலுமிராகத்தையுடையவனாகையாலும் மோக்ஷத்திலிச்சையில்லை அப்படிசொல்லவேண்டாம் விஷயங்களிலதோஷத்தை யறிகின்றமையாலும் சனனமரணாதிதுன்பத்தையறிகின்றமையாலுமவனுக்குவைராக்கியமுண்டாகிமோக்ஷத்திலிச்சைவந்தால் அதிகாரமுண்டாகுதெனில்விராகிகள்



விஷயங்களைமிகவுமிரட்சிக்கவேண்டுமென்றிச்சித்திருப்பதால் விஷயங்களிருக்கும்போதே அவைகளுடையதோஷங்களைநீக்குதற்குபாயத்தையும் உயர்ந்தவிஷயங்களைத் தேடிக்கொண்டும் இகபரசுகங்களையுமதற்குபாயத்தையுமிச்சித்துக்கொண்டுபிரவர்த்திக்கிறார்களாகையால் முதற்பட்சங்கூடாது இரண்டாம்பட்சமுங்கூடாது ஏனெனில் அவன்செய்யத்தக்க காரியஞ்செய்துமுடிந்தவனாகையாலும் சாஸ்திரத்தினாற்சம்பாதிக்கத்தக்கபிரயோசனம் வேண்டியதில்லாதவனாகையாலும் சாஸ்திரத்திற்பிரவர்த்திவரமாட்டாது ஆகையாலெவனதிகாரியெனிலிவ்விருவரினும்வேறுபட்டிருக்கின்ற அதிகாரியைவான்மீகர்தெரிவிக்கிறார் | சமுசாரபாசத்தினாலநாதிகாலமாகச்சிறைச்சாலையிற்கட்டுப்பட்டவன்போலப்பந்தப்பட்டிருக்கிறநான் சிரவணாதியினால்முத்தனாகவேண்டுமென்கிற நிச்சயமுள்ளவனிந்தச்சாஸ்திரத்துக்கதிகாரி மிகவுமஞ்ஞானியும் ஞானியுமிதற்கதிகாரியல்லர் [ஆகையாலஞ்ஞானியே அனேகபுண்ணியங்களாலிராகாதிதோஷமெல்லாம் நசித்தபின்பு விவேகமுண்டானத்தினாலாத்மஞானம் வேண்டுமென்றிச்சையடைந்து வணக்கத்துடன் பத்திரபுட்பபலாதிகளைக்கையிற்கொண்டு குருவினிடத்திற்சென்றுசரணமடைகின்றவனே அதிகாரியென்பதுகருத்து] (அ-கை) இராகாதிதோஷம் நசித்தபுருஷன் திரிவருணிகனேயாகிலவன் சந்நியாசஞ்செய்துகொண்டுவேதாந்தசிரவணஞ்செய்வதற்கே அதிகாரியவனுக்குப்பூர்வராமாயணமும் வேண்டுவதில்லை அதேனெனில் (பரமாத்மாவை வேதம்படிப்பதினாலும் யக்கியத்தினாலும் தானத்தினாலும் தபசினாலும் அறியவிச்சிக்கிறார்களென்பது) சுருதியிற்பிரசித்தமாதலால் திரிவருணிகருக்குவேதத்தினாலேயே சித்தசுத்தியுண்டாகுது அத்திரிவருணிகருக்குமிதிலதிகாரமில்லை ஏனெனில் வேதத்தையறியாமலிருக்கிறவன் பெரிதானபரமாத்மாவை யறியமாட்டானென்று அத்திரிவருணிகருக்கதிகாரத்தைத் தகைந்திருப்பதால் இச்சாஸ்திரத்துக்கதிகாரியில்லையென்பதுகூடாது அதேனெனில் திரிவருணிகருக்குமுன்றக்கினிகளாற்செய்யத்தக்கசுருதிகருமத்திலதிகாரமிருக்கையிலும்யாகஞ்செய்யாதவர்கள்செய்வதானமிருதியிற்சொல்லியிருக்கின்ற ஔபாசனாதிகருமத்திலுமதிகாரமிருப்பதுபோல வேதாந்தத்திலதிகாரியானவனுக்கும் சன்னியாசமடையாதமுமுட்சுவுக்குரிய விச்சாஸ்திரத்திலுமதிகாரமுண்டு இப்புராணமுமிருதிபோலவேதத்திற்குச்சமானம் அதெப்படியெனில வேதத்தினாலறியத்தக்கபரமாத்மாதசரதகுமாரனாகச்சனிக்கும்போது வேதம்வான்மீகரிடத்திராமாயணரூபமாகவுண்டாயிற்று ஆதலால் வேதத்தில்பூர்வகாண்டத்திற்குப் பூர்வராமாயணமுழுதுஞ் சமானம் உத்தரகாண்டத்திற்

கு உத்தராராமாயணமுழுதுஞ்சமானம் சிறிதுமிருத்திகருமங்களில் ஸ்திரீ சூத்திராளுக்கெப்படி அதிகாரமுண்டோ அப்படி இச்சாஸ்திரத்தினுடைய கேள்வியிலும் புராணத்தினுடைய கேள்வியைப்போல அவர்கட்கதிகாரமுண்டு (பரமாத்மாசகலவருணாச்சிரமங்களாலு மறியத்தக்கவரென்று சுருதியிருப்பதால பூர்வகாண்டத்திற்சொல்லியிருக்கின்ற தருமத்தைச்செய்வதனாலுண்டாகுஞ் சித்தசுத்தியைப்போல இச்சாஸ்திரத்திலும் பூர்வராமாயணத்திற் சொல்லியிருக்கின்ற அந்தந்த வருணாச்சிரமத்துக்குரிய நிஷ்காமகருமானுஷ்டானத்தினாலுண்டாயிருக்கின்ற சித்தசுத்தியானது ஆத்மஞானஞ்சம்பாதிக்கவேண்டுமென்கிற இச்சையையுண்டுபண்ண ஏதுவாகுமென்றுபூர்வராமாயணத்துக்கும் உத்தராராமாயணத்துக்குங் காரியகாரணபாவமென்னுஞ்சம்பந்தத்தைத்தெரிவித்துச்சகலவநர்த்தங்களும் போகுமென்கிறவேறெனபிரயோசனத்தைச்சொல்லுகிறார் | கதோபாயமென்னும் பெயருடைய பூர்வராமாயணத்தை முன்னேவிசாரணை செய்தனுஷ்டித்தபின்புமோட்சோபாயமென்னும் பெயருடைய இந்த உத்தராராமாயணத்தை விசாரணை செய்கின்றவனுக்குச்சனனமரணாதி துன்பமில்லை [பூர்வராமாயணத்துக்குக்கதோபாயமென்றெப்படி பெயரெனில் அக்கதையினருத்தமே ஞானாதிகாரத்தைக்கொடுக்கும்படியான தருமத்தின்தத்துவ ஞானத்திலும் அதினனுஷ்டானத்திலுமீஸ்வர ஆராதனத்திலும் உபாயமாவதைபூர்வராமாயணத்திற் சொல்லுவதனாலெனவறிக] ஐம்பத்தாறுயிரங்கிரந்தமுள்ள மகாராமாயணத்தில் அனுகூலமாய்ப்பிரகாசிக்கப்பட்டிருக்கிற இராகாதிதோஷங்களைப்போக்குதற்குவலிமையுள்ள இராமசரித்திரங்களைச்சொல்லுகிற இருபத்துநாலாயிரங்கிரந்தமுள்ள பூர்வராமாயணத்தைநான்முன்னேசெய் துவணக்கமும் புத்தியுமுள்ள சிஷியனாகியபரத்துவாசன்பொருட்டுச்சமாதானத்தையடைந்தசித்தமுள்ளநான்சமுத்திரமானது யாசகனுக்கு இரத்தினத்தைக்கொடுத்தாற்போலக்கொடுத்தேன் அப்பரத்துவாசரதை மகாமேருவிலிருக்கிற ஒரு ஆரணியத்திலபிரமாவின்முன்னேவாசித்தார் அவரதைக்கேட்டின்புற்றப்பரதுவாசரைப்பார்த்துவேண்டியவரம்பெற்றுக்கொள்ளென்று சொல்லபகவானே முமூட்சுக்கள்துன்பநீங்கி இன்பமடைகின்றவுபாயமேயெனக்குவரமாகருசிக்கின்றதாலதைத்தெரிவித்தலவேண்டுமென்றுபரத்துவாசர்கேட்கப் பூர்வராமாயணத்தைச்செய்தவான்மீகிரிஷியை நீ வினக்கேட்ட இந்த அருத்தசித்திக்குச்சுருவாகச்சீக்கிரத்தில்வேண்டிக்கொள்ளும் அவரால்மேற்செய்யப்போகிற உத்தராராமாயணத்தை முமூட்சுக்கள்சிரவணஞ்செய்துதிடமான அவிச்சையினாற் சமுத்திரத்தைக்கடந்தாற்போலச்சகலமோக



ங்களையுங்கடப்பார்களென்றுபிரமதேவர்சொல்லி பரத்துவாசரோடெனதாச்சிரமத்திற்குவந்தார் மிகுந்தசத்துவகுணத்தையுடையவராயுஞ்சகலவுயிர்கட்குமிதத்தைச்செய்பவராயுமிருக்கின்ற அந்தப்பிரமதேவனை அர்க்கியமுதலிய உபசாரங்களாற்பூசிக்க அவரென்னைப்பார்த்துச்சிரேஷ்டமான வான்மீகிமுனியே பூர்வராமாயணஞ்செய்து உத்தராராமாயணஞ்செய்வது விரிவாயிருக்கின்றதென்று சிரமத்தாலவிடாமலமுழுதுஞ்செய்யவேண்டும் அதனால் இவ்வுலகமானது சமுசாரதுன்பத்தைக்கப்பலினாற் சமுத்திரத்தைத்தாண்டுவதுபோலத்தாண்டுமிக்காரியத்தைத்தெரிவிப்பதற்காகவே நான்வந்ததமையால்நீர் உலகோபகாரத்தின்பொருட்டிச்சாஸ்திரத்தைச்செய்யுமென்றுசொல்லிப்பிரமதேவர் எனதாச்சிரமத்திலநின்றுங்க்ஷணத்தில் சமுத்திரத்திலுண்டான அலைமறைவதுபோலமறைந்தார் பின்பவர்வந்தசந்தோஷத்தினாலென்னைமறந்துபோய்ச்சுபாவத்தையடைந்தபுத்தியினாலிருப்பவும்பரத்துவாசரைப்பார்த்துப்பிரமதேவரென்னசொன்னாரென்றுகேட்கவவரென்னைப்பார்த்துப்பூர்வராமாயணமெப்படிசெய்தீரோ அப்படிச்சமுசாரசமுத்திரத்தைக்கடத்தற்குபாயமான உத்தராராமாயணத்தைச்செய்யுமென்றுபிரமதேவராலிதுதான்சொல்லப்பட்டதென்றுசொல்லிமேலுங்கேட்கிறார் துன்பமான இச்சமுசாரத்திலிராமர் இலட்சுமணர் பரதர் சத்துருக்கனர் சீதை மற்றதசரதர்முதலியோர்களும் எப்படிவிவகாரஞ்செய்துகொண்டெந்தவுபாயத்தினால் துக்கமில்லாமலிருந்தார்களோ அதையெனக்குத்தெரியும்படியாகச்சொன்னால்நானுமப்படியே அந்தவுபாயத்தினால் துக்கமில்லாமலிருக்கவேண்டுமென்று பரத்துவாசர் அன்புடன் வணங்கிக்கேட்க வாரீர் அரிஷ்டநேமியென்னுமிராசசிரேஷ்டரே அப்போதுநான் பிரமதேவருத்தரவின்படிமோட்சோபாயத்தைச்சொல்வதற்கெத்தனஞ்செய்தேன்வாரீர்பரத்துவாசரே கேட்டமாத்திரத்தில் ஆத்துமதத்துவத்தைமறைக்கின்றமோகமாகிறமலந்தூரப்போகும்படியானஉபாயத்தைச்சொல்லுகிறேன்கேளும் ஸ்ரீராமர் ஒன்றிலுஞ்சம்பந்தப்படாமலிருக்கின்ற புத்தியினால் விவகாரஞ் செய்துகொண்டிருந்ததுபோல நீயும்விவகாரம்பண்ணிக்கொண்டிரு இலட்சுமணர் பரதர் சத்துருக்கனர் கௌசலை சுமித்திரை சீதை தசரதர் இராமருக்குச்சகாவாயிருக்கின்றகிருதாஸ்திரன் அவிரோதன் வசிஷ்டர் வாமதேவர் திருஷ்டி சயந்தன் பாசன் சததியன் விஜயன் விபீஷணன் சுஷேணன் அநுமான் சுக்கிரீபனுடையமந்திரியாகிய இந்திரசித்து இவர்களெல்லாரும் உள்ளில்சர்வசமமாயும் ஆசையற்றமனதுள்ளவர்களாயும் வெளியில்பிராரத்தத்துக்குத்தக்கபடிவந்ததை அனுபவித்துக்கொண்

டும் மகாபுருஷர்களாயும் சீவன்முத்தர்களாயுமிருந்துகொண்டு ஏக்கியம் தானம் வாங்கிறது இருக்கிறது நினைக்கிறது முதலானதுகளைச்செய்துகொண்டிருந்ததுபோல நீயுமிருப்பாயானால் சகலதுக்கத்தையும்விட்டுச்சுகமாகவேயிருப்பாய் [ஏக்கியம் தானமென்றுசொன்னது சுருதிஸ்மிருதிகளிற்சொல்லப்பட்டகருமத்தைச்செய்ததென்றும் வாங்கிறது இருக்கிறதென்றுசொன்னது அந்தந்தக்காலந்துக்கு யோக்கியமான நன்றான லௌகிகவிவகாரங்களைச்செய்ததென்றும் நினைக்கிறதென்றது இவ்விரண்டுக்கும்விஷயமான முன்பின்னடக்கவேண்டியகாரியங்களை நினைத்ததென்றுஞ்சொன்னதெனவறிக] கரையிற்றியசமுசாரமாகிற சமுத்திரத்தில்விழுந்திருக்கிறபுருஷனானவன் உத்தமமான இந்தமோட்சோபாய யுக்திகளையடைந்தால் மிதந்தசத்துவகுணமுள்ளவனாகி சோகம் எளிமை மனஸ்தாபமுதலானத்தைவிட்டு என்றைக்கும்பரிபூரணானந்த சொரூபமாயிருக்கிறான்.

இரண்டாஞ்சருக்கமுற்றிற்று.

# மூன்றாவது சருக்கம்.

இச்சருக்கத்தில் திரிசியத்தைப்போக்குகிற உபாயங்களும் வாசனைகளின்பேதமும் அவைகளினிலட்சணமும் ஸ்ரீ ராமர்தீர்த்தயாத்திரைநடத்தையுஞ்சொல்லப்படுகின்றன.

இராமர்சீவன்முத்தபதத்தையடைந்தசாதனத்தைச் சொல்லவேண்டுமென்றுபரத்துவாசர்கேட்க (அ-கை) முத்தியினிலட்சணஞ் சொரூபம் சாதனம் பலமிவைகளாற்சீவன்முத்தரிருப்பைவிரிவாகச்சொல்லவேண்டுமென்றிருக்கின்ற ஸ்ரீ வான்மீகர்முன்னதாக எளிதாய்த்தெரியும்பொருட்டுச்சுருக்கி முத்தியினிலட்சணத்தையுஞ்சொரூபத்தையுந்தெரிவிக்கின்றார் | வாராய்சாதுவானபரத்துவாசனே ஆகாசத்திற்றோற்றுகின்றநீலவருணம்போலபரமாத்மாவினிடத்தில் மிகவுமில்லாமலிருந்தாலும் பொய்யாகவேயுண்டாயிருக்கின்ற அத்தியாசரூபமானசகத்பிராந்தியை அதற்குமூலமான அவித்தையையும்வாசனையையும்போக்கி மீண்டுமந்நினைவுதோன்றாமலிருக்கும்படிமறப்பதே எவற்றிற்குமுயர்வானமுத்திக்கு இலட்சணமாகவுஞ்சொரூபமாகவுமெண்ணுகின்றேன் [பதசாரம் எண்ணுகின்றேனென்றது சாஸ்திரத்தினாலும் அனுபவத்தினாலும்நிச்சயிக்கிறேனென்று அருத்தம் மீண்டுமந்நினை



வுதோன்றாமல்மறப்பதென்றது பரோட்சஞானிக்கும் சுழுத்தியிலும் நிருவிகற்பசமாதியிலும் + திரிசியவிஸ்மரணமான திருக்கின்றது ஆகிலுமீண்டும் நினைக்கும்படியான அந்தக்கரணத்தைவிட்டதல்ல ஆகையாலப்படிக்கொத்த அந்தக்கரணமில்லாமலிருக்கின்றமறதியேவேண்டுவது அன்றியும் தொய்தமேதோற்றாமலிருக்கவேண்டும் அல்லதுமறந்துபோனது போலின்றியாயிருக்கவேண்டும் மறந்துபோனபதார்த்தம் அனுபவித்தவனிருக்கும்போதுந்தோற்றாததுபோல அறிவிருக்கும்போதுந்திரிசியந்தோற்றுகிறதில்லையென்று அருத்தம் அப்படியேயாகில்திரிசியமே பரமார்த்தசத்தியமாக ஒப்புக்கொண்டிருக்கின்ற சாங்கியர்முத்தியைப்போல தோற்றாமலிருக்கைமாத்திரமோவெனில் அதல்லவென்பதற்காக அத்தியாசமென்று சொன்னார் சமஸ்காரத்தினாலுண்டாயிருக்குதே அதெப்படி அத்தியாசமாகுமெனில் பரம்பரையாகஅனாதியாய்வருகின்றசகங்களின் விவகாரத்தினாலுண்டானசமஸ்காரத்தால் அந்தப்பிராந்தி இருப்பையடைந்திருக்கின்றது அப்போதுதோஷத்தினாலுண்டாகாமையினாலும் ஓரதிஷ்டானமின்றியிருப்பதினாலுமிதுபிராந்தியல்லவேயெனில் அதற்காக ஆகாசத்தில் நீலவருணம்போல உண்டாயிருக்கின்றதென்றுசொன்னது அதெப்படியெனிலதூரத்திலிருப்பதும் நன்றாக விசாரியாமலிருப்பதுமாகிய விரண்டுதோஷங்களால் ஆகாசத்தில்நீலநிறந்தோற்றுகின்றதுபோல அவித்தையாதோஷத்தினால் பரமாத்மாவினிடத்தில்சகத்பிராந்திதோற்றுகின்றது ஆகையால் திரிசியவிஸ்மரணமேமுத்திக்கு இலட்சணம் அந்த திரிசிய அத்தியந்தாபாவத்தோடுகூடிக்கொண்டுசின்மாத்திரமாயிருத்தலே அந்தமுத்திக்குச் சொரூபம்]

(அ-கை) முத்தியினதிலட்சணமுஞ்சொரூபமும் உமக்கனுபவமானாலதுஎங்களாலேன் அனுபவிக்கப்படவில்லையெனில் | திரிசிய விஸ்மரணத்தையறிந்தாலன்றி முத்தியினது இலட்சணமும் சொரூபமும் ஒருநாளும் ஒருவராலும் அனுபவிக்கப்படமாட்டாது ஆகையால்திரிசியவிஸ்மரணமெதினாலுண்டாகுமெனில் ஆத்மசாட்சாத்காரத்தினாலவசியமுண்டாகும் அந்த ஆத்மசாட்சாத்கார உபாயமெதினாலுண்டாகுமெனில் இச்சாஸ்திராப்பியாசத்தினாலேயே உண்டாகின்றது அதற்சாகவே உண்டான இச்சாஸ்திரத்தைத்தத்துவ நிச்சயம்வருகிறவரைக்கும் நீகேட்பையாகில் அந்தஆத்மசாட்சாத்காரத்தை நீயடைகுவாய்வேறொருமார்க்கத்தினாலுமடையமாட்டாய் (அ-கை) சொன்னதையேவிளங்கச்சொல்லுகிறார் | இச்சகத்பிராந்தியானது கண்ணுக்குத்தோற்றிக்கொண்டிருந்தாலுமிச்சாஸ்திரத்தி

+ திரிசியவிஸ்மரணமாவது · திரிசியநினைவில்லாமலிருக்கை

சொல்லியிருக்கிறபடிவிசாரித்தால் துன்பமில்லாமல் ஆகாசத்தினது நீலநி
றம்போலநிசமுமில்லவேயில்லையென்று அனுபவிக்கப்படுகின்றது (அ கை)
அனுபவிக்கப்படுகிறதென்றுசொல்லப்பட்ட அனுபவம் ஆத்மசைதன்னிய
மா அல்லதுவேறு வேறென்றுசொல்லக்கூடாது சித்தைத்தவிரவேறுபட்
டதெல்லாஞ் சடமாகையாலும் விஷயமாகையாலும் அனுபவமாகமாட்டா
து ஆத்மசைதன்னியமென்றுசொன்னால் அதுமுன்னமேயிருக்கின்றது இ
ப்போதுசாஸ்திரத்தினாலாகவேண்டுவதென்னெனில் | ஆத்மசைதன்னியந்
தானனுபவிக்கப்படுகின்றது ஆகிலுந்திரியத்தோடு கூடிக்கொண்டிருக்கி
ற ஆத்மாமுன்சொன்ன அனுபவவாத்மாவல்லபின்னையோவெனில் அகண்
டாகாரவிருத்திரூபமான ஆத்மதத்துவசாட்சாத்காரபரிபந்தமுள்ளஞானத்
தினால் அவித்தைநசித்தபின்பு அந்த அவித்தையினாலுண்டாயிருக்கின்ற
திரிசியங்காலத்திரயத்திலுமில்லையென்று மனதுக்குத்திரிசியவிஸ்மரணமெ
ப்போதுசித்திக்கின்றதோ அப்போது உத்தமமானமோட்சசுகமானது நி
த்தியமாயிருக்கின்ற ஆத்மசொரூபமாயிருந்தாலும் அந்தத்தத்துவஞானத்
தினாலுண்டானதுபோலவேயாகின்றது [நிரதிசயானந்தம்நித்தியமாயிரு
க்கின்ற ஆத்மசொரூபமாகவிருந்தாலும் சாஸ்திராப்பியாசத்தினாலுண்டா
குதென்பதுகருத்து இதனால்முத்திக்குச் சாதனமும்பலமுங் காட்டப்பட்ட
து] (அ கை) கர்மசாஸ்திரங்களிற்சொல்லியிருக்கின்ற உபாயங்களாலே
யேமோக்ஷசுகம் என்வரமாட்டாதெனில் | இப்போதுசொன்ன உபாயத்
தோடுகூடியஞானசாஸ்திராப்பியாசத்தைவிட்டு கர்மசாஸ்திரமென்னும்ப
டுகுழிகளில்வீழ்ந்துழன்றும் அநாதியான அஞ்ஞானத்தையுடையவர்களா
யுமிகபரங்களிலிருக்கின்ற விஷயத்திலிச்சையடைந்து அதையனுபவிக்கும்
பொருட்டும் சனனமரணத்தையடைகிறநிகிர்ஷ்டமான புருஷாளுக்குச்ச
தோதயமாகியும்ஞ்நவாவுண்டாக்குவதற்குரியதல்லாததாகியுந்தானே உ
ண்டானதாயும்நித்தியமாகியுமிருக்கிறமோக்ஷசுகமானது அனேககற்பகால
ங்களாலுங்கிடைக்கமாட்டாது [அநாதியான அஞ்ஞானத்துக்கு ஞானந்
தவிர அனேகஞ் சாதனங்களாலு நிவிர்த்தியில்லையென்பதுகருத்து]
(அ-கை) உபாசனாதிகளான உபாயங்களாற்சாதிக்கத்தக்கதான சாலோக
முதலிய அன்னியமோக்ஷங்களும் பிரசித்தமாக இருக்கின்றன அவ்வுபா
யங்களாலவர்கட்கு யாதினால்முன்சொன்னசுக மில்லையெனில் | பிறவிக்
குவித்தானவாசனையை முழுதும் விடுவதேமுக்கியமானமோக்ஷமென்று ம
றுவேதன்மார்க்கமென்றுமேலானசத்துக்கள்சொல்லுகிறார்கள் [வாசனை
யேமுக்கியமானபந்தமாகையால்சாலோகமுதலியமோக்ஷத்தில் பந்தநிவிர்த்



தியின்மையாலவைகௌணமோக்ஷமென்று சொன்னதிரண்டாம் பட்சமென்ப
துகருத்து] (அ-கை) வாசனைபோனாலுமதற்கேதுவான மனதிருக்கின்
றமையால் திரும்பவும்வாசனைகளுண்டாகும் அதனால்பந்தமுமுண்டாகுமெ
னில் | பனிக்கூட்டநசிக்கும் போது அதன்திவலை நசித்தல்போல வாச
னை நசிக்கும்போதுமனது நசிக்கும் [மனது வாசனைத் திரளினதுருவமா
கையாலென்பதுகருத்து] (அ-கை) மனதுநசித்தபோதிலும் ஸ்தூலதே
கமிருக்கின்ற மையால்பந்தமுண்டாகுமெனில் | மெல்லிதான நூலினால்
கோக்கப்பட்ட முத்துக்களின் கூட்டமானதுதரிக்கப்படுமாப்போல பஞ்ச
பூதங்களாற் செய்யப்பட்டகூண்டுரூபமான இந்தத்தூலதேகமானது அற்
பமானசுத்தவாசனையினாற்றரிக்கப்படுகின்றன (அ-கை) இந்தப்படிசிரே
ஷ்டமானமோட்சத்தைவருணித்துப்பிரகிருதமானசீவன்முத்தியைச்சொல்
லவேண்டுமென்று வாசனையிருவிதமென்று சொல்லுகிறார் | சுத்தமென்
றும்மலினமென்றும் வாசனையிருவிதம் மலினமாவதுசென்மத்துக்கேது
சுத்தமாவதுசென்மத்தைநாசம்பண்ணும் (அ-கை) அதில்மலினவாசனை
யினிலட்சணத்தைத் தெரிவிக்கிறார் | அஞ்ஞானமே நிலம் அதில்விஷயஞா
ன அப்பியாசத்தினால்விர்த்திபண்ணப்பட்டிருக்கிற உருவையுடையவாசனை
யேவித்து இராகத்துவேஷாதிகளால் விர்த்திபண்ணப்பட்டிருக்கின்றமை
யால்திடமான அகங்காரமேநீர்கட்டுகிறநிலக்காரன் அவனால்வ்வாசனைவி
ரிவாகவிளங்குகின்றது அதுதிரும்பவுஞ்சென்மத்தையுண்டுபண்ணுகின்ற
மையால்மலினவாசனையென்றறிந்தோராற்சொல்லப்படுகின்றது (அ-கை)
சுத்தவாசனையினதிலட்சணத்தைத்தெரிவிக்கின்றார் | அறியத்தக்கஆத்மசொ
ரூபத்தையறிந்ததினால் அவித்தையாகிறநிலம்வேகும்போது அதற்குள்ளிரு
க்கிறசென்மமாகிறமுளை நசித்தபோதிலும் பிராரத்துவத்தினால் தடங்க
ல்பண்ணப்பட்டமையால் தீயாலவறுபட்டவித்தைப்போலத்திரும்பவுஞ்சென்
மரூபமானமுளையையுண்டுபண்ணாமலிருப்பதுந் தேகமிருக்கும்பொருட்டு
த்தரிக்கப்படுவதுமாகியவாசனையே அறிந்தோர்களால் சுத்தமென்றுசொ
ல்லப்படுகின்றது (அ-கை)சொன்னத்தையேவிளங்கச்சொல்லுகிறார் | சீ
வன்முத்தரிடத்தில் திரும்பவுஞ் சென்மத்தைக்கொடாமலிருக்கின்ற சுத்த
வாசனையானது சுற்றிவிட்டசக்கரத்திலிருக்கிற சுற்றல்போல தேகமிருக்
கிறமட்டுமிருக்கின்றது (அ-கை) பலத்தோடுகூட சீவன்முத்தியிருக்கிறவி
டத்திற்கிலட்சணஞ் சொல்லுகிறார் | சுத்தவாசனையையுடையவர்கள்திரும்
பவுஞ்சன்மதுக்கத்தையடைகிறதில்லை அவர்கள்பெரிதானபுத்தியுள்ளவர்க
ளென்றும் அறியத்தக்கதையறிந்தவர்களென்றும் சீவன்முத்தர்களென்று

ஞ்சொல்லப்படுவார்கள் [ஆகையால்-தத்துவஞானத்தினுல்சென்னமுவளைகளி
ல்சத்திவருபட்டிருக்கிற வாசவினையினுலேயே தரிக்கபபட்டிருக்கிறசரீரத்
தையுடைத்தாயிருத்தலே சீவன்முத்தர்களுக் கிலட்சணமென்று சித்தித்த
து] (அ-கை) சீவன்முத்தரிலக்கணங்கூறி இராமன் சீவன்முத்தனுனநெ
றியை வான்மீகர் சொல்லத்துடங்கினர் | வாராய்பரத்துவாசனே உயர்ந்
தபுத்தியையுடையவிராமர் சீவன்முத்தபதத்தையடைந்தசாதனத்தை யுன்
னுடையசனாமரண முதலிய துக்கங்கள் போகும்பொருட்டுச் சொல்லுகிறே
ன்கேள் அதனுல்சகலத்தையுமறிகுவாய் இராமர்சகலவித்தைகளையுமபபியா
சித்து ஒருபயமுமின்றிவீட்டிலவினேதங்களாலேயே சிலநாட்களைப்போ
க்கியபின்புமனதில் ஒருக்கால்தீர்த்தங்கள்புண்ணியாச்சிரமங்களிவைகளை
ப்பார்க்கவேண்டுமென்றுமிகவுமிச்சையுண்டாகி தாதுக்கள்போன்ற நகங்
களோடுகூடியபிதாவினதுபாதபத்மங்களை மலர்ந்தகமலங்களையடைந்த
அன்னப்பட்சிபோல்வடைந்துநமஸ்கரித்து வாரீர்நாதனுன ஐயாவே தீர்
த்தங்களையுந்தேவாலயங்களையும் வனங்களையும்ரிஷிகளுடைய ஆச்சிரம
ங்களையும்பார்க்க வேண்டுமென்று மிகவுமென்மனதிச்சிக்கின்றது [நாத
னே என்றதுதனக்குமிசவுஞ்சுதந்தரமின்மையைத்தெரிவித்ததெனவறிக]
உம்மிடத்துயாசித்த அருத்தத்தைபபெற்றுச்சந்தோஷமடையாதபுருஷனு
லகத்திலில்லையாதலால் முந்தினதான இந்தப்பிரார்த்தனையைப்பலித்தோ
டுகூடினதாகச் செய்யவேண்டுமென்று இராமர்சொல்ல தசரதர்வசிஷ்ட
ரோடாலோசித்து இராமருக்கு உத்தரவுகொடுத்தார் பின்புசுபதினத்திலி
ராமர் தம்பிகள் சிலவிராசபுத்திரர்கள் சதுரங்கசேனைகள் சாஸ்திரந்தெ
ரிந்தசில பிராமணுளிவர்களோடுகூடிக்கொண்டுதீர்த்தயாத்திரைக்காகத்தம
தில்லத்தில்நின்றும்நீங்கி ஸ்நானம் தானம் தபசு தியானமிவைகளைச்செய்
துகொண்டு தன்தேயமுதல்வரிசையாக கோசலதேசங்கள் புண்ணிய நதி
கள் வனங்கள் தேவாலயங்கள் ரிஷியாச்சிரமங்கள் பாலைநிலங்கள் சமு
த்திரக்கரைகள் மலைச்சார்புகளிவையெல்லாம் பார்த்துக்கொண்டுசஞ்சரித்
தார்கங்கை யமுனை சரஸ்வதி கிருஷ்ட்வினை வேணி பிரயாகை கயை காசி
இன்னமனேக தீர்த்தங்களில் ஸ்நானமுதலியகிரியையை அன்புடன்செய்
துகொண்டு விஷ்ட்ணுத்தலம் (சுளச) சிவஸ்தலம் (சுளச) இவைகளைத்தெ
ரிசனஞ் செய்துகொண்டு விந்தியம் மந்தரம் முதலானபர்வதங்களிலிருக்
கிற இராசரிஷிகள் பிரமரிஷிகள் இன்னமனேகம்பெரியோர்களுடைய ஆ
ச்சிரமங்களையெல்லாம் பார்த்துக்கொண்டு சஞ்சரித்து . தேவர்கள் கின்
னரர்கள் மானுடர்களிவர்களாற் பூசிக்கப்பட்டிருக்கிற இராமர் தன்பட்ட



ணத்தைத் திக்குகளிற்பரமசிவன்விளையாடல்செய்து கைலாயத்தையடைந்
தாற்போலவடைந்தார். மூன்றாவதுசருக்கமுற்றிற்று.

## நான்காவதுசருக்கம்.

இச்சருக்கத்திலிராமர் தீர்த்தயாத்திரைசெய்துவந்துதமதில்லத்தில்மித்
திரரோடுசந்தோஷித்திருக்கின்றதும் வேட்டையாடுதல்முதலியவிவகாரமு
ஞ்சொலலபபடுகின்றன.

வான்மீகிசொல்லுகிருர் இராமர்பட்டணத்திலிருக்கிற செனங்களுடை
யபுட்பாஞ்சலிக்கூட்டங்களாற் சூழப்பட்டவராகி இந்திரகுமாரனுகியசய
ந்தன் திக்குகளில்விளையாடிச் சொர்க்கத்தையடைந்தாற்போலத்தன்வீட்
டையடைந்தார். [வேதாந்தசாஸ்திரத்தில் தீர்த்தயாத்திரையைச் சொல்வத
ற்கென்னசம்மந்தம் இராமர்சரித்திரமாசையால் சொன்னதெனில்ப்போ
து இராமர்பிறந்ததுமுதலாகச் சொல்லவேண்டும் அதன்றியும் பூர்வரா
மாயணம் வீணுகப்போய்விடுமெனில் கர்மகாண்டத்திலந்தந்தவருணத்தி
ற்குரிய ஏக்கியமுதலிய கர்மங்களாலுண்டாயிருக்கின்ற சித்தசுத்தியானது
பிரமவித்தையையறிதற் குபயோகமாகுதென்று சொல்லியிருக்கின்றது இ
ராமருக்குவயதும் வித்தையும் போதாமையினுலும் ஏக்கியாதிகர்மங்களை
ச்செய்வதற்குச் சமர்த்தரல்லாததினுலும் அவர் தீர்த்தயாத்திரைசெய்தா
லும் யாகாதிகளுக்கு வருகிறபலன்வந்துசித்த சுத்தியுண்டாகுது அதனு
லபிரமவித்தையையறிய அதிகாரமுஞ்சித்திக்குதென்று தீர்த்தயாத்திரையை
ச்சொன்னது இப்படியே (தீர்த்தரூபங்களாகிய ஏக்கியங்களென்றுலுண்
டுபண்ணபபட்டிருக்கின்றதுகளென்று) மிருதியிற் சொல்லியிருக்கின்றன
ஆகையால்சகலவருணங்களாலும் மூர்த்தி தலம் தீர்த்தங்களின்சேவை எளி
தாகச்செய்யலாமென்பதும் இதனுல்சித்தசுத்தியுண்டாகிபபிரமவித்தையை
யறிவதினுல் மோட்சமடையத்தக்கதென்பதுங்கருத்து] அதன்பின்பு இரா
மர்பிதாவையும் வசிஷ்டரையும் தாய்மார்களையும் பந்துக்களையும் பிராம
ணர்களையும்நமஸ்கரித்துத்தனக்குள்ளடங்காதசந்தோஷத்தையடைந்தார்
அன்றுமுதலநதநதசேசாசாரங்களைச் சொவலிககொண்டு வீட்டிற்சுகமா
கவிருந்தார் (அ-கை) தினச்சரிதையைச்சொல்லுகிருர் | இராமர்நித்திய
ங்காலமே எழுந்திருந்து சாஸ்திரப்படிக்குச் சந்தியாவந்தனஞ் செய்துசு
பையிலிருக்கின்றதசரதரை நமஸ்கரித்து வசிஷ்டாதிகளோடு கூடவிருந்

து விசித்திரமாயும் ஞானமார்க்கமாயுமிருக்கிற கதைகளைக்கேட்டபின்புதி
னத்தினதுநாலாஞ்சாமத்தில் பிதாவினாலனுமதிபண்ணப்பட்டவராய் மிகு
ந்தசேனைகளோடுகூடிக் கொண்டுவனத்திற்சென்று பன்றிகள் எருமைக்க
டாக்கள்முதலிய அனேகமிருகங்களாற்சூழப்பட்டவிடத்தில்வேட்டையாடி
னார் [வேதாந்தசாஸ்திரத்தில்வேட்டையாடுவதைச்சொல்வானேனெனிலிரா
மருடையதினச்சரிதையாகையாலரசர்கட்குக்குடிகள்செய்கிறபயிர்களைப் ப
ன்றிகள்முதலியமிருகங்கள்சேதம்பண்ணாமல்காப்பாற்றுகிறதுக்ஷத்திரியதரு
மமாகையால் வேட்டையாடினதைச்சொன்னது அன்றியும் வேதாந்தசிரவ
ணத்திலிச்சையிருக்கும்போது வேட்டையாடுதல்முதலியவை ஆத்மஞானத்
திற்குப்பிரதிபந்தமாகையால் அததுகளைப்பார்த் தனுபவித்தததுகளைக்கெ
ட்டதுகளென்றெண்ணினால்விரோதமின்றிவேதாந்தசிரவணமுதலியஉபா
யங்கள் உறுதியடையுமென்பதைத்தெரிவிப்பதற்காகச்சொல்லியதென்பது
கருத்து] அதன்பின்பு இல்லத்தில்வந்துஸ்நானமுதலியகிரமத்தைச்செய்து
மித்திரர்கள் பந்துக்களிவர்களோடுபோசனஞ்செய்துசினேகிதர்களோடுகூ
ட இரவைப்போக்கினார் இவ்விதமானதின நடத்தையைச் செய்துகொண்டு
வீட்டிலிருந்து அரசர்கட்குயோக்கியமானவிவகாரத்தினால் மனோக்கியமாயு
ம்நல்லோர்களுடையமனதில் நிலவுபோலச் சந்தோஷத்தை யுண்டுபண்ணிக்
கொண்டிருக்கின்றசரிதையினாற்றினங்களைப்போக்கினார்.

நான்காவதுசருக்கமுற்றிற்று.

# ஐந்தாவதுசருக்கம்

இச்சருக்கத்தில் இராமர்தேகத்தில்வைராக்கியத்தினாலுண்டான இளை
ப்புமுதலானதும் அரசனுக்கதைவிசாரிக்கவேண்டுமென்கிறவிச்சையும் வ
சிஷ்டர்தசரதர்க்குச்சமாதானஞ்சொல்வதுஞ்சொல்லப்படுகின்றன

(அ-கை) இப்படியிராமர்சித்தசுத்திவரும்படியான உபாயங்களை
அனுஷ்டானஞ்செய்தாரென்றுசொல்லி அதற்குப்பலமானவைராக்கியமுதலி
யசாதனசம்பத்தைச்சொல்லவேண்டுமென்று ஸ்ரீவான்மீகர் ஏத்தனஞ்செ
ய்கின்றார்| அதன்பின்பு இராமருக்குப் பதினைந்தேமுக்கால் வருஷமாகும்
போது இலட்சுமணசத்துருக்கனருமிராமனையனுசரித்திருக்கும்போதுபர
தர்பாட்டன்வீட்டிலிருக்குங்காலத்தில் தசரதர்புத்திரர்களுக்குவிவாகஞ்செ



ய்வதற்காகத்தினந்தோறுமந்திரிகளோடாலோசனை செய்துகொண்டிருக்
கும்போது இராமர்நாடோறுஞ் சரற்காலத்திலோடையானதுகுறைவைய
டைகின்றதுபோல இளைப்பையடைந்தார் விசாலமானகண்களையுடைய
அவர்முகமானது வண்டுகளோடுகூடிய மலர்ந்தவெண்டாமரைப்பூப்போ
லவெளுப்பையடைந்தது பின்பு ஓர்கரத்தாலகன்னத்தைத்தாங்கிக்கொண்
டுபத்மாசனமாகவிருந்து ஆலோசனையையே செய்துகொண்டோர்காரியமு
ஞ்செய்யாமலும்சித்தையுள்ளவராயும் துக்கத்தோடுகூடியும் மிகவும்வை
ராக்கியமுள்ளவராயும் சித்திரப்பிரதமைக்குச் சரியாயுமிருக்கின்றவிராமர்
ஒருவரோடொன்றும் பேசாமல்மௌனமாகவிருந்தார் மிகவும்வாடியிருக்
கின்றபத்மம்போல்முகமுள்ள விராமர்பரிசனங்களாலடிக்கடி வருந்திப்பிரா
ர்த்தித்தபின்பு அகத்தியமானதினநடத்தைகளை நடத்தினார் இக்குணங்களோடு
கூடியவிராமனைத்தம்பிகள் பார்த்து அவர்களும் அத்திசையையேயடைந்
தார்கள் அப்படியக்குமாரர்கள் துன்பத்தையுடையவர்களாயு மிளைத்துமிரு
க்கும்போது தசரதர்தனதுஸ்ரீயோடுகூடமிகவும் விதனத்தை யடைந்து
வாராய்புத்திரா இப்படிப்பட்ட அதிகமானசிந்தையுனக்கென்ன த்தினாலென்
றுமடியின்மீதெடுத்துவைத்துக் கொண்டுகேட்கஐயாவெனக்கொருதுக்க
முமில்லையென்றுமௌனமாகவிருந்தார் [தன் துன்பத்தையரசனுக்குயா
தினாற் சொல்லவில்லையெனில் இத்துன்பம் அவராலபரிகரிக்கத் தக்கத
ல்லவென்னுங் கருத்தினாலன்றிப பொய்ம்மையல்ல வென்பதுகருத்து ]
பின்புதசரதர் வசிஷ்டரைப்பார்த்து இராமர்யாதினால் துன்பமடைந்திருக்
கிறாரென்றுகேட்க வசிஷ்டர்தியானஞ்செய்துபார்த்து அரசனே இதிலோ
ர்காரணமிருக்கின்றது நீர் துன்பமடையவேண்டாம் உலகத்திலபிருதுவிமுத
லான மகாபூதங்கள் அற்பகாரணத்தைப்பற்றி உற்பத்திநாசங்களையடையா
ததுபோலப்பெரியோர்களற்பகாரணத்தைப்பற்றிஅதிகமானகோபம் துக்கம்ச
ந்தோஷமிவைகளையடைகிறதில்லை [ஆகையாலிராமருக்குண்டாயிருக்கிற
இத்துன்பத்தினாற்பெரிதானபலமுண்டாகுமென்பதுகருத்து.]

ஐந்தாவதுசருக்கமுற்றிற்று.



# ஆருவது சருக்கம்

இச்சருக்கத்தில் விசுவாமித்திரர்வருகையுமவரைத் தசரதர்பூசைசெய்வதுமவர்கேட்டகாரியத்தைச்சந்தோஷத்தினுற் கொடுக்கிறேமென்கிறபிரதிக்கினையஞ்சொல்லப்படுகின்றன.

வான்மீகி சொல்லுகிறார். முனிநாதராகியவசிஷ்டர் சாமானியமாகச் சொல்லும்போது அரசன்விசேஷார்த்தத்தில் சந்தேகப்பட்டுத்துன்பத்துடன்சிறிதுகாலம்மௌனமாகவிருக்கும்போது விசுவாமித்திரர்வந்துவாசற்காவலரைப்பார்த்து விசுவாமித்திரர் வந்திருக்கிறாரென்று அரசனிடத்திற்சீக்கிரமாகத்தெரிவிக்கவேண்டுமென்று சொல்ல அவர்களுந்தாமதஞ்செய்தால்சபிப்பரென்றவச்சத்தினுல் சீக்கிரமாயரசனது சபையையடைந்து விசுவாமித்திரரிஷிவந்திருக்கிறாரென்றுசபைக்குவெளியிலிருக்கிறதங்கள் எசமானனுடன்சொன்னார்கள் அவ்வெசமானன் அநேகமரசர்களினுற் சூழப்பட்டதசரதனைச்சீக்கிரமாயடைந்து வாரீர்தேவரோமகாபுருஷராயிருக்கிறவிசுவாமித்திரர்வந்திருக்கிறாரென்றுமிகவும்வணங்கின வசனத்தினுற்சொல்லும்போது அரசனவ்வசனத்தைக்கேட்டுமந்திரிகளோடுகூடசிம்மாசனத்திருந்தெழுந்துவசிஷ்டர்வாமதேவர்முதலானவர்களோடுகூடச்சீக்கிரமாய்க்கால்நடையாய்வந்து எதோ ஒருகாரணத்தினுற்பூமியையடைந்திருக்கிற சூரியனைப்போலிருக்கிற விசுவாமித்திரமுனியைத்தசரதர் தூரத்திலேயேபார்த்துவணங்கினசரீரத்தையுடையவராய்க்கிரீடத்திலிருந்து நழுவியிருக்கிறஇரத்தினங்களினுற் சூழப்பட்ட பூமியையுடையதாயிருக்கும்படி நமஸ்கரித்தார் அப்போவிசுவாமித்திரமுனியுமவ்வரசனுக்குச்சூரியனிந்திரனுக்காசீர்வதித்தல்போலமதுரமாயுங்கெம்பீரமாயுமிருக்கிறவசனத்தினுலாசீர்வாதஞ்செய்தார்பின்புவசிஷ்டர்முதலியோர்களுமாதரவோடுகூட சுகமாகவந்தீராவென்றுகேட்கிறதுமுதலிய உபசாரங்களால்விசுவாமித்திரரைத்துதிசெய்தார்கள் தசரதர்சொல்லுகிறார் வாரீர்மகாரிஷியே நினையாமலிருக்கும்போதுதானேவந்திருக்கிற உமது அழகான தரிசனத்தினுல் சூரியனுற்றாமரைப்புஷ்பம்போல்விகசித்தலையடைந்தோம் காரணம் குறைவு நாசமிதுகளின்றியிருக்கின்றபிரமானந்தசுகத்தை உமதுதரிசனத்தினுல்நானடைந்தேன் உமதுவரவுக்குப்பாத்திரமாயிருக்கின்ற நாங்களிப்போதருமத்தினுல் கிர்தார்த்தாளானபேர்கட்குள் முந்தினவர்களாய்நிச்சயமாகவானேமென்று தசரதர்முதலியவரசர்களுமிரிஷிகளுமிப்படிவசனித்துச் சபைக்குவந்து ஆசனங்களிலிருந்தார்கள்பின்பு சந்தோஷத்தையடைந்தமுகமுடையதசரதர்தபோலட்சுமியினுற்சூழப்பட்டிருக்கின்ற அம்மகாரிஷியைப்பார்த்து ப்பயமடைந்



து தானேவிதிப்படி அர்க்கியமுதலிய பூசையைச்செய்து பிரதக்ஷணஞ்செய்கின்ற அரசனைப்பார்த்துச் சந்தோஷத்தையடைந்தமுகமுடைய அம்மகாரிஷியுந்துதித்துக்குறைவில்லாமல்சுகமாகவிருக்கின்றீராவென்றுகேட்டார் அவ்வரசனும்பின்னும்அம்முனிவருக்குச்சகல உபசாரங்களையுஞ்செய்து அஞ்சலிபண்ணிக்கொண்டுசொல்லுகிறார் நீர்வந்தசந்தோஷமானது மனுஷனுக்கு அமிர்தமகப்பட்டாற்போலவும் பயிர்செய்வோனுக்குச்சமயமில்லாதகாலத்தில் மழைபெய்தாற்போலவுங்கண்தெரியாதவனுக்குக்கண்தெரிந்தாற்போலவும் பிள்ளையில்லாதவனுக்கிஷ்டமானமனைவியினிடத்தில்பிள்ளையுண்டானதுபோலவும் தரித்திரனுக்குச்சொப்பனத்திற்கண்ட பொருள்கிடைத்ததுபோலவும் வெகுநாளாய்வேண்டப்பட்ட மந்திரசித்திகிடைத்ததுபோலவும் தூரதேசத்திலிருந்துவேண்டியபனுவின் வந்ததுபோலவும் போனபொருள்கிடைத்ததுபோலவும் ஆகாசசஞ்சாரத்தினுலுண்டாகிறசந்தோஷம்போலவுமிறந்தவன்திரும்பிவந்ததினுலுண்டானசந்தோஷம்போலவுமிருக்கின்றது உண்மையாகச்சொல்லுகிறேன் பிரமலோகத்தில்வசிக்கின்றதுயாருக்குத்தான்மகிழ்ச்சியைக்கொடாது அதுபோல நீர்வந்ததும்யாருக்குத்தான்மகிழ்ச்சியைக்கொடாதுமிகவுந்தருமமுள்ளநீர் எனக்குப்பாத்திரமாகவந்திருக்கிறதினுல் உமக்கெதுமிகவுமிஷ்டம்உமக்கு நானென்னசெய்யவேண்டும் கங்காசலஸ்நானத்தினுற்குளிர்ச்சியுண்டாவதுபோல உமது தரிசனத்தால்மிகவுமுள்ளேகுளிர்ச்சியையுடையவனுகவானேன் இச்சைபயம்கோபமிராகம் உரோகமிவைகளொன்றுமின்றியிருக்கின்றநீரென்னிடத்திற்குவந்ததுமிகவுமாச்சரியமாகவிருக்கின்றது [இச்சைமுதலானகுணங்களன்னியானவரை அனுசரிக்கச்செய்யும் அதுமக்கில்லையென்பதுகருத்து] அறியவேண்டுவதறிந்தோர்க்கெல்லாமுந்தன்மையானவரே சுபக்ஷேத்திரத்தையடைந்தவனுகவும் பாவமில்லாதவனுகவுஞ்சந்திரமண்டலத்தில் முழுகினவனுகவும் என்னையறிகிறேன் [தேவர்கள்ரிஷிகளிருக்கின்றவிடமே சுபக்ஷேத்திரமாகுது இவ்விடத்தில் மகாரிஷியினுடையசன்னிதானத்தினு லிதக்கிரகமுஞ்சுபக்ஷேத்திரமென்பதுகருத்து] பிரத்தியட்சமாகப் பிரமதேவரே வந்ததுபோலிருக்கின்ற உமதுவரவினுல்மிகவும்பரிசுத்தனுகவு மனுக்கிரகம்பெற்றவனுகவுமாகிறேன் எனதுசன்மமிப்போ பிரயோசனத் தோடுகூடினது எனதுசீவனநன்முனசீவனமாயிற்று சந்திரனைக்கண்ட சமுத்திரங்களைக்குள்ளடங்காததுபோல உம்மைத்தரிசித்துப்பூசித்துநமஸ்கரித்திருக்கிறநான் என்சரீரத்திலடங்கவில்லை எப்போதும் என்னுலபூசிக்கத்தக்கவராதலால் எதுசெய்யவேண்டுமோ எந்தஅருத்தத்துக்காகவந்தீரோ அதைநான்

செய்துகொடுத்ததாகவே எண்ணும் உமக்குக்கொடுக்கத்தகாதபொருள் எ
ன்னிடத்தில்யாதொன்றுமில்லையாகையாலுமதுகாரியத்தில் ஆலோசனை
செய்யவேண்டாம் எனக்கு நீர்முக்கியமானதெய்வமாதலாலுமது சகலகாரி
யமுநான்தருமமாகவே செய்கிறேனென்றரசன்சொல்ல ரிஷியுஞ்செவிக்கு
ச்சுகமாயுமதிகமதுரமாயுமிருக்கிற வசனத்தைக்கேட்டுமிகவுஞ்சந்தோஷம
டைந்தார். ஆறுவதுசருக்கமுற்றிற்று.

## ஏழாவதுசருக்கம்

இச்சருக்கத்தில்ரிஷியரசனைத்துதித்துத்தான்செய்யும்யாகத்திற்குவிக்கி
னஞ்செய்கின்ற அரக்கரைக்கொல்வதின்பொருட்டிராமனையாசித்தாரென்
றுசொல்லப்படுகின்றது

வான்மீகிசொல்லுகிறார் அதிகதேசசையுடையவிசுவாமித்திரர் அந்தத்தசர
தர்வசனத்தைக்கேட்டுச்சரீரம் புளகாங்கித்துச்சொல்லுகிறார் வாரீரிராசசி
ரேஷ்டரேபெரிதானவம்சத்திற்பிறந்ததனாலும் வசிஷ்டர்வசத்திலிருப்பதினா
லும்பூமியிலுமக்குமாத்திரமேதகுதியாயிருக்கிறவிவ்வசனத்தைச்சொன்னீர்
ஆதலாலென்மனதிலிருக்கிற காரியத்தைச்செய்வதற்குநிச்சயஞ்செய்யுமக்கா
ரியமென்னவெனில். சித்தியடைவதற்காகத் தேவர்களைக்குறித்து எக்கியஞ்
செய்கிறேனதைக்கோரமான இராட்சசாள் மாமிசத்தினாலுமிரத்தத்தினாலு
மத்தயாக பூமியைக்கெடுக்கிறார்களாகையால் அந்தத்தேசம்விட்டிங்கேவந்
தேன். சங்கை நீர்சாபத்தினாலேயே அவர்களையேன்நிராகரிக்கவில்லையெ
னில் | அந்த எக்கியம் கோபமுஞ்சாபமுமின்றி நிறைவேற்ற வேண்டியதா
ல் கோபஞ்செய்வது எனக்குச்சம்மதியில்லை ஆகையாலந்த எக்கியத்தின்
மகாபலத்தை உமதுசாதகத்தினால் விக்கினமின்றியடையவேண்டும் துன்
பமடைந்துவந்திருக்கிற என்னைநீரிரட்சிக்கவேண்டும் யாசகாள்வேண்டி
ய அநந்தங்கைகூடாமற் போவதுகொடையாளனுக்கவமானம் சிமானுயு
ம்மதத்தபுலியின்பெலமுள்ளவனுயுமிந்திரனுக்குச் சமானவீரியனுயும் அ
க்கருக்குக்காலனுயும்சத்தியமுள்ளவனுயும்சிலுப்பாகுடுமியுள்ளவனுயும் கு
ரனுபும் மூத்தவனுயும் உமக்குப்புத்திரனுயுமிருக்கிற ஸ்ரீராமனை எனக்கு
க்கொடுக்கவேண்டும். சங்கை அஸ்திராபியாசமில்லாதவனுயும்பாலகனுயுமி
ருக்கிறராமனெப்படிவல்லவனெனில் | இவ்விராமனென்னுலுந்தனதுதிவ்
வியபராக்கிரமத்தினாலும் எக்கியத்திற்குவிக்கினஞ்செய்கிறஅரக்கரைக்கொல்



லதில்வல்லவன்நாசமில்லாமலும் பலவிதமாயுமிருக்கிற அஸ்திரப்பிரபாவ
கீர்த்தியை என்னிடத்திலிருந்தவிராமனடையப்போகின்றமையால் மூன்றுலோ
கத்தினாலும் பூசிக்கத்தக்கவனாகப்போகிறான் கோபித்திருக்கிறசிங்கத்தின்முன்
மான்கள்நிற்காததுபோல் இராட்சசாளும் யுத்தத்திலிராமன்முன்னிற்கமா
ட்டார்கள்சிங்கத்தைத்தவிரமற்றொன்றுமதத்திருக்கிறயானைகளோடமர்செ
ய்யாததுபோலவிராமனைத்தவிரமற்றொருவன் இராட்சசரோடமர்செய்வ
தற்குவல்லவனல்லன் அதேதினாலெனில் கோபித்திருக்கிற எமனைப்போல
வும்கரதூஷிணாதிகளுக்குச்சேவகானாயும் அமரில்காளகூடவிஷத்துக்குச்சரி
யாயுமிருக்கிற இராட்சசாள் வலியினால்மிகவுங்கர்வத்தையடைந்தபேர்கள்
.சங்கை. அயபோதிராமனாற்றனெப்படிகொல்லலாமெனில்மேகத்தினது ஓ
யாதமழையைப புழுதிகள்சகிக்காததுபோல அரக்கருமிராமபாணங்களைச்
சகிக்கார்கள் [தூளிகண்ணைமறைத்தற்குவல்லதாயிருந்தாலும் மழையை
க்கெடுத்தற்குவல்லதாகாதென்பதுகருத்து] சங்கை. அப்படியாயினும்புத்தி
ரனைப்பிரிதாகைவிடலாகாதெனில | இவ்வுலகில்பெரியோர்கட்குக்கொடுக்க
த்தகாதவஸ்துவில்லாமையால் என்குமாரனென்று நீரிச்சையடையவேண்
டாம் [இப்படியுண்டோவெனில்சிபிச்சக்கரவர்த்திதன் சரீரத்தையும்ததீசித
ன்முதுகெலும்பையும் அளர்க்கன்தன்கண்ணையுமிவைமுதலிய வைகளைக்
கொடுத்தாரென்பதுகருத்து] (அ-கை) இக்காரியத்திலபாயம்வருமென்றுசு
ங்கிக்கத்தக்கதல்ல விசயமேவுண்டாகுமென்று சொல்லுகிறார் | அவ்வரக்க
ரையடிபட்டவர்களாகஞானத்தினாலறிகிறேன் நீரும் என்வசனத்தினால்நிச்
சயமாக அறியும் எங்களைப்போற்றெரிந்தவர்கள் சந்தேகமானகாரியத்திற்பி
ரவர்த்திக்கிறதில்லை இராமனைமகாத்மாவென்று நானும்வசிஷ்டரும்மற்ற
தீர்க்கதரிசிகளுமறிவார்கள் தருமத்தையும் மகத்துவத்தையுங் கீர்த்தியையு
மிரட்சிக்கவேண்டுமென்றுமனதிலிருந்துதேயாகிலுமக்குமிகவும் பிரியமான
புத்திரனையெனக்குக்கொடுக்கவேண்டுமவனாலவ்வரக்கர் கொல்லப்படுவார்
கள் அந்த எக்கியம்பத்து நாளையிலமுடியத்தக்கது இவ்வருத்தத்திற்கு உம
துமந்திரிகளும்வசிஷ்டர் முதலியோர்களுஞ்சம்மதிக்கத்தக்கது ஆகையாலி
ராமனையனுப்பவேண்டும்என்யாகத்திற்குயோக்கியமானவசந்தாதிகாலமதி
க்கிரமியாமல்செய்விக்கிற உமக்குச்சுகமுண்டாகக்கடவது மனதிற்றுன்பம
டையவேண்டாம் காலத்திற்செய்தகாரிய மணுவாயிருக்கினுமதுபெரிய உ
பகாரமாகுது அகாலத்திற்செய்தமகத்தான உபகாரமுமவீணாகுது [உபகா
ரமாவதுதானிச்சிக்குங்காரியத்தைச்சாதித்தற்குச்சகாயஞ் செய்கிறது] தரு
மார்த்தங்களோடுகூடியவசனத்தைச்சொல்லித்தருமசொரூபானவிசுவாமி

திர்மௌனமாகவிருந்தார் மகானுபாவரானதசரதர் விசுவாமித்திரமுனீ
ஸ்வரர்சொன்னவசனத்தைக்கேட்டு அதற்குத்தகுந்தயுத்தியோடுகூடினவச
னத்தைச்சொல்வதற்காக ஆலோசித்துச்சுமமாவிருந்தார்·சங்கை·ஏதையே
னுஞ்சொல்லத்தக்கதைச் சொல்லாமேயுக்தியைச்சிந்திக்கவேண்டுவதென்
னெனில | உயிர்கள்மனதிற்குவேண்டியகாரியத்தையடையாவிடில்சந்தோ
ஷமடைகிறதில்லை புத்திமானேயெனில் வேண்டியகாரியஞ்சித்தித்தபோதி
லும்யுக்தியோடுகூடின வசனத்தைச்சொல்லாவிடில்சந் தோஷமடையமா
ட்டானென்றுலோசித்தார்.

ஏழாவதுசருக்கமுற்றிற்று.

# எட்டாவது சருக்கம்

இச்சருக்கத்தில்தசரதரிராமனிடத்திலிருக்கிறபிரியத்தினாலவன்யுத்தத்திற்
குயோக்கியனல்லனென்றுசொல்லுதலுமிராவணாதிகள் பெலத்தையறிந்து
துன்பப்படுதலுஞ்சொல்லப்படுகின்றன.

வான்மீகிசொல்லுகிறார்விசுவாமித்திரர்வசனத்தைத்தசரதர்கேட்டுமு
குர்த்தகாலமசையாமலிருந்தாலோசித்துத்தயின்னியதோடுசொல்லுகி
றார் இராமன்பதினைந்தேமுக்கால்வருஷம் வயதுள்ளவனாயிருப்பதாலரக்க
ரோடுத்தஞ்செய்வதற்குயோக்கியனல்லன்·சங்கை· ஆனால்நான்வந்தவருத்த
ம்வீணேயெனில் பூரணமான அக்ஷௌணிக்கிநாதனானநான் அரக்கரோடுத்
தஞ்செய்கிறேன்பாலகனாயிருக்கிற இராமன்சேனைகளின்பெலாபெலத்தை
யறியமாட்டான் அதேனெனில் பட்டணத்துப்பநதியவிளையாட்டின்யுத்தத்
தைத்தவிரவேறேயுத்தபூமியைப்பார்த்தவனல்லன்பட்டணத்திற்குச்சமீபத்தி
லிருக்கிறவனங்களிலும்பூந்தோட்டங்களிலிருக்கிறகொடிவீடுகளிலும் எப்
போதும்வாடிக்கையுள்ளவன்மனோவிசாரத்தினால் பீடிக்கப்பட்டிருக்கிறவ
னை அரக்கரோடுயுத்தஞ்செய்வதற்கு எப்படிகொடுப்பேன் சீவித்திருக்கவே
ண்டுமென்கிறநான் ஓர்முகூர்த்தகாலமாயினுமிராமனைவிட்டுப்பிரிந்திருந்
தாற்சீவிக்கமாட்டேனாகையாலவனையழைத்துப்போகக்கூடாது (அ-கை)
அழைத்துப்போவீராகிலரக்கர்கள் கொல்லப்படுகிறதில்லை பின்னையோ
வெனில்குமாரர்களோடுகூடியிருக்கிற எனக்குத்தானும்மால் மரணம்வரு
மென்றுசொல்லுகிறார் | ஒன்பதினாயிரம்வருஷம் புத்திரன்வேண்டுமென்று
இச்சையுள்ளவெனக்குப்புத்திரகாமேஷ்டிமுதலியயாகங்களைச்செய்துசிரம



ப்பட்டு இந்தநான்குபுத்திரருற்பத்தியானார்களவர்களிலிராமனை நீங்கிமற்ற
மூவர்களுஞ்சீவித்திருக்கமாட்டார்கள் அப்படிப்பட்டவனையே நீரழைத்துப்
போவீராகில்நான்குமாரர்களையும்விட்டுப்பிரிந்திருக்கிற என்னையும்ம
ரித்தவனுக்கவறியும் [ஆகையால் எக்கியதருமத்தைக்காட்டிலும் மகத்தான
அதன்மமே உமக்குவருமென்பதுகருத்து] அவனையழைத்துப் போகாமற்
போவனுகில் என்காரியமெப்படிசித்திக்குமெனில் சதுரங்கசேனைகளோடு
கூடின என்னையழைத்துப்போமப்படி என்னையழைத்துப்போனபோ
திலுங்கபடயுத்தஞ்செய்கிற அரக்கர்களைநான்றான் எப்படிக்கொல்லத்தகு
ம்மகாபராக்கிரமமுள்ள இராவணனென்னும் ஓரரக்கனிருக்கிறானென்று
கேட்டிருக்கிறேன் துஷ்டபுத்தியுள்ள அவனுமது எக்கியத்தைக்கெடுப்பனா
கிலவனோடுயுத்தஞ்செய்வதற்கு எங்களுக்குவலியில்லை அதேனெனில் சில
காலத்தில்சிலதேசத்தில்சிலபிராணிகளிடத்திலதிகபராக்கிரமமுஞ் சம்பத்துமு
ண்டாகின்றன சிலகாலத்தில் நசிக்கின்றன ஆகையாலிக்காலத்தில்நாங்களி
ராவணன்முதலியசத்துருக்கள்முன்னிற்பதற்குச்சமர்த்தரானல்லஇப்படியீஸ்
வரனால்நியமிக்கப்பட்டிருக்கின்றது ஆகையாலென்புத்திரனிடத்தில் தயவு
செய்யவேண்டும் உம்முமனோரதத்தைநிறைவேற்றச் சத்தியில்லாதனமையால
நிர்ப்பாக்கியனாயிருக்கிற எனக்குநீர்தான் முக்கியமானதெய்வம்யாதினாலுமக்
கிப்படிக் கொத்த அதைரியமெனில் தேவர்கள் தானவர்கள் கந்தர்வர்கள் யீ
க்ஷர்கள் பதகர்கள் பன்னகர்களிவர்களெல்லாருமே இராவணனோடு யுத்தஞ்
செய்வதற்குவலியின்றியிருப்பார்களானால் மனுஷியர்கள்சமர்த்தரல்ல வெ
ன்பதைக்கேட்பானேன். (அ-கை) வலியில்லையென்பதற்கு வேறொருகா
ரணத்தையுஞ்சொல்லுகிறார் | எந்தக்காரணத்தினாலிராமனும் கிழவன்போ
ற்கிழத்தனத்தையும் ஏழைத்தனத்தையு மடைந்தானோ ஆகையால்சத்துருக்
கள்வலியைக் கெடுப்பதான இது ஒருகாலம் எமனுக்குச்சரியான இலவ
ணன் சுவாகுமாரீசாளிவர்களுமதுயாகத்தைக்கெடுப்பார்களாகிலவர்களோ
டுயுத்தஞ்செய்வதற்கிராமனையனுப்பமாட்டேன் நானனுப்பாவிடில் நீர்வலி
மையாலவனையழைத்துப்போவீராகிற் போது நானும்மால்மரிக்கப்பட்ட
வனாகிறேன்மரிக்காவிடில்சரீரத்தைவைத்திருக்கிற உபாயங்காணேனிப்படி
தசரதர்மிருதுவானவசனத்தைச்சொல்லிவிசுவாமித்திரருக்கிஷ்டமான காரி
யத்தினாலுண்டானசமுசியமாகிற அலைக்கூட்டத்தில்முழுகிஆத்மசுகத்தையு
ங்காரியநிச்சயத்தையுமறியாதனமையால்மிகுந்த அலையோடுகூடினசமுத்தி
ரத்தில்முழுகிமோகத்தையடைந்தவன் போலவானார் [சமுசியமாவது அரக்
கரோடுயுத்தத்திற்கிராமனையனுப்பலாமா அனுப்பக்கூடாதா வென்பது]

ஸ்ரீ எட்டாவதுசருக்கமுற்றிற்று.

# ஒன்பதாவதுசருக்கம்.

இச்சருக்கத்தில் விசுவாமித்திரர்கோபமும் வசிஷ்டர்தசரதருக்கு அவர்தபசையுமஸ்திரங்களின் வலிமையுஞ்சொல்லிமிருதுவாகச்சமாதானப்படுத்துகிறதுஞ்சொல்லப்படுகின்றன.

வான்மீகிசொல்லுகிறார். புத்திரவாஞ்சையால்வியாகுலமானகண்களையுடைய தசரதர்வசனத்தைக்கேட்டு விசுவாமித்திரர்கோபித்துச்சொல்லுகிறார். யாவராலும் பூசிக்கத்தக்கவராகிய நீர்செய்கிறேனென்று பிரதிக்கினையைச்செய்து அதைவிடுதற்கெத்தனித்தல் சிங்கமாயிருந்தநீமானாகவேண்டுமென்றிச்சிக்கிறதுபோலவிருக்கின்றது சந்திரனுக்குஷ்டணகிரணந்தகாதது போலவிராகவவமிசத்திறகிப்பொய்தகாது அரசனே நீர்வழியின்றியிருப்பீராகில் நான்வந்தபடியேபோகிறேன் நீர்சொன்னபிரதிக்கினையைவிட்டுபந்துக்களுடனேசுகமாயிருமென்று விசுவாமித்திரர்கோபமடையும்போது மண்ணும் விண்ணும் நடுங்கிற்று அன்னியாளும்நடுங்கினார்கள் [பூமியானது ஏன்பதியானவர் அபராதப்படுகிறாரென்றோ அல்லது குற்றம் பண்ணினசனத்தைத்தரிக்கிற குற்றமுண்டாகுதென்கிற பயத்தினாலோ நடுங்கிற்றுவிண்ணிலிருக்கிறதேவர்களுமிராவணாதிகளைக்கொல்வதற்குவேறொருவனைச்சிருஷ்டிப்பாரோ அவனால்நமக்கு உபத்திரவமுண்டாகுமோவென்றுபயமடைந்தார்கள்] தைரியமும்நல்லவிரதமும்புத்தியுமுடைய வசிஷ்டர் உலகத்துக்கிஷ்டமாயிருக்கிற விசுவாமித்திரமுனி கோபித்திருக்கிறாரென்பதையறிந்துதசரதரைப்பார்த்துச்சொல்லுகிறார் இட்சுவாகுகுலத்திலுண்டாகியும்பிரத்தியட்சமாகத் தருமமுருவடைந்ததுபோலவும் தசரதரென்றுபேர்பெற்றும்மூன்றுலகத்திலும்பிரசித்தராயுமிருக்கிறநீர்சொன்னகாரியத்தைவிடுதற்குயோக்கியரல்ல சொன்னகாரியத்தைச் செய்வதானஉமதுகுலதருமத்தைநீரடைந்துதருமத்தைவிடாமலிரும்மூன்றுலகத்துக்குமீசுவரனாயிருக்கிறவிசுவாமித்திரர் வசனத்தைநிறைவேற்றவேண்டும்செய்கிறேனென்றுசொன்னதைச்செய்யாமலிருக்கின்றது உமது இஷ்டா பூர்த்தமென்றுசொல்லப்பட்டதருமங்களைக்கெடுக்குமாகையாலிராமனைப்போகச்சொல்லும் [இஷ்டமாவது யாகமுதலானதருமம் பூர்த்தமாவதுகுளம் வெட்டுகிறதுமுதலானதருமம்] மனுவமிசத்திற்பிறந்துதசரதரென்றுபேர்பெற்றிருக்கிறநீரே சொன்னவாக்கியபடிச்செய்யாமற்போவீராகில்மற்றெவன்செய்யப்போகிறான் உம்மாற்செய்யப்பட்ட விவகாரநியமங்களை அஞ்ஞானிகளும்விடுகிறதில்லை ஆகையால நீர்சொன்னதைவிடக்கூடாது அக்கினியமிர்தத்



தையிரட்சிப்பதுபோல இவ்விசுவாமித்திரராலிரட்சிக்கப்பட்டவிராமன்அஸ்திரவித்தைதெரிந்தவனாயினும்தெரியாதவனாயினுமவன்முன்னிராட்சசாள்யுத்தஞ்செய்யமாட்டார்கள். (அ. தை) சொன்ன அருத்தங்கூடுமென்பதற்காக விசுவாமித்திரரதுபிரபாவத்தைப் பிரசித்தப்படுத்துகிறார் | சரீரத்தோடுகூடினதருமமாயும்பராக்கிரமசாலிகட்குளுத்தமராயும் புத்தியிலதிகராயும் தபசுக்கெல்லாமிருப்பிடமாயுமிருக்கிற இவ்விசுவாமித்திரர் மூவுலகிலுமிருக்கிற நானாவித அஸ்திரவித்தைகளையறிந்தவர் இவரைத்தவிரமற்றொருவனுமறிந்தவனுமில்லை அறியப்போகிறவனுமில்லை தேவர்கள்ரிஷிகள் அசுரர்கள்நாகர்கள் ரக்ஷகர்கள் கெந்தர்வர்களிவர்களெல்லாருங்கூடினாலும்பிரபாவத்தினாலிவருக்குச்சரியானவர்களல்ல அதேதினாலெனில் ஒருவராலுஞ்செயிக்கக்கூடாததான அஸ்திரமானது சர்வகர்த்தாவாகிய பரமசிவனாலிவருக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றது இப்படிப்பட்ட பிரதாபமுள்ளவராகையாலிராமனையனுப்புகிறத்திலுண்டானபுத்தித்தாழ்வைவிட்டுவிடுமிவர் சமீபத்திலிருக்கும்போது சாதாரணபுருஷனுக்குக்கூடமரணம்வந்தாலுந்தேவத்துவங்கிடைக்குமாகையால் தெரியாதவன்போல நீர்தயின்னியத்தையடையவேண்டாம்.

ஒன்பதாவதுசருக்கமுற்றிற்று.

# பத்தாவதுசருக்கம்.

இச்சருக்கத்திலரசனாலேவப்பட்டஏவலாளனிராமனிடத்திற்குப்போய்அவர்நடத்தைகளையறிந்துவந்தரசனுக்குத் தெரியப்படுத்துகிறானென்றுசொல்லப்படுகின்றது.

வான்மீகிசொல்லுகிறார். முன்சொன்னபடிவசிஷ்டர்சொல்லத்தசரதர்சந்தோஷித்து ஏவலாளனைப்பார்த்து இராமனையுமிலட்சுமணனையுமழைக்கச்சொன்னார் அந்த ஏவலாளன் ஒருமுகூர்த்தத்திலிராமனைக்கண்டுவந்தரசனைப்பார்த்துச்சொல்லுகிறான் தாமரைமலரில் வண்டானதுபோலவிராமர்தன்மனையில் துன்பமுற்றவராய்க்ஷணம்வருகிறேனென்கிறார். க்ஷணந்தியானஞ்செய்கிறார் ஒருவர்சமீபத்திலிருப்பதற் கிச்சிக்கவில்லையென்று ஏவலன்சொல்ல அரசன்தனது ஏவலாளனோடுவந்திருக்குமிராமபரிசா

ரகவனைத்தெளிவித்துவரிசையாகஅவன்நடத்தைகளைச்சொல்லென்றுகேட்
கவிராமபரிசாரகன்விதனத்தோடுஞ்சொல்லுகிறான் இராமர் துயரத்தினாலி
ளைத்திருப்பதாலவரைப்பார்த்திருக்கிற நாங்களுமிளைத்திருக்கிறோமவரிளை
ப்பையுந்துயரத்தையுமடைதற்குக்கேட்கவேண்டுமோ தீர்த்தயாத்திரைசெய்
து வந்தநாள் முதல் மனதில்மிகவுந்துயருற்றிருக்கிறார் எங்கள்பிரார்த்த
னையினால்போசனமுதலியகாரியங்களை ஒருவேளை கொஞ்சஞ் செய்தும்
செய்யாமலுமிருக்கிறார். ஸ்நானம். தானம் தேவார்ச்சனை- முதலியவை
களில்விருப்பமில்லாதவராயிருக்கிறார் விளையாடுகிறகூடத்தில் உஞ்சல்வி
ளையாட்டினாற்சஞ்சரித்திருக்கிற அந்தப்புரத்து ஸ்திரிகளோடுகூடசாதகப்
ட்சியான துவருஷிதாரைகளோடுகளித்தல்போல விளையாடவில்லை சொற்க
மானது கீழேவீழ்தற்குத்தருணமாயிருக்கிறவளைச்சந்தோஷிப்படுத்தாது
போலக்கண்ணாடிபோன்ற மாணிக்கங்களாலிழைத்ததோள்வளைகளிராமனை
ச்சந்தோஷிப்படுத்தவில்லை கேளிக்கைசெய்கிற தாசிகளைப்பார்த்து ஏன்
அயரத்தைவிளைக்கிறீர்களென்று நிந்திக்கிறார் சம்பத்து ஆபத்து வீடும
னோரதமானகாரியங்களெல்லாம் பொய்தானென்றுசொல்லி ஏகாங்கியாக்
வேசும்மாயிருக்கிறார்பரியாசங்களிற்சந்தோஷியாமலும் போகங்களில்மூழ்
காமலும்தொழிற்களிலிச்சையின்றியுமிருக்கிறார்மான்பேடுகள்விருட்சத்தை
ச்சந்தோஷிப்படுத்தாததுபோல மலர்நிறைந்தகூந்தலையுடையவராயும்சி
ங்காரசேஷ்டையோடுகூடியகண்களையுடையவராயுமிருக்கிற ஸ்ரீகளிராம
ரைச் சந்தோஷிப்படுத்த வில்லைவனத்திற்சஞ்சரிக்கிற மூடனிடத்தில் வி
லைபட்டவன் அவனை நீங்கற்கிச்சித்தல்போல தனியிடம்நதிக்கரைவன மி
வைகளிலன்பையடைகிறார் வஸ்திரம் அசனம் நீருண்டல்முதலிய வைகளி
ல்மிகவும் பராமுகமாயிருப்பதால்சன்னியாசிதருமத்தையனுசரிக்கிறார் அப்
போதவரதுசெய்கைதானியாதெனில் பத்மாசனமாகவிருந்து சூன்னியமா
னமனதுடையவராய் இடதுகையில்கன்னத்தைவைத்துகேவலந்தியானஞ்
செய்கிறார் ஒன்றிலபிமானமுமரசனாயிருத்தற்கிச்சையும் சுகத்தில்விருப்பும்
துக்கத்தில்வெறுப்புமடைகிறதில்லை சாற்காலமுடிவிலிருக்கிற மரம்போல
தினந்தோறும் இளைப்பும் வெளுப்பும் வைராக்கியமுமடைகிறார் இலட்சும
ணசத்துருக்கனருமப்படியே அவருடையபிரதிபிம்பங்கள்போலவேயிருக்கி
றார்கள் விஷயங்களுமிந்திரியங்களுஞ்சேருகிறகாலங்களில்மாத்திரமனேக்கி
யமாயுமுடிவில் துன்பமாயுமிருக்கிற போகங்களில்மனதைச் செலுத்தவேண்
டாமென்று சமீபத்திலிருக்கிறவிவேகியான சினேகிதனைப்பார்த்து நியமப்
படுத்துகிறார் முத்திக்கேதுவின்றியிருக்கிற வெளிவியாபாரங்களாலாயுள்



வீணாகுதென்று அடிக்கடி அழகாயும்வெளிப்படாமலுமிருக்கிறவசனத்தினா
ற்பாடுகிறார் இத்தன்மையையுடைய விராமர்சம்ராட்டாக வேணுமென்று
துதித்துத்தன்னை யனுசரித்துப்பிழைத்திருக்கிறவனைப் பிதற்றும்பித்த
னைப்போலெண்ணி நகைக்கிறார் [சம்ராட்டாவது இராசசூயமுதலியயா
கங்களியற்றி அரசர்பலரும்வணங்கப்பூமண்டலமுற்றுமாள்பவனுக்குஞ்சுய
ம்பிரகாசமாக எதுவிளங்குகின்றதோ அதற்கும்பெயராதலாலச் சுயம்பிர
காசமேபரமாத்துமாவென்றாகுது அந்த அருத்தத்திலேயே மனதையுடை
யவராய் அந்தஅருத்தந்தனக்குத்தெரியாததினாலதையேஆலோசித்துமவுன
மாயிருக்கிறார்தனக்கிஷ்டமானதையவன் சொல்லாததினாலுமனிஷ்டமான
தைச்சொல்லுவதனாலுமதையனுதாரவுபண்ணிநகைத்தாரென்பதுகருத்து]
தனக்குவேண்டியதடைந்திருந்தாலுங்கிரகிக்கிறதில்லை ஒருவர்சொல்லுகி
றத்தைக்கேட்கிறதில்லை எதிரேயிருக்கிறத்தைப்பார்க்கிறதில்லைச்சகலவஸ்
துக்களிலுமாதரவைச்செய்கிறதில்லை இன்பமிகுதியுடையவஸ்துக்களிலாச்
சரியமடையத்தக்கதாயிருக்கயாதினாலாதரவு செய்கிறதில்லையெனில் ஆகா
சத்திற்பொய்யாய்த்தோற்றுகிற பெரியகாட்டில் தாமரை முளைத்திருந்தாற்
போலமனதுக்குவெளியிலிருக்கிறவஸ்துக்களையறிந்தே ஆச்சரியமுண்டா
கவேண்டும் ஆத்துமாவில் மனதுமித்தைமனதிலாச்சரிய முண்டாவதுமித்
தையென்கிறநிச்சயத்தினாலிவருக்குவெளிவஸ்துக்களிலாச்சரியமுண்டாகவி
ல்லை ஆகையால்மழைத்தாரைகள்பெரியகல்லைப் பிளக்காததுபோலவிரா
மர். ஸ்ரீகள்நடுவிலிருந்தாலுமவர்மனதை மன்மதபாணங்கள் பிளக்கமாட்
டாதுகள்பின்னும்ஆபத்துக்கெல்லாமிடமானதனமாவேண்டுமென்று கே
ட்டுச்சகலதனத்தையும்யாசகருக்குக்கொடுக்கிறார் இது ஆபத்தென்றுமிது
சம்பத்தென்று மெண்ணுகிறகற்பனாபிராந்தியானது மனதிலுண்டாகுதெ
ன்று பாடுகிறார்சனங்கள் ஒரிஷ்டமானபொருள் போகும்போது நான்
கெட்டுப்போனேன்நானனாதையானேனென் றழும்போதும்வைராக்கியத்
தையடைகிறதில்லையிதுவே ஆச்சரியமென்று சொல்லுகிறார்[ அன்னுவ
யவிதிரேகங்களாலிராகமுதலியன துன்பமென்று பார்க்கும்போதுமென்ப
துகருத்து] இராமரிப்படியிருப்பதனால்நாங்களுந்துக்கமடைந்திருக்கிறோ
மாதலாலிவருக்குண்டானசோகத்தைப் போக்கத்தக்கவுபாயமொன்றுந்தெ
ரியாதநாங்களென்னசெய்குவோமிக்காரியத்தில் நீரேகதி நீதிதெரிந்தவர்கள்
நியாயத்தையுபதேசஞ்செய்தவராதுமோகத்தைப்போக்கட்டுமேயெனில் | அ
ரசனீதியைச்சொல்லுகிற அரசவனைத்தானாவது அல்லது பிராமணனைத்
தானாவதுதெரியாதவனைப்போற்பரியாசஞ்செய்வதுமன்றி அவமானமுஞ்

செய்கிறார் இது இதென்றுதோற்றிக் கொண்டும் நாசத்தையடைகிறதாயு
ம்விரிவாயுமிருக்கிறவிச்சகத்தும் நானென்றுதோற்றுகின்றதும்வஸ்துவல
லபின் வினையோவஸ்துவென்றுசொல்லப்பட்டது வேறென்றுநிச்சயித்திரு
க்கிறார் போகம் ஆயுள் இராச்சியம் மித்திரன் தாய் தந்தைமுதலியவைக
ளிலுமழையில்லாதகாலத்தில்சாதகப்பட்சிபோலமிகவும்பயமடைந்திருக்கிறார்
இப்படியிருக்கிறபுத்திரனுடையசிந்தைமுதலிய கிளைகளாலவிரிந்திருக்கிற
ஆபத்தாகிறகொடியைவேரோடுபிடுங்குதற்குத்தயவுள்ளவரான நீரொத்தன
றைதச்செய்யுமிவனை உலககாரியங்களிலிருக்கும்படியாகச் செய்யத்தக்கபெ
லவானிவ்வுலகிலும்மைத்தவிரயாவரிருக்கிறார்சூரியனிருட்டைப்போக்கிப்பூ
மியில்தனது பிரகாசத்தைப் பிரயோசனத்தோடு கூடினதாகச் செய்வது
போல துக்கரூபமானவிருட்டுக்குக்காரணமானசகலமோகத்தையுமிராமரு
டையமனதிலநின்றுமப்பால்தள்ளிபவரிடத்தில்தனது உபதேசசாமர்த்திய
த்தைபபிரயோசனததோடு கூடினதாகச்செய்கின்றவனேமகாபுருஷனெனப்ப
டிபபட்டவர்நீர்தான்.

பத்தாவதுசருக்கமுற்றிற்று.

# பதினோராவதுசருக்கம்.

இச்சருக்கத்தில் விசுவாமித்திரருந்தாவினால் சபையிலழைத்து வந்தி
ருக்கிற ராமனைத் தசரதர்சமாதானப்படுத்துகிறதும் மனோவியாதிக்குக்
காரணத்தைக் கேட்கிறதுஞ்சொல்லப்படுகின்றன.

விசுவாமித்திரர்சொல்லுகிறார்- இராமர்முன்சொன்னபடியிருந்தாரே
யாகில் சமர்த்தாளான நீங்கள் தலைமையான மாவினையனுசரித்திருக்கிற
மான்கள்போல இவவிடத்திற்சீக்கிரமாக அழைத்துவாருங்கோள் இராம
ருக்குண்டான இம்மோகமானது ஆசையினாலும் ஆபத்தினாலுமுண்டான
தலலயிதுமோட்சத்துக்கேதுவானநிராசையினாலும் விவேகத்தினாலும்வரு
கின்றஞானந்தான் அவர்சீக்கிரமாக இவ்விடததிற்கு வரட்டுங்காற்றானது
பறுவதத்திலிருக்கிறமேகத்தைப்போக்குவது போலநாங்களவர்மோகத்தை
யிவ்விடத்திலேயேசீக்கிரமாகப்போக்கிவைக்கிறோம் .சங்கை. மோகத்தைப்
போக்கினதாலவருக்கென்னசித்திக்குதெனில் இம்மோகமானது யுத்தியினா
ற்போகும்போது அவருத்தமமான மோக்ஷபதத்தில் ஏங்களைப்போலிவனை
ப்பாறுதலையடைந்து அமிர்தபானம் பண்ணினவன் போலசத்தியவஸ்து



ஆநந்தம்ஞானமிவைப்பாறுதல் குளுமைபெருமன்நல்லழகு இவைகளை
யடையப்போகிறார் .சங்கை. விவகாரமவித்தையினாலுண்டாகின்றமையா
ல்குடைபோகும்போது நிழலப்பாற் போகிறாப்போல அவித்தைபோகும்
போதுவிவகாரமும்போய்விடுமது செனங்களுக்கிஷ்டமல்லவேயெனில பூசி
க்கத்தக்கவராயும் பரிபூரணமானமனதுள்ளவராயுமிருக்கிற இராமர்தன்வ
ருணத்திற்குமாச்சிரமத்திற்கும்யோக்கியமாக உலகவிவகாரங்களைப் பழுதி
ன்றிச்செய்யப்போகிறார் அவர் ஒருகுறைவின்றியிருக்கிறவராச்சுதேவிவ
காரத்தைச்செய்வானேனெனில்சீவித்திருக்கிறவனாச்கும் சகலவிவகாரங்க
ளும்விடக்கூடாததினாலவசியம்விவகாரஞ் செய்யத்தக்கதாகும்போது தன
துவிவகாரத்தைவிட்டுவேறொருவிவகாரத்தைப்பற்றுதற் கேதுவில்லாமை
யாலுமரசன்செய்வதைச்செனங்கள்செய்வதனாலுமவர்கள் செய்வதற்காகவு
ம்தன்விவகாரத்தையேநடுவில்விடாமற்செய்யப்போகிறார் அவ்விவகாரங்க
ளைச்செய்தாலவைகளிலிச்சை யடைந்து முன்போற்சுகதுக்கதிசைகளைய
டைவரோவெனில் வலுவானஞானபெலமுள்ளவராயும்பராபரத்தையறிந்
தவராயுஞ்சுகதுக்கதிசையில்லாதவராயும்ஒடும்பொன்னுஞ்சரியாய்ப்பார்க்கி
றவராயுமாகப்போகிறாரென்று முனிநாதராயிருக்கிற விசுவாமித்திரர்சொ
ல்லும்போது தசரதர்பூரணமான மனதுள்ளவராய் இராமனையழைத்து
வருவதற்காகத்திரும்பவுமனேகந்தூதர்களையனுப்பிவித்தார் பின்பிராமர்வி
சுவாமித்திரர் வந்துவசனித்திருக்குஞ் சமையத்திலபிதாவின்சமீபத்திற்குப்
போகவேண்டுமென்றுதன்வீட்டிலிருக்கிற ஆசனத்திலிருந்தும் உதயபற்
வததத்திலிருந்துசூரியன்போல எழுந்திருந்துசிலவேலைக்காரர் தம்பிகளிவ
ர்களோடுகூட இந்திரன்சொற்கம்போலிருக்கிற புண்ணியமானபிதாவினி
டத்தையடைந்துதேவர்கள் கூட்டத்தினாற்சூழப்பட்ட இந்திரன்போல
அரசர்கள்வசிஷ்டர்விசுவாமித்திரர்மந்திரிகள் முதலியகூட்டத்தினாற்சூழப்ப
ட்டிருக்கிறதசரத மகாராசாவைத்தூரத்திலேயேகண்டார் வசிஷ்டர்முதலா
னவர்களும்சுப்பிரமணியருக்குச்சமானமாயும் சத்துவகுணமுள்ளவராயுமி
ருக்கிற இராமனைத்தூரத்திலேயே கண்டார்கள் பின்பிராமர்சபையிலவந்
துபிதாவையும்வசிஷ்டர்விசுவாமித்திரரையும்பிராமணரையும்பந்துக்களை
யுமாசாரியர்களையுஞ் கிரமமாகப்பணிந்தார் பின்புதன்னைப்பணிந்தவர்க
ளைப்பார்வையினாலும்சிரசினாலும்வாக்கினாலுமங்கீகரிததுப் பிதாவினதுச
மீபத்தையடைந்தார் அவரைத்தசரதர் மடியிலிருமென்று சொல்லும்போ
துபூமியில்தனது ஏவலாளாலிடப்பட்டவஸ்திரத்திலிருந்தார்பின்புதசர
தர்சொல்லுகிறார்வாராய்விவேகத்தையடைந்தபுத்திரனேசுரேய்சுகளுக்குப்

பாத்திரமானநீ அவிவேகிபோலமெலிந்தபுத்தியினுல்சீவாத்மாவைத்துன்ப
ப்படுத்தவேண்டாம்பிதாமுதலியோர்களாலும்பிராமணுளாலும் ஆசாரியர்
களாலுஞ்சொல்லப்பட்ட தருமத்தைச்செய்கிறவனுல் புண்ணியபதமானத
டையப்படுகின்றது மோகத்தையடைந்தவனுலடையப்படுகிறதில்லை மோ
கத்திற் கிடங்கொடாதவனாயில் தூரத்திலிருக்கிற ஆபத்துங்கிட்டவருகிற
தில்லை கிட்டவந்திருக்கிற ஆபத்து நசித்துப்போமென்று சொன்னபின்பு
வசிஷ்டர்சொல்லுகிறார் வாரீரிராகவரே நீக்கக்கூடாததாயுந் துன்பத்தினு
ற்சம்பாதிக்கப்பட்டுமிருக்கிறவிடயரூபமான சத்துருக்களையுஞ்செயித்தமை
யால் நீரேசுரரிப்படியிருக்கிறநீருந் தெரியாதவர்கட்குயோக்கியமாயும் வி
ட்சேபங்களாலும் அஞ்ஞானத்தினுலுநிறைந் திருக்கிறமோகரூபமானகட
விலாத்மஞானமில்லாதவன்போலயேன்முழுகிறீரென்றபின்பு விசுவாமித்
திரர்சொல்லுகிறார் உம்முடையமனதை வீட்டைப் பெருச்சாளிகள்போலவி
அறுக்கிறமனேவியாதிகளெந்தக் காரணத்தினுலுண்டா யிருக்கின்றது ஏ
துகிடைந்தாலதீருமதுகளுடையசொரூபமெப்படிக்கொற்றது அதுகளைத்
தவணவிதங்களதைச்சொல்லும். (அ - கை) மனேவியாதிக்கு ஏதுக்கள்சக
த்திற்பிரசித்தந்தானே அதுகளைக்கேட்பானேனெனில | அயோக்கியமா
னமனேவியாதிகட்குநீர் யோக்கியரல்ல அதேனெனில ஆபத்தையடைந்த
வனுவது தரித்திரனுவது அதற்கிடமாவன் உம்மால்நீக்கவேண்டிய ஆபத்
துகளொன்றுமில்லை பின்னையோவெனில் உமது பிதாவினதுபிரபா
வத்தினுலேயேசகல ஆபத்துகளும் உமக்குச்சுதாவாகவே தள்ளப்பட்டிரு
க்கின்றதுகளாகையாலெந்த இஷ்டங்கிடைத்தாலும்மை மனேவியாதிகள்
பிடிக்கமாட்டாதுகளோ அந்தயிஷ்டத்தைச் சீக்கிரமாகச்சொல்லுஞ்சகல
இஷ்டத்தையுமடை வீரென்றுவிசுவாமித்திரரது உசிதமான அர்த்தத்தை
க்கெறபத்திலுடையவசனத்தைக் கேட்டு இராமர்வேண்டிய அர்த்தசித்தியை
அனுமானபிரமாணத்தினுலறிந்து மேககெற்சனையைக் கேட்டமயிலான
துபோலதுன்பத்தைவிட்டார்.

பதினோராவதுசருக்கமுற்றிற்று.



# பன்னிரண்டாவது சருக்கம்.



இச்சருக்கத்தில் போகங்கள் துக்கரூபமென்றும் விஷயங்கள் பொய் யென்றுஞ்சம்பத்துகள் அனர்த்தமென்றுஞ்சொல்லப்படுகின்றன.

வான்மீகிசொல்லுகிறார். இராமர்விசுவாமித்திரர் வாக்கியத்தைக்கேட்டு நன்றாகத்தெளிவையடைந்து நிறைந்தபொருள்களையுடையதனுல்மிருதுவாயுமழகாயுமிருக்கிற வசனத்தைச்சொல்லுகிறார் வாரீர்பகவரனே நான்றெரியாதவனுயினும் நீர்சொல்லென்று சொன்னதினுலிப்போதுசகலத்தையுமுள்ளபடிசொல்லுகிறேன் பெரியோர்வசனத்தை எவன்தள்ளுவன் [எவன்தள்ளுவனென்றதனுல் உமதுஆக்ஞாபரிபாலனத்தினுற் சொல்லுகிறேனேதவிரமனேதைரியத்தினுலல்லவென்பதுகருத்து] (அ-கை) இந்தப்படிவணக்கவசனத்தினுல்முனியைச்சுவாதீனஞ்செய்துதனது விற்தாந்தத்தைச்சொல்லுகிறதென்கிறகாரணத்தினுலேகர்ம்மானுஷ்டானத்தினுல்சித்தசுத்தியுஞ்சித்தசுத்தியினுல் விவேகவைராக்கியமுமதனுல்விசாரமுமுண்டாயிற்றென்றுசொல்லுகிறார் | இந்தநான்பிதாவினது வீட்டிற்சனித்துவளர்ந்துவித்தியாப்பியாசங்களைச்செய்தபின்பு சத்துக்களாசாரப்படியே நடந்துசமுத்திரஞ்சூழ்ந்தபூமியில் தீர்த்தயாத்திரைசெய்யுநிமித்தஞ்சஞ்சரித்தபின்பிவ்வளவுகாலத்திற்குள்ளே இச்சமுசாரத்திலிருக்கிற வாசையைநீக்குவதான விசாரணையானதென்மனதிலுண்டாயிற்று அதனுல் விவேகத்தையுடையவனுகி போகவிச்சை நீங்கியபுத்தியினுல் நானேமேற்சொல்லப்போகிறபடிவிசாரணைசெய்தேன் ✻ விரிவான இச்சமுசாரத்திலென்ன சுகம் பிராணிகளிறத்தற்கே பிறக்கின்றதுபிறத்தற்கேயிறக்கின்றது ஆதலால்மிகவுந்துக்கமா யிருக்கின்றது சங்கை. பிறத்தலிறத்தலிற்றுக்கமிருப்பினுமிதன் மத்தியிற்செல்வம்வந்தபோது சுகமனுபவிக்கப்படுகுதே யெனில் செல்வம்வந்தகாலத்திலிருக்கிற மாலைசந்தனம் அன்னபானமுதலியசகலவிஷயங்களுஞ் சுகத்தைக்கொடுக்கிறதல்ல அதேனெனில் விஷயங்கள்நிலையில்லாததினுல் அகப்படாதகாலத்திலும் பிரியிறகாலத்திலுந் துக்கத்தைக்கொடுக்கின்றதுகளப்படி யிருந்தபோதிலுமனுபவகாலத்தில் சுகமுண்டாகுதெனில் அப்போதுமிவ் விஷயங்களுயர்நத ஆபத்துகள்தான் அதேனெனி விராகாதிதோஷங்களையுமிகுந்த ஆபத்துகளையு முண்டாக்குவதனுல் சாஸ்திரநிஷேதமாகாதவிஷயங்களிப்படிக்கொத்ததுகள் சாஸ்திரநிஷேதமானவிஷயங்கள் பாவங்களை யுண்டுபண்ணுகின்றமையால் பாவங்களாயுமிருக்கும் [ஆகையால் விஷயபோகம் விஷங்கலந்த அன்னத்தைப்புசித்தற்குச் சரியாகவிருக்கின்றமையால் சமுசாரத்திற்சுகமில்லை யென்

பதுகருத்து ] (அ - கை) அவ்விஷயங்கள்சுகத்தைக்கொடுக்கிற தாகாமற்
பொமேயாகிலப்போது சுகத்திற்கேதுவாகவெப்படி சேர்ந்திருக்கின்றதுக
ளெனில் | சகலவிஷயங்களும் உளசிமுதலானலோகசலாகைகள்போல ஒ
ன்றுக்கொன்றுசேராமலிருந்துகொண்டு இதுபோகத்துக்குச்சாதனமெ
ன்றென்மனதின்கற்பனையினாலேயே ஒருகாரியத்திலேதுவாகச் சேருதுக
ள் (அ - கை) விஷயசம்மந்தங்கள் மாத்திரமனதின்வசமல்லபின்னையோ
உற்பத்தி திதி நாசங்களும் மனதின்வசந்தானென்று சொல்லுகிறார் | விரி
வானசகமானதுமனதின்வசமாகக்காணப்படுகின்றது அப்போது மனதே
சுகசாதனமாகட்டுமெனில் மனதும் விவேகமுண்டாகும்போது சூன்னியம்
போலத்தோற்றுகின்றது அதனாலுஞ்சுகஞ்சித்திக்கிறதல்ல பின்யாதினால்
நமக்குச் சுகஞ் சித்திக்குமென்றிவ்வளவு காலமோகத்தை யடைந்தோம்
(அ - கை) ஆகையாலிவ விஷயசுகம்பிராந்திதானென்றுகாண்பிக்கிறார் | கா
னற்சலத்தினால்மூடமான்கள்வெகு தூரமிழுக்கப்பட்டாற்போல மூடபுத்தி
களான நா மில்லாதவிஷயசுகத்தினாலேயே கஷ்டமாயிருக்கும்படியிழுக்கப்
பட்டோம் நாமெல்லாமொருவரால் விற்கப்படாமலிருந்தாலும் விற்கப்ப
ட்டவர்போல பரவசராயும் தெரிந்தவனென்றெண்ணியிருந்தாலும்
மூடராயுமிருக்கிறோ மிதுதான்மாயை ஆச்சரியம் இப்பிரபஞ்சங்களில்
விஷயசுகலேசங்கள்தானேது அப்படியிருக்கநாங்கள்வீணாகவே அஞ்ஞா
னத்தினால்பந்தத்தையுடையவர்களென்றுபிராந்தியையடைந்தவர்களாகயி
ருக்கிறோம் [விஷயசுகலேசங்கள் நாசமுடையதென்று கண்டிருப்பதா
லுமளவில்லாதது க்கத்திற்குவித்தாயிருப்பதாலுந் துக்கமேயன்றிச் சுகமன்
றென்பதுகருத்து] படுகுழியிலமூடமிருகங்கள் விழுகிறதுபோல கனமா
னமோகத்தில் நாங்கள் வீணாகவிழுந்து விட்டது ஆ வெகுகாலங்கழித்து
திவசப்புவந்தறியப்பட்டதுநானா இத்திரிசியமெப்படிக்கொத்த உருவையு
டையது எதுக்காகவந்திருக்கின்றது எனக்குராச்சியத்தினாலும் போகங்க
ளாலுந்தானென்ன இவைகளெல்லாம்பொய்தானே இதிற்கொஞ்சஞ் சத்திய
முமுண்டா அதில்பார்க்கப்படுகிறஞானஞ்சத்தியமா திரிசியஞ்சத்தியமா அ
தில் எதுபொய்தானே அதுவேபொய்யாகட்டு மதுவேறாக வேண்டாமது
பொய்யாகிறத்திலொருக்கென்னகுறைவுவருகின்றது [ஒருகுறைவுமில்லை
யென்பதுகருத்து] ஆகையாலிந்தப்படிவிசாரணை பண்ணுகிறஎனக்கு
ச்சகலவிஷயங்களிலும் வழிச்செல்வோனுக்குமருபூமிகளிற்றோற்றுகிறகா
னற்சலத்தில்வைராக்கியம்வருவதுபோல வைராக்கியம் வந்துவிட்டது *
| விரிவான இச்சமுசாரத்திலென்னசுகமென்ற வாக்கியமுதல் வைராக்கிய



ம்வந்துவிட்டதென்ற வாக்கியமீறாகவிஷய சுகந்துன்பமென்றும் பொய்
யென்றுந் தனக்குவிசாரமுண்டான பிரகாரத்தைவருணித்ததெனவறிக]
(அ - கை) தனக்குக்கேட்கவேண்டிய அமிசத்தைச்சொல்லுகிறார் | சர்வானு
பவப்பிரமாணத்தினாற்சித்தித்திருக்கிற இத்திரிசியமானது நாசத்தையடைகு
து அதாவது உண்மையாகஇல்லாதபதார்த்தப்போலவேயாகுது அதென்ன
இருப்பையுடையபதார்த்தத்துக் கில்லாமைகூடாமையால் திரிசியம் அசத்
துத்தானென்றொருவன்சொல்லுவனேயாகிலதிருப்பவுமுண்டாகுதே அதா
வதுயிருப்பையடைகுதே அதென்ன உற்பத்திநாசங்களைத்தவிரவேறுபட்
டிருக்கிறவிர்த்திமுதலானவிகாரங்களையுமடைகுதே அதுவுமென்னமுன்ன
வஸ்தையையுடையது நாசத்தையடைகுது பின்னவஸ்தையையுடையதுவு
ண்டாகுதெனிலப்போது அதுதானிதுவென்கிறநினைவும் விர்த்தியடைவ
துமுதலியவிவகாரமும்வரக்கூடாது முன்னவஸ்தையுடையது நாசத்தை
யடைகிறதில்லையென்றுசொல்லிலப்போது ஒருகாலத்திலேயேயிரண்டவ
ஸ்தைகளையடையவேண்டுவதாகுமதேனெனி லவஸ்தாந்தரமுநதொடர்ந்
துகொண்டிருக்கின்றமையாற்றான் அன்றியுமிவ்வவஸ்தைகள் நிலையாகவி
ருக்கவேண்டுமவ்வவஸ்தைகள் பாவபதார்த்தங்களை விடவேறென்லப்போ
தவைகள்அபாவமாகஏற்படும்பாவபதார்த்தத்தையு மவஸ்தையையு மொன்
றெனில் அவஸ்தையையுடைய நிலையுள்ளபதார்த்தத்தினிடத்தில அவஸ்தை
கள்கிரமமாகவருகுதென்கிறதுகூடாது [உற்பத்திமுதலானதுசளா லொ
ருபிரயோசனமுமில்லையென்பதுகருத்து] இம்மூன்றுகேள்விக்கும் உத்தர
ஞ்சொல்வதற்காக உற்பத்தி திதி உபசாந்திப்பிரகரணங்களுண்டா யிருக்
கின்றன (அ - கை) பிரயோசனமில்லை யென்பதுமாத்திரமல்ல அனாத்
தபரம்பரையுமிருக்குதென்றுசொல்லுகிறார் | உற்பத்தி சரை மரணம் ஆ
பத்து சம்பத்து முதலானதுகளடிக்கடி தோற்றிமறைந்துவளர்ந்துகொ
ண்டிருக்கின்றதுகள் [ சம்பத்துமனர்த்தவே துவாகையாலனர்த்தமென்ற
து ] (அ - கை) சம்பத்துகள்போகவேதுவாகையினால்தேகத்துக்குப்பிரயோச
னமாகுதெனில் | திரும்பத் திரும்பவனுபவிக்கின்றதுச்சமான போகங்களி
னால் மலையிலிருக்கிறமரங்கள் காற்றினாலலைக்கப்படுவதுபோல அலைக்க
ப்படுகிறோம் (அ - கை) ஞானமுள்ளவர்கள் துக்கநாசவுபாயஞ்சம்பாதியாமற்
போனாலந்த ஞானம்வீண்தானென்றுமவர்களசேதனங்கள்போலவென்று
ங்கருத்தில்வைத்துச்சொல்லுகிறார் | வண்டுகளால் துளைக்கப்பட்டதுவார
முடைய அசேதனமானமூங்கில்கள்சத்திக்கிறது போலசெனங்கள் பிராண
னென்கிற பேருடையதானகாற்றுகளால்சத்தித்துக்கொண்டு புருஷார்த்த

த்திற்கு பயோகமாகாமல் வீணாயிருக்கின்றதுகள் (அ - கை) எந்த ஏதுவினால் மோகத்தையடைகிறாயென்றதற்குத்தரஞ்சொல்லுகிறார் | மரமானது பொந்தில் பற்றிக்கொண்டிருக்கிற உக்கிரமான தீயினாற்போல இந்த துக்கமெப்படிபோகுமென்கிற சிந்தையினால்கொளுத்தப்படுகிறேன் ❋ கற்போலிடைவெளியில்லாமல் சமுசார துக்கங்களால்நிறைக்கப்பட்டிருக்கிற மனதுடையவனாயிருக்கும்போதும் பந்துசேனங்கள்நமது நிமித்தமழுமென்கிற பயத்தினாலேயே நான்கண்ணீர்விட்டழவில்லை அப்படிக் கண்ணீரில்லாத அழுகையினால்விஷயங்களிற்பிரீதியில்லாததினால் தற்கேதுவானசந்தோஷமில்லாமலும் பந்துக்கள்துக்கப்படாமலிருக்கும் பொருட்டும் என்முகத்திலுண்டானபொய்ச்சிரிப்புமுதலானதுகளை எனது விவேகமாத்திரமேகாந்தத்திலறிகின்றது ❋ பாக்கியமுள்ளவனந்தப்பாக்கியம்நீங்கியபின்பு தரித்திரத்தினால்முன்னிருந்ததை நினைத்துமோகமடைவதுபோல இஷ்டமான விஷயநாசங்களால் நிறைந்தயிருப்பை நினைத்து அல்லது சகலதுக்க நாசத்தோடுகூடினபரமானந்தபாவமேபாவமதினபாவமே அஞ்ஞானமந்த விகாரமானயிருப்பைநினைத்துச்சமுசாரசேஷ்டையினால்மிகவுமோகமடைகிறேன் (அ - கை) ஸ்ரீமான்கட்கெதுகிடையாதென்னுமுலக வசனத்தினாலுமது பிதாவினதுசம்பத்தினாலேயே உமக்கிஷ்டமான அருத்தஞ்சித்திக்கப்போகுதே ஏன்மோகமடைகிறீரெனில் | வஞ்சனையையே செய்கிற சம்பத்தானது புத்திக்குமோகத்தையுமனேகந்துன்பத்தையுங் கொடுக்கின்றது நற்குணங்களையும்நீக்குகின்றது ❋ கொடுமையானசத்துரு தரித்திரம்ரோகமுதலான ஆபத்தையுடையவர்கட்குஅனேகம்புத்திரனையுடையகிரகமானதுசந்தோஷமாகாததுபோல தனம்படைத்தவர்களைச் சிந்தாரூபமானமுனைகளாலெள்ளெள்ளாக அறுக்கிறசக்கரமாயிருக்கிறதனமானது எனக்குச்சந்தோஷமாகவில்லை ❋ தலைபூண்டயானையின்மனம்போல தேகமுதலான அனித்தியமென்கிறசிந்தைகளால் என்மனதானது சுகத்தையடையவில்லை ❋ செனமானது அஞ்ஞானமானயிரவில்மோகமாகிறபனிப்புகைகளால்சாஸ்திரரூபமானபிரகாசத்தைநீங்கியிருக்கும்போது துஷ்டராயும்சதுரராயுமிருக்கிறவிஷயங்களான அனேகந்திருடர்கள் எப்பொழுதுமெங்கும் விவேகமான உயர்ந்தஇரத்தினத்தைத்திருடுதற் கெத்தனப்பட்டிருக்கிறார்களவர்களையுத்தஞ்செய்துகொல்வதற்குத்தத்துவஞானிகளைத்தவிர எவர்வல்லவர் [தமசு நசியாமற்போனாலவர்களைக்கொல்லக்கூடாதென்பதுகருத்து] அதனாற்றான்தத்துவஞானிகளைத்தவிர எவாள்வல்லவென்றது.

பன்னிரண்டாவதுசருக்கமுற்றிற்று.

# பதின்மூன்றாவது சருக்கம்.

## தனதூஷணம்.

இச்சருக்கத்தில் மூடருக்கெல்லாமிஷ்டமான வளாயும் எப்போதும் போகரூபமான அனர்த்தத்தைக்கொடுக்கிறவளாயுமிருக்கிறதனலட்சுமியை நிந்திக்கப்படுகின்றது.

(அ - கை) இந்தப்படிவிஷயங்களை அசாரமென்றும் அனர்த்தமென்றுந் தெரிவித்து அதுகளைச்சம்பாதித்தற்குமூலமான தனலட்சுமியுமப்படிக்கொத்ததுதானென்றிராமர்சொல்வதற்காரம்பிக்கிறார் | வாரீர்முனியே சமுசாரத்திலிருக்கிற இலட்சுமியானவள் வெகுசுகங்களையுண்டுபண்ணுகிறதாக மூடர்களாலுயர்ச்சியாகக் கற்பிக்கப்பட்டிருக்கிறாள் எதார்த்தத்திற் கொலை பந்தம் நரகமுதலானதுன்பங்களைக்கொடுக்கின்றமையால்மோகத்தின்பொருட்டேயாகிறாள் நிச்சயம். [சுகலேசத்தையும்விவேகத்தையுங் கொடுக்கிறதில்லையென்பதுகருத்து] ❋ மழைகாலத்துநதியானது உபரக்கூத்தாடுகிற அனந்தமலைகளைத்தன்னிடத்திலுண்டுபண்ணுவது போல இலட்சுமியானவள் உச்சாகங்களாலதிகமாயுமளவில்லாத மனோரதங்களுடையவரிசைகளையுடையவளாயும் மிகவும்வியாகுலாளாயுமிருக்கிற வெகு மூடர்களைத்தன்வசமாகச் செய்திருக்கிறாள் ❋ ஆற்றிலலைகளுண்டாவது போல இலட்சுமியினிடத்திலிருந்துந் துஷ்டநடத்தைகளால் விருத்திபண்ணப்பட்டுஞ் சஞ்சலமாயுமிருக்கிறசிந்தைரூபமான வெகுபெண்களுண்டாகிறார்கள் ❋ நெருப்பைமிதித்துஒரிடத்திலுங்காலைவைக்கமாட்டாமலிங்குமங்குமோடுகிற நிகிருஷ்டையான ஸ்ரீயைப்போல இலட்சுமியானவள் ஓரிடத்திலு நிலையில்லாமல் சாஸ்திரத்திற்சொல்லப்பட்டநடத்தையைவிட்டிருக்கிறபுருஷனையடைந்து இங்குமங்குமோடுகிறாள் ❋ தீபச்சுடரானதுகொஞ்சந்தொடப்பட்டாலுந்தொடப்பட்டவனுக்கும்வேக்காட்டைக்கொடுத்துத்தானுநாசத்தையடைவதுபோல இலட்சுமியானவள்மற்றொருவராலற்பமபகரிக்கப்பட்டாலுஞ் சிலவிடப்பட்டாலுந் தன்னைப்படைத்தவனுக்குப்பெரிதான வேக்காட்டையுண்டுபண்ணிக்கொண்டுதானுநாசத்தையடைகிறாள் ❋ இலட்சுமியானவள்துன்பத்தினாற்சம்பாதிக்கப்பட்டிருந்தாலுங்குணவான்களது அனுபவத்திற்குமாத்திரமாகிறதில்லை பின்னையோவெனில் அரசனது சுபாவம்போலமூடத்தன்மையுடையவளாகிக்குறைகுணங்களை விசாரியாமற்றானேசமீபத்திலிருக்கிற வனையடைகிறாள் ❋ [மூடரான அரசர்கள் தருமவான்களாயுங் குணவான்களாயுமிருக்கிறவர்களோடு சினேகஞ்செய்கிற

தில்லை சமீபத்திலிருக்கிற ஏவனுகிலுமொருவனேடு சிநேகிக்கிருர்களெ
ன்பதுபிரசித்தம்] (அ-கை) இலட்சுமியானவள்யாகாதிகளால் விரிவைய
டைந்து சுகத்தைக்கொடுப்பளெனில் | இமிசை பொய் லோப முதலிய
தோஷமாகிறசர்ப்பத்தின்விஷவேகத்தைவிரிவாகப்பண்ணுகிற இராச்சியந்
தனம் இலாபமுதலானபலன்களுக்கேதுவான யுத்தம் சொக்கட்டான் வா
ணிபமுதலான அந்தந்தக்கருமங்களால் விரிவையடைகிருள் [யாகாதிகள்
செலவுக்கேதுவென்றும் அதனுலுண்டானசுகமனித்தியமென்றுங்கருத்து]
பெருங்காற்றினுற்பனியானதுசிதறபபடுகிறதுபோலச்சேனமானது இலட்
சுமியினுற்சிதறப்படாதவளையில அன்னியனிடத்திலுந் தன்னவனிடத்திலு
ந் தயவுதாட்சண்ணியஞ்சிநேகங்களோடு கூடிக்கொண்டிருக்கின்றது ❊
(அ-கை) அதைத்தானேபிரகாசப்படுத்துகிருர் | இரத்தினமானது புழு
திகளாலழுக்கையடைவதுபோல தெரிந்தவர்கள் சூரர்கள் நன்றியுள்ளவ
ர்கள் மநோக்கியர்களிவாகளெல்லாமிலட்சுமியினுலழுக்கை யடைகிருர்கள்
❊ விஷக்கொடியானதுமரணத்தைக் கொடுக்கிறதுபோல இலட்சுமியான
வள் துன்பத்தின்பொருட்டேவிருத்தியடைந்து நாசத்தைக்கொடுக்கிருள்
❊ (அ-கை) இலட்சுமியையுடையவர் களுஞ் சிலர்கருமமுள்ளவர்களாயு
ங்கீர்த்தியுள்ளவர்களாயுங்காணப்படுகிருர்களேயெனில | சேனங்களால்நிந்
தியாமலிருக்கிறபாக்கியவானும் வீரவாதஞ்சொல்லாமலிருக்கிற சூரனுஞ்சு
ரியானபார்வையுடைய பிரபுவுங் கிடைப்பதரிது ❊ விஷமமான இலட்சுமி
யானவள் துக்கரூபமான சர்ப்பங்களுக்குந்திடமுள்ள குகையாயுந்திடமான
மோகமாகிறபெரிதானயாவினகளுக்குவிந்தியமலையினதுபெரிதானதாழ்வ
ரையாயும் புண்ணியகருமங்களாகிறதாமரைக்குஇரவாகியுந் துன்பமாகிற
ஆம்பலுக்குநிலவாயுந் தபவானபார்வையாகிறதீபத்துக்குப் பெருங்காற்று
மவிகற்பமாகிறபயிர்களுக்குக்கழனியாயும் வைராக்கியமாகிற கொடிகளு
க்குப்பனியாயுங் காமாதிவிகாரங்களாகிற கோட்டான்களுக்கிரவாயும் வி
வேகமாகிறசந்திரனுக்கு இராகுவினுடைய ஈற்றுப்பல்லாயுமிருக்கிருள் ❊
இந்திரதனுசைப்போலச்சற்றுநேரம்பலவிதமான ஆசைகளாகிறவருணங்
களாலழகாயும் மின்னற்போற்சஞ்சலத்தையும் உண்டானமாத்திரத்தில்நசி
க்கிறதாயுமிருக்கிருள் ❊ மூர்க்காளிடத்திலிருக்கிறவளாயும் வஞ்சவினைசெய்
கிறத்திற்காணவிலச்செயிக்கிறவளாயும் ஆற்றின்பெருக்குப்போல க்ஷணகா
லமும் ஓருவிதமானயிருப்பைச்செய்யாமலுங்கொடூரயிருதயாளிடத்திலிரு
க்கிறவளாயுமிருக்கிருள் ❊ பிறருடைமையையபகரித்ததனுலுண்டானபொ
ருளையுடையதாயும் ஏமனுல்கிரிகித்துக்கொண்டுபோனபொருளையும் வாங்



கவேண்டுமென்றிச்சிக்கிறசுபாவத்தையுடையதாயுந் துஷ்டமானமநோவி
யாதிகளொளித்தற்கிடமாயும் மங்களமிலலாத தாயுமிருக்கிற இந்த இலட்
சுமியினுல் துன்பத்தைத்தவிரசிறிது சுகத்தையுநான் பார்க்கவில்லை ❊ பா
ர்வைக்குமநோக்கியமாயும் சாகசத்தினுலடையத் தக்கதாயும் க்ஷணத்தில்நா
சத்தையடைவதாயுஞ்சத்துருக்களாற் சூழப்படுவதாயுமிருக்கிற இலட்சுமி
யானவள் சர்ப்பக்கூட்டங்களாற்சுற்றப்பட்டதாயும் பாழுங் கிணர்முதலா
னபள்ளத்திலுண்டானதாயுமிருக்கிறகொடியின் புஷ்பத்தைப்போலச்சித்த
விருத்தியையிழுக்கிருள்.

பதின்மூன்ருவதுசருக்கமுற்றிற்று.



# பதினுன்காவதுசருக்கம்.

## ஆயுள்தூஷணம்.

---

இச்சருக்கத்தில் வியாதி ரோகம் சனை முதலியவைகளாற் சூழப்பட்டும்
காமமுதலானதுகளாற்கலங்கப்பட்டுமிருக்கிறமூர்க்கனுடையபிழைபபும் ஏ
வ்வனமுமாயுளுநிந்திக்கப்படுகின்றன.

(அ-கை) தனலட்சுமியைப்போல் ஆயுளுஞ்சுகவேதுவல்லவென்றி
ராமர்செல்லுகிருர் | தளிரினது நுனியிற்றெங்குகிற பனித்திவலை போல
ஆயுளானது நிலையில்லாததாகையால் பயித்தியமபிடித்ததுபோலஅகாலத்
தில்நிகிருஷ்டமானசரீரத்தைவிட்டுப்போகின்றது ❊ விஷயங்களாகிற சர்ப்
பத்தீண்டினதினுல் மேலிநதசித்தத்தையுடையவர்களாயும் ஆத்மஞானமில்
லாதவர்களாயுமிருக்கிறபுருஷாளுக்கு ஆயுளானது துன்பத்திற்குக்காரண
மாயிருக்கின்றது ❊ (அ-கை) பிரமத்தையறிந்தவர்களுக்குமப்படிதானே
வெனில் | அறியவேண்டுவனயாவையுமறிந்தும் பூரணமானவஸ்துவிலிளை
ப்பாறிக்கொண்டுமிலாபாலாபங்களிற் சமமான சித்தத்தையுடையவர்களாயு
மிருக்கின்றவர்களாயுளானது சுகத்தைக்கொடுக்கின்றது ❊ இவ்வளவென்ற
ளவிடப்பட்டதேகமே ஆத்மசொரூபமென்னுநிச்சயத்தையுடைய நாங்கள்
சமுசாரமாகிறமேகத்தில் மின்னற்போலிருக்கிறவாயுளாற்சுகத்தையடைய
வில்லை [தேகமே ஆத்மாவென்னுங்கருத்திருக்கின்றமையால் ஆயுள்நீங்கி
னுற்றேகநீங்குமென்பதுகருத்து] வாயுவைக்கட்டுகிறதுமாகாயத்தைப்பி

ளக்கிறதுமலைகளைத்தொடுக்கிறதுங்கூடலாமிவ்வாயுளை நிலையென விரும்புதல்கூடாது ❊ ஆயுளானது அற்பமானசரற்காலமேகம்போலவும் எண்ணெயில்லாததீபம்போலவுஞ் சஞ்சலமான அலைபோலவும் போய்விட்டதாகவேகாணப்படுகின்றது ❊ அலையையும் பிரதிபிம்பசந்திரனையுமின்னற்கூட்டத்தையும் ஆகாயத்தாமரைப்பூவையும்பிடித்தற்கிச்சிக்கிறேன் நிலைபெற்றியவாயுளையிச்சிக்கவில்லை ❊ எவ்வளவேனுமிவளைப் பாருதலில்லாதமனதையுடையமூடன்புருஷார்த்தத்திற்குபயோகமில்லாத வீணான வெகுஆயுளை அசுவதரியானதுகெற்பத்தையிச்சிக்கிறதுபோற்றுக்கத்தின்பொருட்டேயிச்சிக்கிறான் [ஆண்குதிரைக்கும்பெண்கழுதைக்குஞ்சனிப்பதசுவதரியென்றுபெயர் அதற்குண்டானகெர்ப்பமதின்வயிற்றைப்பிளந்துவருவதெனவறிக] அவசியமடையத்தக்கதானபரமபுருஷார்த்தத்திற்கேதுவாயுந் திரும்பவுந்துன்பத்தையுண்டுபண்ணமலும்முக்கியமானசீவன்முத்திச்சுகத்துக்கிருப்பிடமாயுமிருக்கின்றசீவனமேநல்லசீவனமென்றுசொல்லப்படுகின்றது ❊ மரங்களுமிருகபட்சிகளுஞ்சீவிக்கின்றதுகள்ப்படிக்கொத்தவாளுடையசீவனம் சீவனமல்ல எவர்கள் மனதுதத்துவஞானத்தினாலாவது வாசனாக்ஷயத்தினாலாவது நாசத்தையடைகுதோ அவர்களேதிரும்பவுஞ் சனிக்காதவர்களாகவுமுலகத்தில் நல்லபிழைப்புள்ளவர்களாகவுமாகிறார்கள் மற்றவர்களெல்லாங் கிழக்கழுதைகளென்றறியத்தக்கது [அதேனெனில்சுசியானதேகாத்மபுத்தியினாலெனவறிக] விவேகமில்லாதவனுக்குச்சாஸ்திரம்பாரமதேனெனிற்பாரம்போல வீணானசிரமத்திற்குக் காரணமானசயையுடையவனுக்குச்சகலதுக்கங்களையுநீக்குகிறதென்றுபிரசித்தமான ஞானமும்பாரமற்றதைக்கேட்பானேனென் சாந்தியில்லாதவனுக்குமனதுபாரம் ஆத்மஞானமில்லாதவனுக்குச்சரீரம்பாரம் புத்தியில்லாதவனுக்குரூபம் ஆயுள்மனதுபுத்தி அகங்காரந தொழிலிதுகளெல்லாஞ் சுமையாளிக்குச் சுமைபோலதுக்கத்தின்பொருட்டேயாகின்றது ❊ ஆயுளானது சகலதுன்பங்களோடுகூடியுஞ் சகலகாமங்களாற்குறைவுள்ளதாயும் ஆபத்துகளுக்கு முக்கியமான இடமாயும் ரோகங்களாகிறபட்சிகளுக்குக்கூண்டாயு மிருக்கின்றதாற்றுன்பத்திற்குத் திடமானகாரணமாயிருக்கின்றது ❊ பெருச்சாளியினாற்பழைமையானவளையானதுவருத்தமில்லாமற்கெல்லப்படுகிறதுபோல ஆயுளானதுகாலனாற் றுன்பமில்லாமற்றினந்தோறும் ஓயாமற்கொஞ்சங்கொஞ்சமாகக்கெல்லப்படுகின்றது ❊ கொடூரமானசர்ப்பங்களாற்காட்டிலிருக்கிறகாற்றானதுபுசிக்கப்படுகிறதுபோலச்சரீரமாகிறபுத்திலிவளைப்பாதிக்கொண்டும் விஷத்தைப்போற்கொளுத்திக்கொண்டுமிருக்கிற ரோகங்களா



லாயுளானது புசிக்கப்படுகின்றது ❊ கொடூரமான உளுப்பூச்சிகளாற்கிழமரமானதரிக்கப்படுகிறதுபோல இரத்தம் மலம் முதலானத்தை ஓயாமற்பெருக்கிக்கொண்டுங் கெட்டதாயும் உள்ளேயிருப்பையடைந்து மிருக்கிற ரோகமாகிறதுன்பங்களாலாயுளானதரிக்கப்படுகின்றது ❊ எலியானது பூனையினால்விழுங்கப்படுகிறதுபோல ஆயுள்மரணத்தினால்விழுங்கவேண்டுமென்று ஆசையோடுகூட எப்போதுநிச்சயமாகப்பார்க்கப்படுகின்றது ❊ சற்புருஷன் துஷ்டனை விடுகிறதுபோல யௌவனமானதுபுருஷனை இவன்நம்மைப்புருஷார்த்தத்திற்பிரயோசனப்படுத்த வில்லையென்றறிந்துசிலதினங்களிலேயேவிடுகின்றது [துற்சனனென்றெந்தமட்டுமறியவில்லையோ அந்தமட்டுந்தான்சற்சனனாலாதரிக்கப்படுகிறானென்றுபிரசித்தம்] ❊ கிரோஷ்டனை விடன் அழகையிச்சிக்கிறதுபோல நாசத்துக்குச் சினேகிதனும் சராமரணங்களுக்குப்பந்துவாயுமிருக்கிறகாலனானவனாயுளை எப்போதுமிச்சிக்கிறான் ❊ சுகமில்லாததாயு நிலையில்லாததாயுமிகவுந்துச்சமாயுங் குணங்களில்லாததாயு மரணத்திற்கிருப்பிடமாயுமிருக்கிற இவ்வாயுளைப்போலத்துன்பமுலகத்தில்வேறென்றுமில்லை ❊.

பதினான்காவதுசருக்கமுற்றிற்று.

# பதினைந்தாவதுசருக்கம்.

## அகங்காரதூஷணம்

இச்சருக்கத்திற்சகல அனர்த்தங்களுடைய எத்தனங்களுக்கெல்லாமூலஸ்தம்பமாயும் மமதையாகிற கொடிக்குவேராயுமிருக்கிற அகங்காரமானது நிந்திக்கப்படுகின்றது.

(அ-கை) ஆயுளைப்போலகங்காரமுஞ்சுகவேதுவல்லபின்னையோசகலதோஷங்களுமபிமானத்தையே மூலமாகவுடையதாகையாலனர்த்தமென்றிராமர் சொல்லுகிறார் | அஞ்ஞானத்தினாலேயே அகங்காரமானதுண்டாகி நாலுபக்கமும்வளருகுது பொய்யாகவே உண்டாயிருக்கின்ற அந்தத்துராங்காரரூபமானசத்துருவினாற்பயமடைந்திருக்கிறேன் [இதற்குமூலமோகமெனவறிக] அனாதிகாலமாய்ச்சனனமரண நரகமுதலான அனந்தத்துக்கபரம்பரையை அனுபவித்துந் திரும்பித்திரும்பியதற்கேதுவானசு

லேசங்களை அனேகம் வருந்தத்தாலிரவதடைய வேண்டுமென்றிச்சித்துக்கொண்டுமிருக்கின்றமையால் மிகவுந்தீனனாய்விஷயத்திலாசையையுடைய புருஷர்களுக்குச்சாதனமென்றும் பலமென்றும் பலவிதவுருவையுடையசமுசாரமானது அகங்காரவசத்தினாலேயே இராகம் துவேஷம் துர்விசனமுதலான தோஷரூபங்களாகிற பொக்கிஷவீடுகளில் நற்கருமத்திற் குபயோகமாகாததினால் சூனமாயத்தனமாக வுண்டாகுது ❊ (அ-கை) அகங்காரத்தின்வலிமையைச் சொல்லுகிறார் | சரீரதுன்பங்களும் மனோதுன்பங்களுங்கெட்டநடத்தைகளுமகங்காரத்தி னாலேயே உண்டாகுதுகளாகையால் எனக்கு அகங்காரமானது ரோகமாயிருக்கின்றது ❊ வெகுகாலமாயிருக்கிறமிகுந்த சத்துருவான இவ்வகங்காரத்தையடைந்து நான்புசிப்பதுமில்லை சலபானம்பண்ணுவதுமில்லை யாதலாற்போகங்களை யனுபவிப்பதேது ❊ வேடனாற்பட்சிகள்பேரிலவலையானது விசிறப்படுவதுபோல் அகங்காரரூபதோஷத்தினாற் சமுசாரமாகிற இரவில்நீடித்ததாயு மனதில்மோகத்தையுண்டுபண்ணிக்கொண்டுமிருக்கிறமாயையானது என்னிடத்தில்விசிறப்பட்டிருக்கின்றது ❊ மலையிற்கருங்காலிமரம்போல் அகங்காரத்திலிருந்தும் நீடித்ததாயும் போக்கக்கூடாததாயும் பெரிதாயுமிருக்கிற துக்கமான துண்டாகின்றதுகள் ❊ சாந்தியாகிற சந்திரனுக்கிராகுவினதுமுகமாயும் நற்குணமாகிறதாமரைமலருக்கிடிபோலிருக்கிறபனியாயுஞ் சமமானபார்வையாகிற மேகத்திற்குச்சரற்காலமாயுமிருக்கிற அகங்காரத்தைவிடுகிறேன் [சர்வசீவர்களிடத்திலுந் தயையென்னு மழையைப்பெய்தலாற் சமமானபார்வையை மேகமென்றது] ❊ (அ-கை) அகங்காரத்தைவிட்டாற்றேகாபிமானம் மமதைமுதலானதுகளில்லாமற் போய்விடுகுதுகளென்று தெரிவிக்கிறார் | நானிராமனல்ல எனக்குவிஷயவிச்சையுமனதுமில்லை என்னைப்போற்சகலபிராணிகளையும் பார்த்து ஒருவரிடத்திலும்வயிரமில்லாமல் சைனன்போல ஒரிமிசையுமின்றியிருக்கவேண்டுமென்றிச்சிக்கிறேன் [நிந்திக்கத்தக்கவர்களிடங்களிலு நற்குணத்தைக்கிரகிக்கவேண்டுமென்கிற நியாயத்தினாற்சைனனைத்திஷ்டாந்தஞ்சொன்னது] தேகவாசனையாற்புசிக்கு மறுசுவையுண்டிகளுஞ் சாஸ்திரவாசனையாற்செய்யுமியாகாதிகளும் உலகவாசனையாற்செய்யுநித்தியகன்மங்களுமரச நீதிமுதலானவைகளு மகங்காரத்தி னுலுண்டானதாலவைகளெல்லாம் பொய்தான்பின்னையோ அகங்காரமில்லாமையேமெய் ❊ நானென்கிற நினைவிருந்தாலாபத்திற்றுக்கமடைகிறேன் நானென்கிறதில்லாவிட்டாற்சுகமடைகிறேனாகையாலகங்காரத்தை விடுவதேமேன்மை ❊ எவ்வளவுமட்டுமகங்கார ரூடமானமேகநாலுபக்கமு மெழும்பு



தோ அவ்வளவுமட்டுமாசையாகிற குடைமல்லிகைப் பூங்கொத்தானதுமலருது [பரமாதித்தனைமறைக்கின்றமையாலகங்காரத்தைமேகமென்றது] அகங்காரமாகிறமேகமானது ஒழியும்போதாசையாகிறமின்னற்கொடியானதவிணந்திருக்கிறதீபச்சுவாலைபோலமிகுந்தவேகத்துடனே ஓரிடத்திற் போய்விடுகின்றது ❊ மேகமானதுகெற்சிக்கின்றதுபோல அகங்காரமாகிறபெரிதானவிந்தியமலையில்மனதாகிற மதம்பிடித்த யானையானததிகமானயுத்தவுச்சாகங்களாலே விளங்குகின்றது [வணக்கமுமசைவுமின்மையாலகங்காரத்தைவிந்தியமலைக்குச்சரியென்றது]தேகமாகிற பெரியகாட்டில் திடமான அகங்காரமாகிறசிங்கம் சர்வசேஷ்டைகளால் விருத்தியடைந்து விளங்குகின்றதனாலிச்சகமானது புண்ணியபாபரூபமான வித்துகளால்விரிவாகச்செய்யப்பட்டிருக்கின்றது ❊ அகங்காரமாகிறசத்துருவினாற்றந்திரமந்திரமிரண்டுமில்லாமற்புத்திரமித்திரகளத்திராதிரூபமானவசிகரணவுபாயமானதுசெய்துவைக்கப்பட்டிருக்கின்றது நானென்கிறசொல்லானதுவேரோடுபோக்கப்படுமாகில் மனதிலிருக்கிறசகலதுஷ்டவியாதிகளும்விரைவாகவேபோய்விடுகின்றதுகள் ❊ சாந்தியைபபோக்குகிறநானென்கிறமேகமானது நாள்வரையிலொழியும்போதுமனாகாசத்திலிருக்கிற மோகமாகிறபனிக்கூட்டமானது ஒருவிடத்திற் போய்விடுகின்றது [இவ்வகங்காரநாள்வரையிலொழியுமென்றதுமந்தாதிகாரிகளுக்கெனவறிக] அகங்காரத்தினாதுவியாபாரங்களைவிட்டும் மூடத்தனத்தினாற்றுக்கத்தையடைந்துமிருக்கிற எனக்குயோக்கியமானது எதுயிருக்குதோ அதையிவ்விடத்திற் சொல்லவேண்டும் ❊ ஆபத்துக்கெல்லாமிடமாயும் நிலையில்லாததாயும் மனதிலிருக்கிறதாயும் சாந்திமுதலான உத்தமகுணத்தினால்விடப்படுகிறதாயும் நாலுபக்கமுந்துக்கத்தையுண்டுபண்ணுகிறதாயுமிருக்கிற அகங்காரரூபமான அடையாளத்தைத்திடமானவிவேகத்தினால்விடுகிறேன் எனக்கு வேண்டிய காரியத்திற்குறைவில்லாமலும் ஆத்மதத்துவத்தையும் உபதேசம் பண்ணும்

பதினைந்தாவதுசருக்கமுற்றிற்று.



# பதினாறாவது சருக்கம்.

## மனோதூஷணம்.

---

இச்சருக்கத்திற்சித்தம் மனமிவைகளின்தோஷங்களை வெகுதிருஷ்டாந்தங்களாலும் யுத்திகளாலுஞ்சொல்லப்படுகின்றன.

(அ - கை) அகங்காரத்தைப்போற்சித்தமுமனதுஞ்சுகவேதுவல்ல பின்னையோ துக்கத்திற்கேதுவென்றிராமர்சொல்லுகிறார் | (பெரியோர்களுடையசேவையைமோட்சத்திற்குவழியாகச்சொல்லுகிறார்களென்கிறவசனத்தினால்)மனதானது காற்றுக்குள்ளகப்பட்டமயிற்றோகைபோல முமூட்சுக்களால்வசியஞ்செய்யத்தக்க பெரியோர்கள் சேவையைவிட்டுநீங்கி காமாதிதோஷங்களால் துற்பலத்தையடைந்து சஞ்சலசுபாவமுள்ளதாகியலைகின்றது * மனதானது ஊர்நாய்போல யுத்தாயுத்த விசாரமின்மையால் வியாகுலத்தையும் ஓரிடத்திலுந்தனதுநிறைவிற்கேதுகிடைக்காததினால் தீனத்தையுமடைந்து இங்குமங்கும்வெகுதூரம் வீணாகவேவிஷயங்களிலோடுகின்றது * மனதானதப்படியோடினபோதிலும் ஓரிடத்திலுமற்பமுமோர்பலமுமடைகிறதில்லை மிகுந்ததனங்கிடைத்தபோதிலு மூங்கிற்பெட்டியானதுசலங்களால் நிறைவையடையாததுபோல நிறைவையடைகிறதில்லை * எப்போதுந்துராசையாகிறவலையினாற்சூழப்பட்டிருக்கிற மனதானது தன்னினத்தைப்பிரிந்தமான்போலச்சுகத்தையடையவில்லை *மந்தரமலையினதுகடைதலாலுபர எழும்பியிருக்கிற பாற்கடலின்பாலானதுபோல மனதானதுவிஷயநினைப்பினாற்கலக்கமடைந்துபத்துதிக்கிலுமோடுகின்றது * போகரூப உச்சாகமாகிற அலைகளாலுண்டாகிற கோணலானசுழிகளையுடையதாயும் பிறரைவஞ்சிக்கிற உபாயமாகிற மகரமச்சங்களாற்சூழப்பட்டுமிருக்கிறமனதாகிறபெரியகடலைத் தடங்கற்செய்வதற்கு நான்வல்லவனாகவில்லை * மனதாகிறமான் நரகமாகிறபள்ளத்தில்விழுவதை எண்ணாமல் போகமாகிறபுல்நுனியையிச்சித்துவெகுதூரமோடுகின்றது * சமுத்திரமானதுசஞ்சலத்தை விடாததுபோல என்மனதானதுசஞ்சலத்தை ஒருக்காலும்விடுகிறதில்லை அதேனெனில கூண்டிலிருக்கிறசிங்கமானதுபோலச் சஞ்சலசுபாவமுள்ளமனதானதுபலசிந்தைகளால்மிகவுஞ்சஞ்சலமடைந்து ஓரிடத்திலுந்திரமடையவில்லை * அன்னமானது சலத்திலிருக்கிறபாலைக்கிரகிப்பதுபோல மனதானதுசரீரத்திலிருக்கிறசர்வசமனானசிவன்முத்திச்சுகத்தைமோகமானதேரிலேறிக்கொண்டு கிரகிக்கின்றது [ உயர்வுதாழ்வென்பது உபாதியினாற்கற்பிக்கப்பட்டிருப்பதால் ஏதார்



த்தத்திற்சர்வபிராணிகளிலுமாத்மாவொருருவையுடையவராயிருக்கின்றமையாலந்தஏகமாயிருக்கையைச் சீவன்முத்தர்களாலநுபவிக்கப்படுகிற சமதையென்றும் அதுவேசுகமென்றுஞ்சொல்லப்படுகின்றது அச்சமதையானதுமனதுமோகமானதேரிலேறாமலிருக்கும்போது நித்தியமாகக்கிடைத்திருக்கின்றமையாலிச்சரீரத்திலேயே உண்டாயினும் மோகமாகிறதேரிலேறியிருக்கிற மனதினால் விழுங்கப்பட்டிருக்கின்றமையால் அசாரமான தேகமாத்திரத்திலேயே ஆத்மாவென்கிற எண்ணிக்கையானதுசேஷிக்குதென்பதுகருத்து] சித்த விருத்தினானமானது தொய்தரூபமான விஷயத்திலாசையினதுகற்பனாரூபமாகிறபடுக்கையிற்றூங்கிக்கொண்டிருக்கின்றதுபோலவிருப்பதாலாத்மஞானத்தையுண்டுபண்ணுகிறசாஸ்திரமும் ஆசாரியரது உபதேசமுமில்லாமற்கேவலந்தன்புத்தியினாலேயேசெய்யப்பட்டிருக்கிற அனேகம்விசாரத்தினாலும்விழித்துக்கொள்ளுகிறதில்லை ஆகையாலதுவிழிக்காததினால்நான் தபிக்கப்படுகிறேன் *வேடனானவன்வலையினாற்பட்சியைக்கட்டுகிறதுபோல யானெனதென்கிற பிராந்தியினாற்றிடமானமுடிச்சுகளையுடையபோகவாசையானவலையிலகப்பட்டிருக்கிறஎன்னைமனதினாற்கட்டிக்கொண்டிருக்கிறேன் * அக்கினியினாலுலர்ந்தசெத்தையைக் கொளுத்துவதுபோல கோபமாகிறபுகையையுடையதாயுஞ்சிந்தையாகிறசுவாலையினாற் சூழப்பட்டுமிருக்கிற அக்கினிக்குச்சரியானமனதினால்நான் கொளுத்தப்படுகிறேன் * ஆசைபோல வயிறுநிறையாதபெண்ணாயையனுசரித்திருக்கிற கொடூரமானநாயினாற்சவமானது புசிக்கப்படுவதுபோல அஞ்ஞானத்தையடைந்திருக்கிற நான்ஆசையென்கிறமனைவியையனுசரித்திருக்கிற கொடூரமானமனதினாற் புசிக்கப்படுகிறேன்* நதிக்கரையிலிருக்கிறமரமானதுவெள்ளத்தினாலிழுப்புண்டதுபோலஅலைகள்போற்சஞ்சலமாயுங்கிடையாதவிஷயத்திற்றட்டுப்படுகிறசெய்கைகளையுடையதாயுஞ்சடமாயுமிருக்கிற மனதினாற்றள்ளியிழுத்துக்கொண்டுபோகப்படுகிறேன் *செத்தையானது பெருங்காற்றினாற்சுற்றுப்படுகிறதுபோலசொற்கமுதலியவைகளிலிருந்துஅகாலத்தில்விழுதற்காகவாவது இவடத்திலேயேசிறிது சுகமுமில்லாதபுழுபட்சிமுதலானபிறவிகளையெடுத்தற்காகவாவதுமனதினால்வெகுதூரஞ்சுற்றப்படுகிறேன் *அற்பநதியினுடையபிரவாகமானது அணையினாற்றகையப்படுவதுபோலஇச்சமுசாரமானகடலினின்றும்வெளிப்படுதற்கெத்தனப்பட்டுக்கொண்டிருக்கிறநான் ஈனமனதினாற்றகையப்படுகிறேன் *பாலகன்பிசாசத்தினாற்பீடிக்கப்படுவதுபோலபொய்யானஉருவையுடையதாயும் விசாரணைபண்ணும்போதில்லாததாயுமிருக்கிறகெட்டமனதினாற்பீடிக்கப்பட்டவனாகிறேன் [பாலகனைப்பயப்படுத்துநி

மித்தமுண்டாக்கப்பட்டிருக்கிற பிசாசமானது அவனறியாமையினுலிருப்பையடைந்து அவனுக்குத்தானே அப்பாலிய நீங்கிவிசாரணையினுலில்லாமையையடைவதுபோல் அஞ்ஞானியினுடையபுத்தியினுற் செயிக்கக்கூடாதமனதேவிவேகமுண்டாகும்போது சொருபமேயில்லாமற்போகுதென்பதுகருத்து ] கயிற்றினுற்கிணற்றங்கரையிலிருக்கிறசகடக்கட்டையானது சுற்றப்படுவதுபோலமனதினுற்பாதாளத்தி விருந்துபூமியிலும் பூமியிலிருந்துபாதாளத்திலுஞ்சுற்றப்படுகிறேன் * துக்கப்பட்டும்பிடிக்கக்கூடாததான மனதாகிறபிசாசமானது நெருப்பினும்மிகுந்தசூட்டையுடையதாயும் மலையினும்மிகவும்வருத்தப்பட்டுத்தாண்டத்தக்கதாயும்வச்சிரமணியினும் வலுவாயுமிருக்கின்றது * பட்சியானது தனக்குப்புசிக்கத்தக்கமாமிசங்களிலிச்சையையடைவதுபோலமனதானது விஷயங்களில் விரைவாகவே ஆசையையடைந்தமையால்நெடுநாளப்பியாசிக்கப்பட்ட நல்லநடத்தைகளினின்றும்பாலகன் ஒருகாலத்திலடையப்பட்ட விளையாட்டு நிமித்த நெடுநாளப்பியாசிக்கப்பட்டவித்தியாப்பியாசத்தினின்றுநீங்கிவிடுவதுபோலக்ஷணத்தில் ஒழிவையடைகின்றது * சடசுபாவத்தையுடையதாயும் அதிகசஞ்சலமாயும் விரிவானகற்பனைகளைச்சுழியாகவுடையதாயுங்காமாதிசத்துருவாகிறசர்ப்பங்களையுடையதாயுமிருக்கிறமனதாகிறகடலானதுஎன்னைவெகுதூரங்கொண்டுபோகின்றது * கடலைக்குடிப்பதினும்மேருவைப்பிடுங்குவதினும் நெருப்பைவிழுங்குவதினும் மனதையடக்குவதுமிகவுங்கஷ்டமாயிருக்கின்றது * சகலபதார்த்தங்களுக்குங்காரணமானசித்தமிருக்குமேயாகில் மூன்றுலகமுமிருக்குது அந்தச்சித்தம் நாசத்தையடையுமேயாகிற்சகத்து நாசத்தையடைகின்றமையால் அந்தச்சித்தத்தைவியாதியை யத்தனத்தினுற் போக்குவதுபோல யத்தனத்தினுற்போக்கவேண்டும் * (அ-கை) சொன்னதையேதிஷ்டாந்தத்தினுற்சொல்லுகிருர் | பெரியமலையிற்காடுகளுண்டாவதுபோலசித்தத்திலிருந்தும் அனேகசுகதுக்கங்களுண்டாகுது அந்தச்சித்தமானதுவிவேகத்தினுல்வாசனையற்றுவறுத்தவித்துபோலசூட்சுமமாகுமேயாகில் அந்தச்சுகதுக்கங்களெல்லாநன்றுகவே நீங்கிவிடுமென்றெண்ணுகிறேன் * முமூட்சுக்களெந்தச் சித்தசெயத்தினுற்சாந்தியாதிகுணங்கள்சுவாதீனமாகுமென்றிச்சித்துக்கொண்டிருக்கிருர்களோ அந்தச்சித்தரூபமரணசத்துருவை இச்சரீரத்திலேயேசெயித்தற்கெத்தனப்பட்டுக்கொண்டிருக்கிறநான்மூர்க்கர்களையுஞ் சுத்தமில்லாதவர்களையுஞ்சந்தோஷப்படுத்துகிறசெல்வத்திலவைராக்கியசம்பத்தினுற்சந்தோஷிப்படவில்லை (இச்சரீரத்திலாத்துமாவையறிந்தானேயாகிற்சத்தியமானதிருக்கின்றது அறியாமற்போனுனேயாகில் மகத்தான நாசம் வருகுதென்றுசுருதிசொல்லுகிறபடியினுலெனவறிக.) பதினுருவதுசருக்கமுற்றிற்று.

# பதினேழாவதுசருக்கம்.

## ஆசாதூஷணம்.

---

இச்சருக்கத்திற் சகலபாபங்களுக்கேதுவாயும் எளிமை லோபம் மானமிவைகளைக்கொடுப்பதாயுஞ்சகலசீவர்களுக்கும்பிராந்தியைச்செய்வதாயுமிருக்கிற ஆசையைநிந்திக்கப்படுகின்றது.

(அ-கை) மனது எப்போதும் விஷயபோகத்தையிச்சிப்பதனுல்முன்மனேதூஷணத்தைச்சொல்லி அதன்பின்பு ஆசையைத்தூஷித்திராமர்சொல்லுகிருர் | மிகவும்பிரீதிக்கிடமான ஆத்மதத்துவத்தையுமிருதயத்திலுண்டான விவேகமுதலானத்தையும்மறைக்கிறஆசையாகிறவிருண்ட இராத்திரியிலிராகமுதலானகோட்டான்கூட்டமானது சிதாகாசத்தில்விளையாடுகின்றதுகள் * மோசமாகிறவிரட்டினுற்சூழப்பட்டும்விசாரணையில்லாமலுமிருக்கிற என்சித்தமாகிறபெரிதானகாட்டிலாசையாகிறபிசாசானதுமிகவுங்கூத்தாடுகின்றது * பிறரைவைதல்பொய்சொல்லல் முதலியசத்தத்தையுடையபிரவிர்த்தியாகிற அலைகளோடுகூடிய உருவத்தையுடையதாயும்விஷயம்விட்டுவிஷயத்தைத்தாண்டிக் கொண்டுமிருக்கிற ஆசையாகிறநதியானது என்தேகமாகிறமலையிலிருந்தும் பெருகுகின்றது * தனதுசஞ்சலத்தைத்தடங்கச்செய்து தருமமேகமென்னும்பெயருடையசமாதிரசத்தைப்பானஞ்செய்வதற்கெத்தனப்பட்டுக்கொண்டிருக்கிறசித்தமாகிற சாதகப்பட்சியானது தூளிகளாற்கறுத்திருக்கிறபெருங்காற்றினுல்மக்கினசெத்தையானது தள்ளப்படுகிறதுபோல இராசதகுணத்தினுற்கலக்கத்தோடு கூடின ஆசையினுல் யோக்கியமான ஒருவிஷயத்திற்றள்ளப் படுகின்றது * வைராக்கியமுதலானகுணங்களில் நானெதைவிரும்புகிறேனே அதை என்தாசையானது வீணையின் நரம்புத்தந்தியை எலியானதுபோலவறுக்கின்றது * சுழிசலத்தில்மக்கினசருகுபோலவுங் காற்றில்மக்கின செத்தைபோலவும் ஆகாசத்திற்சரற்காலமேகம்போலவுஞ் சிந்தாரூபமானசக்கரத்தில் நான்சுற்றுகிறேன் * பட்சிகள் வலையிலகப்பட்டதுபோல ஆத்மஞானமடைவதற்குவலியில்லாதபுத்தியுடையநாங்கள்சிந்தாரூபமான வலையிலகப்பட்டுமோகமடைந்திருக்கிறேம் * ஆசையென்னுந்தீயினுற் கொளுத்தப்பட்டநான் அமிர்தத்தில்முழுகினுலுந்தாபசாந்திவரமாட்டாதென்றெண்ணுகிறேன் * அறிவில்லாதவர்களிடத்திலிருக்கின்றதாயுஞ்சொர்க்கநரகங்களிற்போக்குவரத்தை உண்டுபண்ணிக்கொண்டும் அலைந்துகொண்டும் அகங்காரமாகிறமுடிச்சையுடையதாயுமிருக்கிற ஆசையானதுஎத்தத்தில் நுனியிற்கட்டினக

யிறுபோல் அலைந்துகொண்டிருக்கின்றது * மூக்கிற்கயிறுகோக்கப்பட்டஎருதைப்போல ஜீவர்கள்தேகத்திற்குள்ளிருக்கிற மனதிற்கோக்கப்பட்டும் ஒருவராலறுக்கக் கூடாததாயுமிருக்கிற ஆசையினால் இகபரபலன்களைக்கொடுக்குமனேக சாதனங்களாகிறசுமைகளைச்சுமக்கப்படுகின்றதுகள் * வேடப்பெண்களால் பட்சிகளிடங்களில் வலையானது விசிறப்படுவதுபோல நித்தியம்விஷயங்களிலிழுக்கிற சுபாவத்தையுடைய ஆசையினாற் ஜீவர்களிடங்களிற் புத்திரமித்திரகளத்திராதிரூபமானவலையானது விசிறப்படுகின்றது * ஆசையானதபராபட்சத்திரவைப்போல தீரனாயிருந்தாலும் பயப்படுத்துகின்றதுவிவேகநேத்திரமுடையவனாயிருந்தாலுங்குருடனாகச்செய்விக்கின்றது சுகமுடையவனாயிருந்தாலுந்துன்பத்தைச்செயவிக்கின்றது * வெகுகோணலாயும் விடையங்கிடைத்தபோதற்பசுகத்தைக்கொடுக்கிறதாயும்முடிவிலவிஷத்தைப்போல்வயிரம் பந்தம் கொலை முதலியகொடுமைகளைக்கொடுக்கிறதாயுமிருக்கிற ஆசையானது கிருஷ்ண சர்ப்பம்போலக்கொஞ்சந்தொடப்பட்டாலும்மோகத்தைச்செய்விக்கின்றது கோணலாவது சூது வஞ்சனையையுடையது * மாயை ரோகம் தரித்திரம் எளிமை இவைகளைக்கொடுக்கிற தாயிருக்கின்ற ஆசையானதுகறுத்த இராட்சசியைப்போலபுருஷர்களுடையயிருதயத்தைப்பிளக்கின்றது * ஆசையானது எப்போதுமிகுந்தபாபத்திற்கேதுவாயும் முடிவில்துக்கத்தைக்கொடுக்கிறசித்தப்பிராந்தியையுண்டுபண்ணிக்கொண்டும்பெரிதான எத்தனத்தையுடையதாயும்அதிகமான நட்பையுடையதாயுமிருக்கின்றது* ஆசையானதுகிழத்தாசியைப்போலஒருவன்சித்தத்தைவசப்படுத்தாமலிருக்கையிலும்எல்லாரையுமநுசரித்தும் ஒருபலத்தையுமடைகிறதில்லை *விரிவானபிரபஞ்சமாகிறநாட்டியசாலைகளிற்சோகம்மோகமுதலானபலவிதரசங்களால் நிறைந்திருக்கிற சமுசாரங்களுடைய பெரிதானகூட்டத்திற்குள்ளேஆசையானதுகிழக் கூத்தாடிச்சியாகவிருக்கின்றது* ஆசையானது துற்பலமானகூத்தாடிச்சியைப்போலஎதைச்சாதித்தற்குவலிமையிலலையோஅந்தவிஷயத்திலலைந்துகொண்டுஆனந்தமில்லாமற்கூத்தாடுகின்றது *சஞ்சலத்தையுடையஆசையாகிறபெண்மயிலானது மழைகாலத்துப்பனியானதுபோல மோகமாகிறமேகமறைக்கும்போதுமிகவுங்கூத்தாடுகின்ற துவிவேகமாகிற சரற்காலவெளிச்சமுண்டாகும்போது ஒழிவையடைகின்றது அசாத்தியமானகாரியங்களில்நினைப்பையடைகின்றது *ஆசையாகிறகுரங்கானதடையக்கூடாத விஷயத்திலுநினைப்பையடைகுதுதிருப்தியடைந்தபோதிலும்லாபத்தையேயிச்சிக்கின்றது ஒருவிடத்தில்வெகுகாலமிருக்கிறதில்லை *ஆசையானதுசுபத்தை





யாரம்பித்ததைமுடியாமலசுபமாயும் எத்தனஞ்செய்ததற்குவிரோதமாயுமிருக்கிறசகலகருமத்தையுஞ் சீக்கிரமாகவேயநுசரித்தெப்போதுமெத்தனஞ்செயதுகொண்டிருக்கின்றது *இருதயகமலத்திற்குவண்டாயிருக்கிற ஆசையானதுபாதாளத்திலுமாகாசத்திலுந்திக்குகளிலுமொருக்ஷணத்திற்சுற்றிக்கொண்டுவருகின்றது * ஆசையானதந்தப்புரத்தில்வசிக்கின்றவனையுமிழுத்து மிகுந்தசங்கடத்தோடுகூட்டிவைக்கின்றமையாற் சமுசாரதோஷங்களுக்குள்ளாசையொன்றேமிகவுமரணமுதலானதுக்கத்தைக்கொடுக்கின்றது [மச்சந்தைப்பிடிக்கிறதூண்டிற்கயிறுபோலக்கொல்லுகிறவன்சமீபத்திலிழுத்துமரணமுதலானதுக்கத்தைக்கொடுக்குதென்றுகருத்து] ஆசையாகிறமேகவரிசையானது மிகவுமஞ்ஞானமாகிறசயித்தியத்தையும் பிரகாசமான ஆத்மாவாகிற சூரியனைமறைத்தும் முன்பின்றெரியாமலிருக்கிற அவிவேகரூபமானபனியினாற் பூரணமாயுமிருக்குது * ஆசையாகிற இந்திரதனுசானது விசித்திரமான ஆச்சரியங்களுக்கேதுவான விஷயங்களாகிற பலவிதவருணமான உருவையுடையதாயும் நற்குணமாகிறநாணில்லாததாயும் நீண்டும் அசுத்தனானகறுத்தமேகத்திலிருப்பதாயும் ஒருபொருளுமாகாமலிருக்கிறமனதாகிற ஆகாயத்திலிருப்பதாற் சூன்னியமாயுமிருக்கின்றது * ஆசையானது நற்குணமாகிறபயிர்களுக்கிடியாயும் ஞானமாகிறதாமரைப்பூவுக்குப்பனியாயுமாபத்தாகிறபயிர்களுக்குசரற்காலமாயுந் தமோகுணத்தினாலுண்டானகாரியங்களாகிறஇருட்டுக்கு எமந்தகால இரவாயுஞ் சமுசாரமாகிறநாடகத் துக்குக்கூத்தாடிச்சியாயும்பிறவிர்த்தியாகிற கூண்டுக்குப்பட்சியாயும் மனோரதங்களாகிறகாட்டுக்குமானாயுங்காமவிகாரமாகிற பாட்டுக்குவீணையாயும் விவகாரமாகிறகடலுக்குப் பெருக்காயும் மோகமாகிறயானைக்குச்சங்கிலியாயுஞ் சகமாகிற ஆலமரத்துக்குவிழுதாயுந் துக்கமாகிற ஆம்பலுக்குநிலவாயுஞ் சரைமரணங்களுக்குமுக்கியமான இரத்தினச்சிமிளாயும் ரோகம் மனோவியாதிகளாகிற விளையாட்டுக்கு மதத்திருக்கிறபுரீயாயுமிருக்கின்றது * ஆசையாகிற ஆகாசவீதியானது க்ஷணகாலஞ்சிறிதுவிவேகரூபமானபிரகாசத்தினால் நிர்மலமாயும் க்ஷணகாலமஞ்ஞானமாகிறயிருட்டினுடையதுளியோடுகூடியும் க்ஷணகாலமோகமாகிறபனியினாற்சூழப்பட்டுமிருக்கின்றது * (அ-கை) இந்தப்படி ஆசையைவருணித்ததினுபசாந்திக்குப்பலத்தைச்சொல்லுகிறார் | இராட்சசஞ் சாரநீங்கும்பொருட்டு மேகங்களானிறைந்த அபரபட்சத்திரவானது சூரியனால் நாசமடைவதுபோலத்தேகதுன்பங்களால் நிறைந்தசமுசாரமானதுநீங்கும்பொருட்டுவிவேகத்தினாலாசையானது நாசமடைகின்றது * எவ்வளவுமட்டு

மாசையாகிற விஷபேதியானதனுசரிந்துக்கொண்டிருக்குதோ அவ்வளவுமட்டுமாத்மவிசாரணையில்லாமலிருக்கிற இச்சீவர்கள் வியாகுலமான சித்தத்தையுடையதாகிமோகத்தை யடைகின்றதுகள் * (அ-கை) அப்போததை விடுத்தற்குபாய மேலருளிச்செய்கிறார் | இவ்வுலகமானது விடய நினைப்பைவிடுவதனாலேயேசகல துன்பங்களையும் விடுகின்றது ஆகையாலாசையாகிறபேதிக்கு விடயங்களை நினையாமலிருப்பதேமந்திரமென்றுசொல்லிப்படுகின்றது * மீனானதுமடுவிலிருக்கிறசெத்தை கல்லு கட்டைமுதலானத்தையும் புசிக்கத்தக்கமாமிசமென்றெண்ணிக்கிரகித்து முடிவிற்றூண்டிமுள்ளையுங்கிரகித்தடிபடுவதுபோல் ஆசையானது நானாவிஷயங்களையுங்கிரகித்துமுடிவில்மோட்சத்தையுமிச்சித்தடிபட்டுப்போகின்றது * சூரியகிரணங்கள் தாமரைப்பூவைமலர்விப்பதுபோல ரோகபீடையும் ஸ்ரீயும் ஆசையும் தயிரியபுருஷனையும் அதயிரியனாகச்செய்விக்கின்றது * ஆசையாகிறகொடிமூங்கிலானதுதிடமான அபிமானமாகிற கணுக்களையுடையதாயும் நீண்டிருக்கிறசிந்தைகளாகிற நுனிமுட்களையுடையதாயுஞ் சூன்னியமாகிற உள்ளோட்டையையுடையதாயும் எப்போதுமுத்துமணிகளில் பிரீதியையுடையதாயுமிருக்கின்றது * (அ-கை) அப்படிக்கொத்த ஆசையையறுப்பதற்குவிவேகமேகாரணமென்றுதெரிவிக்கிறார் | பெரிதான புத்தியையுடையவர்களொன்றாலு நீக்கக்கூடாத இவ்வாசையையும்விவேகமாகிறநிர்மலமானகத்தியினாலறுத்துப்போடுகிறார்கள் மிகவுமாச்சரியம் * கத்திமுனை வச்சிராயுதங்காய்ந்த இரும்புப் பொறிகளிதுகளெல்லா மிருதயத்திலிருக்கிற இவ்வாசையைப்போலக்கூர்மையுள்ளதல்ல [கத்திமுனைமுதலானது வெளியிலிருக்கின்றமையால் ஒருகாலனர்த்தத்தைக்கொடுக்குமாசையோவெனிலுள்ளேயிருக்கின்றமையால் எப்போதுமனர்த்தத்தைக்கொடுக்குமென்றதுகளைக் காட்டிலுமீதிகமெனவறிக] ஆசையாகிற தீபச்சுவாலையானது நடுவில்போகங்களையநுபவிக்கிறதாகிறபிரகாசமாயும் முடிவில்பாவத்தையும் மரணத்தையுங்கொடுகிறதாகிற மறப்பையும் தாய் மனைவி புத்திராளிவர்களிடங்களில் சினேகமாகிற எண்ணை நீளமானதிரியினால் நீண்டதாயும் பால்லியம் எவ்வனம் கிழத்தனமிவைகளால் பிரத்தியட்சமாயும் தனக்கிஷ்டமானபொருள் போனத்தினாலுண்டாகிறசகிக்கக்கூடாத சூட்டையுடையதாயு மிருக்கின்றது * இப்படிக்கொத்த ஆசையானதுதீரத்தினால்மேருவுக்குச் சரியாயிருந்தாலுந் தெரிந்தவனாயிருந்தாலுஞ் சூரனாயிருந்தாலும் வாங்கிறதில்லையென்கிற விரதத்தினாலசையாதவனாயிருந்தாலும் நிமிஷத்திற்றுரும் பாகச்செய்கின்றது [செத்தையிலுமெ



பஞ்சுலெகு பஞ்சிலும்யாசகன்லெகு அப்படியிருக்கக்காற்றேனிவனையடித்துக்கொண்டுபோகவில்லையெனில்லென்னையிவன்யாசிப்பனென்னுங்கருத்தினாலென்வறிக] ஆசையாகிறவிந்தியமலையின்றாழ்வரையானது விரிவானசாகசகாரியங்களாகிற காடுகளையுடையதாயும் ஒருவராலுங் காணக்கூடாததினால் பயங்கரமாயும் வலைபோற்கட்டுதற் கேதுவான ஆசாபாசமாயிருக்கிற இரசோகுணங்களாகிற கொடிகளாலுந் தூட்களாலு நிறைந்தும் அஞ்ஞானமாகிற இருட்டோடுகூடியும் மோகமாகிறபனியையுடையதாயுமிருக்கின்றது * (அ-கை) எப்படிவிரிவாயிருக்கின்றது எப்படி ஒருவராலறியக்கூடாததாயிருக்கின்றது தனனுடையஇடம் விஷயம் நாமமிதுகளின்பேதமிருக்குதெ இதெப்படியொன்றாகுமெனி லதற்குமுன் சொன்ன அருத்தத்தைத் திஷ்டாந்தத்தோடுகாட்டுகிறார் | இரசனேந்திரியரூபமாய்நாவிலிருக்கின்ற ஒருமாதுரியசத்தியேசகல உலகங்களுக்குள்ளிருக்கிற சகலசெலத்திலுமிருப்பையடைந்து நதிசமுத்திரமுதலானத்தில் பெருகுகின்றமையால்க்ஷீரமென்றும் நெகிழுகின்றமையாலுதகமென்றும் சத்திக்கின்றமையாலம் பென்றுமிப்படிக்கொத்த கிரியாபேதத்தினா லனேகவிதநாமமடைந்திருக்கிற சலத்தி லிருந்துகொண்டு ஒன்றாக அறியபடாததுபோல சரீரத்தினிடத்திலிருக்கிற ஆசை ஒன்றேசகல வுலகங்களுக்குள்ளிருக்கிற அநுபவிக்கத்தக்கவஸ்துக்களைவிஷயமாகப்பண்ணிக் கொண்டுவிவகாரபூமியில் ஸ்ரீவிஷயத்தைப்பற்றி இராகமென்றும் தனதான்னியத்தைப்பற்றிக்காமமென்றுங் கொடாதிருத்தலைப்பற்றிலோபமென்றுமிவைமுதலிய அனேகவிதநாமங்களையடைந்து ஒன்றாகவறியப்படவில்லை *.

பதினேழாவதுசருக்கமுற்றிற்று.

# பதினெட்டாவது சருக்கம்.

## தேகதூஷணம்.

---

இச்சருக்கத்தில்மனோவியாதிதேகவியாதி இவைகளால் மிகுந்ததுன்பத்தையுடையதாயும் சனாமரணங்களாலனித்தியமாயுமபிமான மாசைமுதலானதுகளுக்காதிகாரணமாயுமிருக்கிறதேகத்தையேநிந்திக்கப்படுகின்றது.

(அ-கை) ஆசைதுக்கயேதுவானாலாகட்டும் தேகத்தோடிருந்துசுக

த்தையனுபவிக்கலாமேயெனிலந்தத்தேகமுந் துக்கத்திற்குக் காரணமென்றிராமர்சொல்லுகிறார் | மலமூத்திரங்களால் நிறைந்த ஈரமான குடலினாலும்நரம்பினாலும் நெருக்கமாயும் பாலியமுதலான விகாரங்களையுடையதாயும் மரணத்தையடைகிறதாயுமிருக்கிற தேகமானது சமுசாரத்தில்மிகவுந்துன்பத்திற்காகவேவிளங்குகின்றது ❋ இந்தத்தேகமானது சடமாயிருந்தாலுமியல்பாகப்பிராணன்முதலான நான்கு கோசங்களுக்குமாதாரமாகையினாற்சத்துமுதலானவைந்துகுணங்களையுடையவனான ஆத்மாவாகத்தோற்றுகின்றமையால்யுத்தியினால்மோட்சாதிகாரம்வரும்போது நன்றாகுது அதில்லாமலிருக்கும்போதுகெட்டதாகுதுசடமாகாமலுஞ் சேதனமாகாமலுமிருக்கின்றது ❋ ஆகையாலிந்தத்தேகஞ்சித்தாசடமாவென்கிறஇரண்டுபார்வைகளுடையமத்தியில் நிச்சயமுண்டாகாததினால் துஷ்டமனதையுடையதாயுமிதைச்சோதித்துப்பார்க்கும்படியான விவேகமில்லாததினாலும் மூடமான ஆத்மாவையுடையதாயுமிருக்கின்றதால் மோகத்தையேகொடுக்கின்றது ❋ இந்தத்தேகமற்பமான அன்னபான முதலானத்தினாற் சந்தோஷத்தையுமற்பமானகுளிர்வெய்யில் முதலானத்தினால்துக்கத்தையு மடைகின்றது அசுசியாயுந் துற்குணமாயு மிருக்கிறதேகத்துக்குச் சரியான துக்கிக்கத்தக்கவஸ்துவொன்றுமில்லை ❋ (அ-கை) தேகத்தை அபிமானியாதிருப்பதற்காகமரமாகச்சொல்லுகிறார் | எப்போதுமுண்டாய் நசிக்கிறதாயுமற்பமகிழ்ச்சியுண்டாகும்போதெல்லாம் பற்களாகிறதாதுகளோடு கூடினபுன்சிரிப்பாகிறமலர்ந்த புட்பத்தினாலலங்கரிக்கப்பட்டுங் கைகளாகிறகிளையையுடைய தாயுங்கண்களாகிற வண்டிருப்பதற்கிடமான துவாரங்களையுடையதாயுந்தலையாகிறபெரிதானபழத்தையுடையதாயும் மரங்குத்திப்பட்சிகளாற்குத்தப்பட்டதுபோலிருக்கிறகாதுகளாகிற துவாரத்தையுடையதாயுஞ் சீவேசுவரர்களாகிற இரண்டுபட்சிகளுக்குக்கூண்டான இருதயத்தையுடையதாயும் யௌவன அழகாகிறநிழலோடுகூடிக்கொண்டுமிருக்கிற இந்தத்தேகரூபமான மரமானதாருக்கனுகூலமாருக்குச்சத்துரு இந்தத்தேகத்தில் விசுவாசத்தையாவது துவேஷத்தையாவதுசெய்வது யுத்தமல்ல [உபேட்சைசெய்யத்தக்கதென்பதுகருத்து](அ-கை) ஆத்மாவென்றுசகலசெனங்களுக்கும் பிரசித்தமாயிருக்கிற இந்தத்தேகத்தை எப்படி உபேட்சைசெய்யத்தக்கதெனில் | சமுசாரசமுத்திரத்தைத்தாண்டுதற்காக அடிக்கடிகிரிக்கப்பட்டும் ஓடமாயுமிருக்கிற இந்தத்தேகத்திலியாருக்கும் ஆத்மபுத்தியுண்டாகும் ❋ (அ-கை) தேகத்தைவனமாகத்தூஷித்தல் | வெகுகுழிகளால் நிறைந்தும் மயிர்களாகிறகணக்கில்லாதமரங்களையுடையதாயு மிந்திரியமாகிறகாடிகளு



டையவலிமையான சேஷ்டைகளினாற்பயங்கரமாயுஞ் செனங்களில்லாததினாற்சூன்னியமாயுமஞ்ஞானமாகிறவிருட்டினாலொருவராலறியக்கூடாத திக்குகளையுடையதாயுமிருக்கிறதேகமாகிறவனமானதெனக்கிஷ்டமாகவிருக்கவில்லை ❋ (அ-கை)தேகத்தையிரணபேரிகையாகத்தூஷித்தல் | மாமிசம்நரம்பு என்பு இவைகளாற்சூழப்பட்டும் அசாரமாயும்பொத்தலாயும்வெளியிற்புறப்படுதற் கேதுவான உபாயத்தைச்சொல்லுகிற உபதேசசத்த மில்லாமலுமிருக்கிற இச்சரீரமாகிற இரணபேரிகையில் மூஷிகையைப்போல நானிருக்கிறேன் ❋ (அ-கை) தேகத்தையிச்சிலிமரமாகத்தூஷித்தல் | சமுசாரமாகிறகாட்டில்முளைத்தும்மனதாகிற குரங்கையுடையதாயுந் துன்பமாகிறபுழுக்களாற்றுவாரம்பண்ணப்பட்டும் ஆசையாகிறசற்பத்துக்குவீடாயுங்கோபமாகிறகாகத்தினாற் கூண்டுகட்டப்பட்டும் உள்ளங்கைகளாகிற பூங்கொத்துக்களாலழகாயும்பிராணவாயுவாகிற காற்றினாலசைகின்றதாயு மிந்திரியங்களாகிற பட்சிகட்கிடமாயுங்காமனாகிறவழிநடக்கிறவனாலடையப்பட்டுமகங்காரமாகிற சமூகினாற்கூண்டுகட்டப்பட்டும் வயிறாகிறபொந்தை யுடையதாயுஞ் சன்மவாசனையாகிற விழுது களாற் சூழப்பட்டுமிருக்கிற இச்சரீரமாகிற இச்சிலிமரமானதெனக்குச் சுகத்தைச் செய்விக்க வில்லை ❋ (அ-கை) தேகத்தைவீடாகத்தூஷித்தல் | அகங்காரமாகிற புருஷனுக்குப்பெரியவீடாயிருக்கின்றஇச்சரீரம்பூமியில்விழ்ந்து புரண்டாலுமல்லது நின்றாலுமிதனாலெனக்காகவேண்டுவதென்ன ❋ இந்திரியங்களாகிற பசுக்களையுடையதாயு மாசையாகிற மனைவியையுடையதாயுஞ் சித்தமாகிற வேலைக்காறனை யுடையதாயுந் துன்பமாகிறகுழந்தைகளின்மூச்சையை யுடையதாயுந்துற்சேஷ்டையாகிற வேலைக்காரியை யுடையதாயுஞ் சிந்தையாகிறபெண்களையுடையதாயும் நிறையாதவயிறாகிறபள்ளத்தையுடையதாயுஞ் சனையாகிற சுண்ணாம்பினால் வெளுப்பாயும் பயங்கரமானதொனி பொருந்தியபிராணவாயுவாகிற காற்றின்வேகத்தையுடையதாயும் வாயாகிறவாயில்நாவாகிறபயங்கரமானகுரங்கையுடையதாயும் பற்களாகிற என்புத்துணுக்கைகளாற்கோவைசெய்ததோரணத்தையுடையதாயும் மனதாகிறபெருச்சாளியினாலறுக்கப்பட்டுமெலிந்ததாயும் க்ஷணகாலப்புன் சிரிப்பாகிற தீபப்பிரகாசத்தையுடையதாயும் க்ஷணகாலம் அஞ்ஞானமாகிற இருட்களாற்சூழப்பட்டும் யாதிவியாதிகளாகிற வஸ்துக்களால நெருக்கமாயு மிருக்கிற தேகமென்னும்வீடானதெனக்கிஷ்டமாகவிருக்கவில்லை ❋ அற்பபெலத்தையுடையவன் மிகுந்தசேற்றிற் புதைந்திருக்கிறயானையையெடுத்தற்குக்கூடாததுபோலதேகமாகிறவீட்டைத்தரித்தற்கு நான்வல்லவனல்லன் ❋ காலி

மரணதுசிறிதுதினங்களிலெல்லாத்தையுநாசஞ்செய்கின்றமையாற்சம்பத்து இராச்சியம் தேகம் இஷ்டமானதொழில்களிவைகளாலாக வேண்டுவதென்ன * இரத்தமாமிசரூபமாயும் நாசத்தையேசுபாவமாகவுடையதாயுமிருக்கிற இத்தேகத்தை உள்ளிலும்புறம்பிலும்விசாரிந்தால் என்ன அழகிருக்கின்றதுசொல்லும் * இந்தச்சரீரங்கள் மரணகாலத்திற்சீவனை யனுசரிக்கவில்லையோ இரட்சித்ததையும் போஷித்ததையுமறந்த அந்தநன்றியில்லாதசரீரங்களில் புத்திமான்களுக்கு என்னவிசுவாசஞ்சொல்லும் * மதயானையினதுகாதுநுனியைபபோற சஞ்சலமாயுமதிற்றெறுங்குகிற சலத்துளிபோலநசுவரமாயுமிருக்கிறதேகமானது என்னை எவ்வளவுக்குள்விடவில்லையோ அவ்வளவுக்குள்ளே நானிதைவிடுகிறேன் * சடமான இந்தத்தேகமானது அடிக்கடி முன்னனுபவிக்கப்பட்ட பாவாபாவரூபமானசுகதுக்கங்களையேதிரும்பவுமனுபவித்துக்கொண்டு வெட்கத்தையடைகிறதில்லை [அதேகமெனனிரசடமானபடியினலென்பதுகருத்து] வெகுகாலம்பிரபுவாகவிருந்தும் பாக்கியலட்சுமியையடைந்தும்வளர்ச்சியையடைகிறதுமில்லை நிலையையடைகிறதுமில்லையிந்தச்சரீரத்தைஎனிரட்சிக்கவேண்டும் * சரீரமானது சம்பன்னனுக்குந்தரித்திரனுக்குமொருவிசேஷத்தையறியாமற்சரியாகவேயிருந்துகிழமாகிறகாலத்திற்கிழத்தனத்தையுமரணகாலத்தின்மரணத்தையுமடைகின்றது * விஷயமென்னுஞ்சேற்றின்ரசத்தைப்புசிக்கின்ற இச்சரீரமென்னுமாமையானது ஆசையாகிறபள்ளத்தை யுடையதான சமுசாரமாகிறகடலின்மத்தியிற்றூங்குவதுபோல மூடமாயிருக்கின்றதனுற்குருவைத்தேடுதல்கேட்குதல்முதலிய ஆத்மானுகூலவியாபாரமில்லாமலூமையாயிருக்கின்றது * கொளுத்துகிறதொன் றுக்கேமுக்கியபிரயோசனமாகவுடையதானசரீரமாகிறகட்டையானதுகளிச்சமுசாரமாகிறகடலில்வேகுவாய் மிதக்கின்றது அதற்குள்ளாத்மாவையறிகிறதொருவனையேபுருஷனாகவறிகிறார்கள் * தேகமென்னுந்தவனையானதுபாபமென்னுஞ் சேறுகளோடுகூடினவிஷயமென்னுங்குட்டைகளின்முழுகிக்கொண்டு சீக்கிரத்திலேயேகிழத்தனத்தையடைந்து எங்கே எப்படிசீக்கிரமாய்ப் போய்விடுகிறதோ அதறியப்படவில்லை * சாரமில்லாத எத்தனங்களையுடையதாயு மிராசதகுணப்பிரவிர்த்திமார்க்கத்தினுற்போகிறதாயுமிருக்கிறசரீரரூபமான பெருங்காற்றனது ஒருவராலும் பார்க்கப்படவில்லை * காற்று தீபம் மனது இதுகளின்போக்குவரத்துமறியப்படுகுதுசரீரத்தினுற்பத்தி நாசங்களொருக்காலுமொருவராலுமறியக்கூடாது * அஞ்ஞானமாகிறமதுவினுற் புத்திமயக்கத்தையடைந்தவர்களாயுஞ் சரீரத்திலெனுநாளிருக்கலாமென்னுமபிமானமு



ள்ளவர்களாயுமிருக்கிற புருஷர்களை நன்றுகச்சுடவேணும் * நான்தேகத்தையுடையவனுமல்ல தேகமும் என்னுடையதல்ல கடடடம்போலெதிரேதோற்றிக் கொண்டிருக்கிற சடமான இத்தேகமும்நானல்ல வென்றுவிசாரணைசெய்து ஆத்மாவினிடத்திற் சுகத்தையடைந்தமன முடையவர்களேபுருஷோத்தமர்கள் * மானுவமானங்களாலதிகமாயும்வெகுலாபங்களினுலழகாயுமிருக்கிற கெட்டப்பார்வைகளானதுகள்சரீரத்திலேயே அபிமானம் வைத்திருக்கிற புருஷனைமரணத்தையடையப்பண்ணுகின்றதுகள் * சரீரமாகிறபள்ளத்திற்படுத்துக்கொண்டும் பஞேக்கியமான உருவையுடையதாயுமிருக்கிற அகங்காரத்தினுலுண்டானபோகவாசையாகிறமோகினிடபிசாசினுல்நாங்கள் வஞ்சிக்கப்பட்டோம் [வஞ்சிக்கப்படுதலாவது அசாரமான தேகத்திற்சாரபுத்தியைச்செய்வித்துத் தத்துவமானசாரத்தையபகரிக்கிறத்தினுலென்பதுகருத்து] பல்நன்மையுமுடையபுத்தியாகிறதனித்தவெளப்பெண்ணனவள் தேகாபிமானத்தையடைந்திருக்கிற இடபிராந்தினராமாகிறகெட்டவிராட்சசியினுல்வஞ்சிக்கப்படுகிறுள் கஷ்டம் [தனித்தபுத்தி என்றதனுலவிவேகமுதலானசகாயமில்லை யென்பதுகருத்து] இப்பிரபஞ்சத்திலோர்பொருளுஞ் சத்தியமாகாத்தினுலதற்குள்ளகப்பட்டிருக்கிற இத்தேகமுந்தானேவெநததுபோலவுமில்லாததுபோலவுமிருக்கின்றது இதனுற்சனங்களைவஞ்சிக்கபபடுகின்றது ஆச்சரியம் * (அ - கை) சரீரமானதுசெனங்களைவஞ்சிப்பதனுலொருபிரயோசன முண்டாகுமேயாகிலப்போது உத்தமமானுலுமாகலாமதுவுமில்லையென்றுசொல்லுகிறுர் | இச்சரீர மென்னும்பழுத்தயிலையானதுமலையருவியினதுசலத்துளிபோலச் சிறிது தினங்களிலேயே ஒரு எத்தனமுமில்லாமல்நாசத்தையடைகின்றது * சீக்கிரத்தில் நாசத்தையடைகின்றஇச்சரீரமானது கடலிற்குமிழிபோலச்சமுசாரமென்னும் பெரிதானசுழியிற்சனக்கும் பிறருக்கும் பிரயோசனமில்லாமல்வீணுகச்சுற்றுகின்றது * (அ - கை) தேகமுதலான திரிசியவற்கத்துக்கு அசத்தியத்துவமெப்படியெனில் | பொய்யான அஞ்ஞானத்தின் விகாரமாயுஞ் சொப்பனத்திற்காணப்படுகிற டட்டணத்திற்குச்சரியாயும் மிகவும்பிரகாசமாய்நாசத்தையுடையதாயுமிருக்கிறஇச்சரீரத்திலொருக்ஷணகாலமுமெனக்குவிசுவாசமில்லை * மின்னற்களையுஞ்சரற்காலமேகங்களையுங்கந்தருவநகரங்களையுமெவன்நிலையென்றுநிச்சயம்பண்ணுகிறுனோஅவனித்தேகத்தில்விசுவாசத்தைச்செய்யட்டும் * சீக்கிரமாய் நாசத்தையடைகிறபதார்த்தங்களுக்குள்ளெப்போதும் நசுவரமானகாரியங்களுடையகூட்டத்தைச்செயிக்கிற மின்னல் சரற்காலமேகமுதலானதுகளையுஞ் செயித்துக்கொண்டும் வலுவான

நாசத்தையுடையதாயுமிருக்கிறஇந்தத்தேகத்தைநான்திரணப்போலித்துச்
சமென்கிற புத்தியினுற்றள்ளிச் சுகமாயிருக்கிறேன்*.

பதினெட்டாவதுசருக்கமுற்றிற்று.

# பத்தொன்பதாவதுசருக்கம்.

## பால்ய தூஷணம்.

இச்சருக்கத்திலஞ்ஞானம் பசி தாகம் ரோகம் அசுத்தம் சாபல்லியமி
வைகளாற்கெடுக்கப்பட்டும் பசுபட்சிகளுக்குச்சரியான நடக்கையையுடைய
தாயுமிருக்கின்றபால்யத்தைநிந்திக்கப்படுகின்றது.

(அ-கை) (மகாராசனும் மகாப்பிராமணனும் மகாகுமாரனுமிகவு
மானந்தத்தையடைகிறர்களென்றுசுருதியிருக்கின்றமையால்) முன்சருக்
கத்திற்சொன்னதேகத்தினுடையசகலாவஸ்தைகளுந் துக்கருபங்களல்ல அ
ந்தத் தேகத்தினுடைய பால்யமானது சகலசெனங்களாலுமிச்சிக்கத்தக்க
தாகையினல் மிகவுமனேக்கியமாயிருக்கு தென்றுசங்கித்தால் அப்பால்
யம்வெகு அனர்த்தங்களை யுடையதென்றிராமர் சொல்லுகிறர் | பலவித
காரியங்களைச்செய்யவேண்டுமென்னுமபிமானமாகிற அலைகளை யுடை
யதாயும் நிலையில்லாத தேவர்முதலான நான்குவிதசரீரங்களாகிற குமி
ழிகளையுடையதாயு மிருக்கின்ற பவசமுத்திரத்தில் மனுஷசென் மத்தைய
டைந்துஞ்சீவர்கள் துன்பத்தின்பொருட்டே பால்யத்தை யடைகின்றது
[மனுஷசென்மமுண்டாகிறது துல்லபமென் றுசுருதிசொல்லுகின்ற தெ
ன்பதுகருத்து] (அ-கை) சொன்ன அருத்தத்தைவிரிவாகத் தெரிவிக்கி
றர் | வலியின்மை ஆபத்து பட்சணத்திலாசை வசனிக்காமலிருக்கைமூட
ப் புத்திவிளையாடுகிறத்திலாசை சஞ்சலமாயிருக்கை பட்சணமும் விளை
யாடலுமில்லாமற் போனல் தீனமாயிருக்கை ஈதெல்லாம்பால்யத்திலுண்
டாகின்றது * கோபமழுகை யிவைகளாற்குரூரமாயுந்தீனத்தனத்தினுன்
மெலிந்து மிருக்கிறதிசைக்குப் பால்யமானது யாவைகளுக்குக் கட்டுத்தறி
போலிருப்பிடமாக விருக்கின்றது * பால்யத்தில் மனதை யறுக்கின்றசிந்
தைகளைப்போல மரணம் சரா ரோகம் ஆபத்து ஏவ்வனமிவைகளிற் கி
டையாது * பசுமுதலானதுகளுக்குச்சரியானநடத்தையை யுடையதாயும்



ஏல்லாராலும்பயப்படுத்தப்பட்டுஞ் சஞ்சலமாயுமிருக்கிறபாலகனது நடத்
தையானதுமரணத்திலுமதிகதுன்பத்தைக்கொடுக்கின்றது * ஏதிரோயிருக்
கிறபிரதிபிம்பம்போல்விளங்குகின்றதிடமான அஞ்ஞானத்தை யுடையதா
யும்பலவித சங்கற்பங்களால் துற்பலமாயும் நினைத்தவிடயங்கிடையாத
தனலறுபட்டதுபோலவுஞ்சிதறினது போலவுமிருக்கின்ற மனதையுடைய
பாலயமானது ஏவனுக்குச்சுகத்தைக்கொடுக்கின்றது* பால்யத்திலறியா
மையினலடிக்கடிசலம் தீ காற்று இவைகளினின் றுமெப்போது முண்டா
னபயத்தினுற்றுன்ப முண்டாவது போல ஏவனுக்கு ஆபத்திலேதானுண்
டாகும் * பாலகன்கெட்டவிளையாட்டு கெட்டநடத்தை கெட்டவிச்சையி
வைகளிற்பலவந்தமாகவிழுந்துசாரமென்கிறபுத்தியினல் மோகத்தையடை
கிறன்*பிரயோசனமில்லாதகெட்டவிளையாட்டையுடையபால்யமானதுபு
ருஷனுக்கு உபாத்தியாயர்முதலானவர்களாலடிபடுகிறத்தின்பொருட்டாகு
தேதவிரசாந்தியின்பொருட்டாகிறதில்லை* தோஷங்கள் துராசாரங்கள்
துற்வார்த்தைகள் துஷ்டமனேவியாதிகளிதுகளெல்லாங் கெட்டதானபொ
ந்திலேகோட்டான்கள்போலப் பால்யத்திலிருக்கின்றதுகள் * (அ-கை)ச
ருக்கமுதலிற்பால்யமிகவுமனேக்கியமென்றுட்சேபித்ததற்குச் சமாதானஞ்
சொல்லுகிறர் | பால்யத்தை நல்லதென்றெண்ணுகிற கெட்டபுத்தியுள்ள
மூடபுருஷாளைச்சுடவேண்டும் [பால்யமனேக்கியமென்றுசொன்ன சுரு
தியின்றுற்பரியமிராகாதி விகாரமுண்டாகாம லிருக்கும்போது சுபாவமான
ஆத்மசுகமுண்டாவதற்குயோக்கிதை யுண்டென்னுங்கருத்தையுடையதேத
விரபால்யமனேக்கியமன் றென்பதுகருத்து](அ-கை)அப்பால்யமனேக்கி
யமல்லவென்பதையேசொல்லுகிறர் | யாதொரு பால்யத்தில் மனதானது
தொழிற்களில் உஞ்சற்போலலைந்துகொண்டிருக்குதோமூன் றுலகத்திலு
நன்றுகாமலிருக்கிற அப்படிப் பட்டபால்யமு மெபபடிச்சந்தோஷத்தின்
பொருட்டாகும் * (அ-கை) கேவலம்மனுஷியாளுக்குமாத்திர மிந்தப்பா
ல்யந்துன்பத்தைக்கொடுக்கிறதல்லபின் னையோவெனில் சகலசீவர்களுக்கு
ந்துன்பத்தைக்கொடுக்கிற தென் றுசொல்லுகிறர் | சகலசீவர்களுக்கும்மன
தானதுசகலாவஸ்தைகளிலுமேசஞ்சலமடைகுது அதிலும்பால்யத்திற்பத்து
பங்கதிகமாகச் சஞ்சலமடைகின்றது [மனதிற்கதிகசஞ்சலமே அதிகதுக்க
த்திற்கேதுவென்பது பிரசித்தமெனவறிக] மனதுசுபாவத்திலேயேசஞ்சல
ம் பாலியமுமிகவுஞ்சஞ்சலமவ்விரண்டுஞ்சேரும்போதவைகளின்கெட்டசஞ்
சலத்தினலுண்டான ஆபத்திற்றன்னையெவனிரட்சிக்கிறவனிருக்கிறன் *
பால்யத்தோடுகூடினமனதினிடத்திலிருந்தும் ஸ்ரீகளுடையகண்கள் மின்

கள

னல்களக்கினிச்சுவாலைகள் அலைகளிதுகளெல்லாஞ்சஞ்சலத்தையப்பியாசிக்கப்பட்டது நிச்சயம்* எப்போதுஞ்சஞ்சலசுபாவமாயிருக்கிறபால்யமுமனதுஞ் சகலதொழிற்களிலுமன்னன் தம்பிகள்போற்காணப்படுகின்றதுகள் * மனுஷர்கள்சீமாலையனுசரித்துப்பிழைப்பதுபோல் பலவிதனங்களும்பலதோஷங்களும் பலமனோவியாதிகளும் பாலகனையேபற்றிக் கொண்டுபிழைக்கின்றதுகள் *பாலகன் நாடோறும்புதிதுபுதிதாயிருக்கிறஇஷ்டவஸ்துவையடையாமற்போனால் போதுவிஷத்தைப்போற்சகிக்கக்கூடாத சித்தவிகாரத்தினால் மூர்ச்சையையடைகிறான் * பாலகன் நாய்போல அற்பத்தின்மகிட்சியுமற்பத்தல்விதனத்தையும் அமேத்தியத்தில் விளையாடுகையுமடைகிறான் * பெலமில்லாதபாலகன் தனதுசங்கற்பத்தினால் விச்சித்தபதார்த்தங்களையடையாமற்றபித்துக்கொண்டிருக்கிறபுத்தியை யுடையவனாகித்துன்பத்தையடைகிறான் * துற்சேஷ்டைகட்கிருப்பிடமாயும் வெகுவஞ்சனைபாயங்களாற்குரூரமாயுமிருக்கிற துன்பமானதுபாலகனுக்குண்டாவதுபோல ஒருவனுக்குமுண்டாகிறதில்லை * கட்டுத்தறியிற் கட்டினயானையானது விஷேகத்தினாற் சகிக்கக்கூடாத துன்பமுறுவதுபோல பள்ளிக்கூடத்தையடைந்திருக்கிற பாலக னடிபடுதல்முதலியமகத்தானபயங்கரமான துன்பத்தையடைகிறான் *பலவிதயிச்சாரூபமாயும்பொய்வஸ்துக்களிற்சத்தியபுத்தியாயும் அற்பவறிவாயுமிருக்கிறபால்யமிகவுந் துக்கத்தின்பொருட்டேயாகின்றது * பால்யத்திலுண்டாயிருக்கிற அறியாமையினாற்பாலகன் தாதிமுதலானவர்களுடையவஞ்சகவார்த்தையினாற்சந்தோஷமடைந்து பூமியைப்புசித்தற்கும் ஆகாசத்திலிருக்கிறசந்திரனைப்பிடித்தற்கும்பிச்சிக்கிறானந்தப்பால்யமெப்படிச்சுகத்தின் பொருட்டாகும்* மனதிற்குளிர்வெய்யில் முதலானதுன்பத்தையறிந்துமதை நீக்கிக்கொள்ளவலியின்றியிருக்கின்றபாலகனுக்குமரத்திற்குமென்னபேதமிருக்கின்றது * உபாத்தியாயர் தாய் தந்தை மூத்தோர் மற்றசெனங்களிவர்களிடங்களிலெல்லாம் பயமுண்டாகையினாற்பால்யம் பயத்திற்குவீடாயிருக்கின்றது * சகலதோஷங்களாற் கெடுக்கப்பட்டபுத்தியையுடையதாயும் அஞ்ஞானமாகிறவிடனுக்குவீடாயுமிருக்கின்றபால்யமான திவ்வுலகிலொருவருக்குஞ்சுகத்தின்பொருட்டாகிறதேயில்லை.

பத்தொன்பதாவதுசருக்கமுற்றிற்று.



# இருபதாவதுசருக்கம்.

## யௌவனதூஷணம்.

இச்சருக்கத்தில் உலோபம் துவேஷம் மதம் அசூயை அகங்காரம் மாச்சரியமிவைகளாற்கெடுக்காநின்றதாயும் காமாதி அனர்த்தங்கட்கு வீடாயுமிருக்கின்ற யௌவனத்தைநிந்திக்கப்படுகின்றது.

(அ-கை) பால்யமிகவுமறியாமைஅசத்திற்குருவனடைக்கலமாயிருக்கைஇவைகளாலதிகமான துக்கத்தையுடையது. யௌவனமோவெனில்லைவைகளில்லாததினாலும் நாநாவிதபோகாசங்களை யனுபவித்தற் கிடமாகையினாலுஞ் சுகவேதுவென்றிச்சிக்கத்தக்கதெனில் துமிகவுமனர்த்தமென்றிராமர் சொல்லுகிறார் । அதன்பின்பு புருஷனானவனிப் பால்யவனர்த்தத்தைவிட்டுப்போகவாசையினாற் கெடுதலானமனதுடையவனாகி யௌவனத்தைநரக எதுவுக்காகவினைவிலடைகிறான் [பால்யம்பதினான்கு வருடமளவென்றுமதிற்செய்ததோஷம்நரகவேதுவன்றென்றுமதற்குமேல் யௌவனமுண்டாகையினால் துவேநரகவேதுவென்றும்மாண்டவ்வியர்சொல்லியிருக்கிறாரென்பதுகருத்து] அந்த யௌவனத்தில்மூர்க்கனானபுருஷன் அனேக செய்கைகளையுடையதாயுஞ் சஞ்சலமாயுமிருக்கிறதன்மனதினிராகாதி வியாபாரங்களையனுபவிக்கின்றதனாலொரு துக்கம்விட்டொருதுக்கமடைகிறான் * தனதுசித்தமாகிறகுகையிலிருந்துபலவிதசேஷ்டைகளைச்செய்துகொண்டிருக்கின்றகாமமாகிறபேயினாற் புருஷனானவன் பலவந்தமாய் விவேகநீங்கியதன்வசப்படுகிறான் * ஆகையாற்றனக்கு வசமில்லாதமனதானது யௌவன ஸ்திரீகளைப்போலச் சஞ்சலமான விருப்பையுடையதுகளான சிந்தைகளுக்குத்தடங்கலில்லாத சஞ்சாரங்களைக் கொடுக்கின்றது * காமாதிகளின்வசமடைந்திருக்கிற புருஷனின் நரகஞ் சிலவுகிலேசமிவைகளுக் கேதுவான ஸ்திரீகள்சொக்கட்டான் கலகமுதலான விசனாரம்பங்களும் இராகத்துவேஷமுதலானதோஷங்களும் நாசஞ்செய்விக்கின்றதுகள் * ஆகையாற்பெரிதானநரகங்களுக்கு வித்தாயும் எப்போதுஞ் சித்தத்துக்குப் பிராந்தியைக்கொடுக்கிறதாயுமிருக்கிற யௌவனத்தில் நாசமடையாதசெனங்கள் வேறொன்றினாலு நாசமடைகிறதில்லை * யௌவனமாகிற பயங்கரமான காட்டுப்பூமியானது சிங்காரமுதலானபல விதாசங்களாலு மிராகாதிகளாகிற புலிகளாலும் விசித்திரகதைகளாகிற ஆச்சரியங்களாலு நிறைந் திருக்கின்றது இதை எவனாற்றாண்டப்படுகுதோ அவனேதயிரியசாலியென்று சொல்லப்படுகிறான் * க்ஷணகாலம்பிரகாசிக்கின்றதாயுஞ் சஞ்சலத்தினால்மிகுந்த அப

ங்காரத் தோடுகூடின சொற்களையுடையதாயு மின்னற் போற்றோன்றிமறைகிறதாயுமிருக்கிற எவ்வனமானதெனக்குருசிக்கவில்லை * போககாலத்தில்ருசியாயுமனோக்கியமாயு முடிவிற்கசப்பாயும் நிந்திக்கத்தக்கதாயுந்தோஷங்களுக்கலங்காரமாயும்மதுவின்மயக்கத்துக்குச்சரியாயுமிருக்கிற எவ்வனமானதெனக்குருசிக்கவில்லை * பொய்யாயு மெய்போற் பிரகாசித்தும் வினாவில்வஞ்சனையைச்செய்கிறதாயுமிருக்கின்றதாற்சொப்பனத்திலனுபவிக்கப்படுகிற ஸ்ரீசம்போகத்துக்குச் சரியாயிருக்கின்ற எவ்வனமானதெனக்குருசிக்கவில்லை * க்ஷணகாலமழகாயிருக்கிற வஸ்த்துக்களுக் கெல்லாமுயர்ந்ததாயுஞ் சகல்புருஷர்களுக்குஞ் க்ஷணமாத்திரமழகாயுங்கந்தருவநகரம்போல் விளங்குகின்ற தாயுமிருக்கின்ற எவ்வனமானதெனக்குருசிக்க வில்லை* விடுகின்ற அம்பானது எவ்வளவுகாலத்திலட்சியத்தையடைகுதோ அவ்வளவுகாலஞ் சுகத்தைக்கொடுக்கின்றதாயுந் துன்பத்தினால்விளங்கியு மெப்போதும்வெப்பத்தையுந்தோஷத்தையுங் கொடுக்கிறதாயுமிருக்கின்ற எவ்வனமான தெனக்குருசிக்க வில்லை * மேற்பார்வைக்குமாத்திரமழகாயுநன்னிலையில்லாததாயு மிருக்கின்றதால் தாசியின்போகத்திற்குச்சரியாயிருக்கின்ற எவ்வனமானதெனக்கு ருசிக்கவில்லை*பிரளயகாலத்திற்பெரிதான உற்பாதங்களுண்டாவதுபோலச்சகல்சீவர்களுக்குந் துன்பத்தைச்செய்விக்கின்றசகலவீத்தனங்களுமெவ்வனத்திலொன்றாகச் சேருகின்றதுகள் * பயங்கரமான சொரூபத்தையுடையஈஸ்வரரு மனதிலிருளையுண்டாக்குகின்ற எவ்வனத்தோடுகூடின அஞ்ஞானமாகிற விராத்திரியினாற்பயப்படுகின்றார் [அப்படியில்லாமற்போனால் எப்போதுமேன்விவேகமாகிறசந்திரனைத்தரிக்கிறாரென்பதுகருத்து ]காட்டுத்தீயினான்மரமானதுகொளுத்தப்படுகின்றதுபோலச்சீவர்கள் எவ்வனத்தில் ஸ்ரீகளுடையபிரிவினாலுண்டாகிறசோகமாகிறதீயினாற் கொளுத்தப்படுகிறார்கள்*மழைகாலத்தில் நதியானதுகலக்கமடைவதுபோலப்புத்தியானதுகுருபணியாற்றோஷங்களைநீக்கிமிகவு நிருமலமாயிருந்தாலும் வித்தியாப்பியாசவீரியத்தினால்விரிவையடைந்திருந்தாலுஞ்சாந்தியாதி நற்குணங்களாற்பரிசுத்தமாயிருநதாலும் எவ்வனத்திற் கலக்கமடைகின்றது*பெரிதான அலைகளையுடையபயங்கரமான நதியானதுதாண்டுதற்கெளிதாகுதுஎவ்வனத்தினாற்சஞ்சலமான ஆசையினாலலைக்காநின்றசித்த விருத்தியானது தாண்டத்தக்கதல்ல * எவ்வனத்திற்சீவர்கள் அவளழகாயிருக்கிறாளென்றும் அந்தக்கொங்கைகள் பருத்திருக்கின்றதுகளென்று மவளுடைய விலைகளே விலைகளென்றும் அவளுடையமுகமே முகமென்று மிப்படிக்கொத்தள்ண்ணிக்கைகளா லழிவையடைகின்றது * இவ்வுலகத்திற்சஞ்சல



மான ஆசையினாலுண்டானபீடைகளையுடைய எவ்வனபுருஷனைப் பெரியோர்கள்கிள்ளப்பட்டமக்கின சேத்தையைப்போற்கொண்டாடுகிறதில்லை [பின்னையோ அவமானமுஞ்செய்கிறார்களெனவறிக] (அ-கை) அகங்காரமானபுருஷனுக்குமானபங்கம் மரணத்திற்குச்சரியென்றுசொல்லுகிறார் | எவ்வனமானது மதத்தினாலுண்டானதுன்பத்தையுந் தோஷங்களாகிறமுத்துகளையுந் தரித்திருக்கின்ற அகங்காரமாகிற பெரியயானைக்கு நாசத்திற்காகவே எப்போதுமுண்டானகட்டுத்தறியாகவிருக்கின்றது * மனதாகிறவிரிவானவேரையுடையதாயும் தோஷமாகிறசர்பங்களைத்தரித்துமிஷ்டவஸ்துகிடையாமையினாலுங்கிடைத்ததுபிரிவினாலுமுண்டாகிறஉள்வேக்காட்டோடுகூடியுமிருக்கின்ற அழுகையாகிறமரங்களுக்கு எவ்வனமானது காடாகவிருக்கின்றதுமிகவும்வருத்தம்* கெட்டசிந்தைகளாகிறவண்டுகளுக்கு எவ்வனத்தைச்சுகலேசமாகிறதேனோடுகூடியுமிராகாதிகளாகிற தாதுக்களால் நெருக்கமாயுங்கெட்டவிகற்பமாகிற இதழ்க்களால்நிறைந்துமிருக்கிறதாமரைப்பூவாகவறியும்* புண்ணியபாபரூபமாகிற கெட்டசிறகுகளையுடையதாயுமனதாகிற குளக்கரையிற்சஞ்சரித்துக்கொண்டு மிருக்கிறமனோவியாதி தேகவியாதிகளாகிறபட்சிகளுக்குப்புதிதான எவ்வனமானதுகூண்டாகவிருக்கின்றது * புதிதான எவ்வனமானதுசடமாயும் அளவில்லாமலுமிருக்கிற விகற்பமாகிற அலைகளுக்குக்கடலாகவிருக்கின்றது * வலுவான இராசசகுணமாகிறதூளிகளோடுந் தாமசகுணமாகிற இருட்களோடுங்கூடிய எவ்வனமாகிறகாற்றானது சித்தாகாசத்திலிருக்கிறசாது சங்கதிமுதலானதுகளா லுண்டானதெளிவுபிரகாசம் விவேகமுதலானதுகளோடுகூடினசத்துவகுணங்களுடைய இருப்பைநீக்குதற்கு வலிமையையுடையதாகவிருக்கின்றது *குரூரமாயிருக்கிற எவ்வனமாகிற தூளிகளானதுகள் பறந்தோடுகிற அசுசியான இலைமுதலானகுப்பைகள் போலிருக்கின்ற இந்திரியங்களாற்சகிக்கக்கூடாததாகி விஷயவாசனையினா லுண்டானரோகங்களால் முகவெளுப்பையும் மிகுந்ததோஷத்தையு முண்டாக்குகின்றதுகள் * பாபங்களுடையசம்பத்துக்கு விளையாட்டாயிருக்கின்ற எவ்வனத்தினுடைய உல்லாசமானது மனுஷியாளுக்குதோஷங்களுடைய கூட்டத்தையுண்டாக்கிக் குணங்களுடையகூட்டத்தைக் கெடுக்கின்றதுகள் * புதிதாயிருக்கிற எவ்வனமாகிறசந்திரனானவன் இராசோகுணமாகிறதூட்களாற்றகையப்பட்ட விவேகமாகிறசிறகையுடையதாகையால் தேகமாகிற தாமரைப்பூவிலேயே அலைந்துகொண்டிருக்கிறபுத்தியாகிறவண்டைத்தேகாபிமானமாகிறகோசத்திற்கட்டிமோகத்தையடையப்பண்ணுகிறான்*சரீர

மாகிறசிறிதானகாட்டில்முளைத்தும் அழகாயுஞ்சிரேஷ்டமாயுமிருக்கிற யௌ
வனமாகிற பூங்கொத்தானது தன்னையடைந்திருக்கிற மனதாகிற வண்
டை மோகமடையப் பண்ணுகின்றது * சரீரமாகிறபாலை நிலத்திற்காம
மாகிறவெய்யிலுடையசூட்டினலுண்டாகிற யௌவனமாகிற கானற்சலத்தை
க்குறித்துமனதாகிறமான்களானதுகளோடிவிடயமாகிற பள்ளத்தில்விழுகி
ன்றதுகள் * சரீரமாகிறஇரவுக்குநிலவாயுஞ்சித்தமாகிறசிங்கத்திற்குப்பிடரி
மயிராயும் பிழைப்பாகிறகடலுக்கு அலைகளுடையவரிசையாயுமிருக்கிற
யௌவனமானதெனக்குச்சந்தோஷத்தைக்கொடுக்கவில்லை * (அ - கை) இ
து முதல்தனக்கிஷ்டமான செனங்களைப்பார்த்துச் சொல்லுகிருர் | தேக
மாகிறபாலைநிலத்திற்சிறிதுகாலம்பலித்திருப்பதான இராகாதிபயிர்களாகி
றபலத்தையுடைய யௌவனமாகிறசரற்காலத்தில்நீங்கள் சந்தோஷமடைய
வேண்டாம் [விரைவாகநாசமடைகுதென்பதுகருத்து] யௌவனமாகிறப
ட்சியானது பாக்கியமில்லாதவன்கையைவிட்டுச் சிந்தாமணியானது நீங்கு
வதுபோல சரீரத்தைவிட்டுக்ஷணத்திற் சீக்கிரமாகவேதிரும்பாமற் போய்வி
டுகின்றது * யௌவனமானது எவ்வளவு எவ்வளவுமிகுந்து ஆதிக்கத்தைய
டைகின்றதோ அவ்வளவு அவ்வளவு காமங்களானவைகள்வெப்பத்தோடு
கூடநாசத்தின்பொருட்டே விருத்தியையடைகின்றதுகள்* யௌவனமாகிற
இரவானது எந்தமட்டு நாசத்தையடையவில்லையோ அந்தமட்டுமிராக
த்துவேஷங்களாகிறபிசாசங்களதிகமாகச்சஞ்சரிக்கின்றதுகள் *பலவிதசித்
தவிகாரங்களாலதிகமாயும் எழையாயும்க்ஷணத்தில்நாசத்தை யடைகிறதா
யுமிருக்கிற யௌவனத்தினிடத்திற்சாகிற பிள்ளையினிடத்திற் றயை செய்வ
துபோலத்தயைசெய்யும் * க்ஷணத்தில் நாசமடைகிற யௌவனத்தில்மோக
மடைந்துசந்தோஷிக்கின்ற புருஷனைமிகவுமூடமான மனுஷப்பசுவாகநி
னைக்கவேண்டும் * மதத்தினற்பயித்தியம் பிடித்ததாயிருக்கின்ற யௌவனத்
தை அபிமானத்தோடுகூடியவஞ் ஞானத்தினலெவன் உயர்ந்ததாகவெண்
ணுகிருனேதுற்புத்தியாயிருக்கிற அந்தப்புருடன் சீக்கிரமாத்தாபத்தைய
டைகிறன் * யௌவனமாகிறசங்கடத்தை எளிதாகத்தாண்டிவிட்டவர்களே
பூமியில்யாவராலுந் தொழற்குரியோராயும் பெரியோர்களாயும் புருஷர்க
ளாயுமிருக்கிருர்கள் [இவ்விடத்திலெளிதாகத் தாண்டுதலாவது கொல்லா
மை பொய்சொல்லாமை கள்ளாமை பிறர்மனைநயவாமைமுதலியனவாம்]
பெரிதானமுதலையாதிகட்கிருப்பிடமானகடலை எளிதாகத்தாண்டப்படுகு
து இராகாதிஅலைகளால்விளங்கியுந்தோஷங்களாகிறமுதலைகளோடுகூடி
க்கொண்டுமிருக்கிறகெட்டதான யௌவனமாகிறகடலைத் தாண்டப்படுகிற



தில்லை * (அ - கை) பால்யமும்வார்த்திகமும் அறியாமையினலும் வலியில்
லாததினலும் புருஷார்த்தங்களுக்குச் சாதகமாகாததினலும் யௌவனமதிக
சந்தோஷத்தையுடையதாகையினலும்புருஷனுக்கு ஒருக்காலுஞ் சாதனச
ம்பத்துவந்துபுருஷார்த்தமுண்டாகுமென்கிற ஆசையில்லவேயில்லையென்
றுசங்கித்தாலதற்குச்சொல்லுகிருர் | சகல யௌவனமும்நிந்திக்கப் படுகிறதி
ல்லை துஷ்டயௌவனமேநிந்திக்கப்படுகின்றது (அ-கை) ஆகையால்நன்
றான யௌவனம்புருஷார்த்தத்திற்கேதுவென்றுசொல்லுகிருர் | வணக்கத்தி
னல்லங்கரிக்கப்பட்டும் முனிகளிடங்களிலிருப்பையுடையதாயும் தயவினல்
மனேக்கியமாயும் சாந்திமுதலானகுணங்களாற்சூழப்பட்டு மிருக்கிற நல்ல
யௌவனஞ்சமுசாரத்திலிந்தமனுஷியசென்மத்திலேயும்ஆகாசத்திலிருக்கிறந
ந்தனவனம்போலக்கிடைக்கிறது அரிது அப்படியிருக்கவேறே செல்மத்
திலேது [ஆகாசத்தில்,நந்தனவனமென்றதனல்இந்திரனுடையகற்பகவிருட்
சமுதலியவிருக்கின்ற உத்தியானவனமிப்பூமியிற்கிடைப்பதரிதென்பதுகரு
த்து.]

இருபதாவதுசருக்கமுற்றிற்று.

# இருபத்தோராவது சருக்கம்.

## ஸ்ரீதூஷணம்.

---

இச்சருக்கத்திற்பிரத்தியக்ஷமான நரகங்களுடையகூட்டங்களாலுண்டா
யிருக்கிறசகல அவயவங்களையுடையவர்களாயும் புருஷர்களுக்கு நரகங்க
ளையுஞ்சென்மங்களையுங் கொடுக்கிறவர்களாயுமிருக்கிறஸ்ரீகளைநிந்திக்கப்
படுகின்றது

(அ - கை) விடர்களுக்குமனேக்கியமென்கிறபிராந்தி எந்தஸ்ரீபிண்
டங்களிலிருக்குதோ அந்தஸ்ரீபிண்டங்களின்சொரூபத்தைப்பிரித்துக்காண்
பிக்கதற்காக இராமபிரத்தனஞ்செய்கிருர் | நரம்புகளெலும்புகள் முடிச்சுக
ளிவைகளால்விளங்கியுமாம்சரூபமான பொம்மையாயும் எந்திரம்போற்சஞ்
சரித்துக்கொண்டுமிருக்கின்ற ஸ்ரீயினுடையதேகமாகிறகூண்டில்நன்மை
யாக எண்ணத்தக்கதொன்றுமில்லை * தோல் மாமிசம் இரத்தம்கண்ணீரி
துகளைப்பிரிதுக்கண்ணைப்பாரு அழகாயிருந்தாலதி லாசையைவையில்
லாவிட்டால்வீணுயேன் மோகத்தையடைகிருய் * இதுமயிர்களிதுவிரத்த
மென்கிறரூபமாயுங்கெட்டதாயுமிருக்கின்ற இந்த ஸ்ரீகளுடையசரீரத்தினை

வ்விவேகத்தினாற்சிறந்த புத்தியையுடையபுருஷனுக்கு ஆகவேண்டுவதென்
னவிருக்கின்றது * ஏந்தத்தேகங்கள் வஸ்திரம் சந்தன முதலானதுகளா
லடிக்கடிகொண்டாடப்பட்டதுகளோ அந்தத்தேகங்களை கழுகு செந்நா
ய்முதலானதுகளிழுக்கின்றதுகள் * ஏந்தக்கொங்கையில்மேருமலையின்சிக
ரத்தில்விளங்கியகங்காப்பிரவாகத்திற்குச்சரியாயிருக்கின்றமுத்து மாலையி
னதழகானது காணப்பட்டதோ அந்தஸ்திரீகளுடையகொங்கை ஒருகால
த்தில்மசானங்களிலுந்திக்குகளிலும் நாய்கள் அன்னவுண்டையைப் புசித்
தல்போல ருசியாகப்புசிக்கப்படுகின்றது * கானகத்திலிருக்கின்ற கார்த்த
பத்தின்சரீரத்தைப்போ லிரத்தமாமிசம் ஏன்பு இவைகளாலேயே விருத்தி
பண்ணபபட்டிருக்கின்ற ஸ்திரீகளுடையசரீரத்திலுமிகுந்த ஆசைப்படத்தக்
கதென்னவிருக்கின்றது * ஸ்திரீயானவள்மேலெழுந்தபார்வைக்குமிகவுமழ
காயிருக்கிறாளென்கிறதே உசிதமாயிருக்கின்றது அதுவுமோகத்தினாலே
யேவுண்டானதாகையினால் ஏதார்த்தத்திலழகேயில்லை யென்றெண்ணுகி
றேன் [மேலெழுந்தபார்வையாவதுவிசாரியாமலுண்டாகிறஞானம்] மத
ங்காமமிதுகளை முன்னிட்டுக்கொண்டநிசமானவிளையாட்டுகளைக்கொடுத்
துக்கொண்டுங்காமவிகாரத்தையுடையவர்களாயுமிருக்கிற ஸ்திரீகளுக்குங்கள்
ளுக்குமென்னபேதமிருக்கின்றது * ஸ்திரீயாகிறகட்டுத்தறியினிடத்தில் மத
மோகத்தினால் நன்றாய்த்தூங்கிறதுபோலிருக்கின்ற மனுஷியாளாகிறயா
னைகள் திடமானசாந்திகளாகிற அங்குசங்களாலும் விவேகமாகிறவிழித்
தலையடைகிறதில்லை * மயிரொன்னும்மையைத்தரித்துந் தொடக்கூடாம
லுங் கண்களுக்கிஷ்டமாயுமிருக்கிறபாபமென்னுமக்கினிக்குச் சுவாலையா
யிருக்கிறஸ்திரீகள்புருஷனைச் செத்தையைப்போற் கொளுத்துகிறார்கள் *
மேற்பார்வைக்குச்சிங்காரமுதலான இரசத்தோடுகூடியும்பரமார்த்தப்பார்
வைக்கு இன்பமில்லாமலுமிருக்கிற ஸ்திரீகளானவர்கள் ஏமபட்டணத்திற்பய
ங்கரமாகச்சொலிக்கிறநரகமென்னுமக்கினிக்கு இவடத்திருந்துகொண்டே
வாசனையினால்மனோக்கியமானவிறகாகவாகிறார்கள் * (அ-கை) ஸ்திரீகளை
யிரவாகத்தூஷித்தல் | இருள்போன்றகூந்தலையும் நட்சத்திரம்போன்ற
கண்களையுஞ்சந்திரன்போன்றமுகத்தையுமுடையமாதர்கள்புருஷர்களவசி
யஞ் செய்யத்தக்கதருமவிவேகவைராக்கியமுதலானதுகளை நாசஞ்செய்தவர்
கள் புத்திக்குமிகவுமோகத்தைச் செய்து கொண்டுமிருக்கின்ற தீர்க்கமான
இராவைப்போலிருக்கிறார்கள் [தீர்க்கமென்றதனால்வீணாகஆயுளின்நாசத்தின்
பொருட்டேயாகுமென்பதுகருத்து](அ-கை) புருஷார்த்தத்தைக்கெடுப்ப
துமன்றி அனர்த்தத்திற்கும் ஏதுவென்று சொல்லுகிறார் | புட்பங்களாலழ



காயுமின்பமாயுந்தளிர்போன்றகைகளையும் வண்டுகள்போன்ற கண்களை
யும் பூங்கொத்துபோன்றகொங்கைகளையும்புஷ்பதாதுபோன்ற பொன்
வருணமானசரீரத்தையுமுடைய ஸ்திரீயானவள்விஷக்கொடிபோலப் புருஷர்
களைக் கொல்வதிலேயே ஏத்தனமாகி மூர்ச்சைமரணமுதலான துன்பத்
தைக்கொடுக்கிறாள் *காடியானது ஆசையினாற்புற்றிலிருக்கிறசர்ப்பங்களை
த்தனதுசுவாசவலியினால் வெளியிலிழுத்துப்பட்சிக்கிறதுபோலப் பொய்யா
னஉபசாரங்களாற்சந்தோஷிப்படுத்துகிறத்தினாலேயேகாமிகளுடையபொ
ருளையும் மனதையும் நாசம் பண்ணுகிறத்திலாசையடைந்திருக்கிற ஸ்திரீக
ளால் சிவர்கள்வசமாகச் செய்யப்படுகிறார்கள் * காமனென்கிற வேடனால்
ஸ்திரீகளானவர்கள் அறியாமைபொருந்தியமனதுடையபுருஷராளாகிற பட்சி
களைக்கட்டுகிறவலையாகவிசிறப்பட்டிருக்கிறார்கள் * மகளிரென்னும்பெரி
தானகட்டுத்தறியிற் புருஷர்களுடையமனதென்னும் மதம்பிடித்த யானை
யானதுஆசையென்னும் விலங்கினாற்கட்டப்பட்டதாகி உளமைபோலிருக்கி
ன்றது * சித்தமென்னுஞ்சேற்றையுடையசன்மமென்னுங்குட்டைகளில்மீ
ன்களாகச்சஞ்சரித்துக்கொண்டிருக்கிறமனிதர்களுக்குக்கெட்டவாசனையெ
ன்னுங்கயிற்றில் ஸ்திரீகளானவர்கள் தூண்டிமுள்ளினுனியிலிருக்கிறமாவு
ண்டையாகவிருக்கிறார்கள் * மாதரானவர்கள்குதிரைகட்குக் கொட்டாரம்
போலவும் யானைகட்குக்கட்டுத்தறிபோலவுஞ் சற்பங்கட்குமந்திரம்போல
வும் புருஷர்களைக்கட்டுதற் கேதுவாகவிருக்கிறார்கள் * பலவிதரசங்களா
ல்நிறைந்தாச் சரியப்படத்தக்கதாகவிருக்கிற இப்போகபூமியானது மகளி
ரைப்பற்றியே வெகுகாலமிருப்பை யடைந்திருக்கின்றது * தோஷரூபங்க
ளானபலவித இரத்தினங்கட்குத்திடமானசம்புடமாயும் ஏப்போதுந் துன்
பத்தைவிளைவிக்கின்ற விலங்காயுமிருக்கிற மாதர்களாலெனக்குப் போரு
ம் [பிரயோசனமில்லை யென்பதுகருத்து] மாமிசரூபமான வுருவையுடை
யதாயும் ஏதார்த்ததிலில்லாததாயுமிருக்கிற கொங்கை கண் புருவமரைக்கி
ப்பின்புறமிதுகளா லெனக்காகவேண்டுவதென்னவிருக்கின்றது * மகளி
ரானவர்களிது தசையிதுவிரத்தமிது ஏன்புகளென்று விசாரிக்கில் சிலதி
னங்களிலேயேசிதறிப்போய் வெறுப்பாகிவிடுகிறார்கள் * நுட்பத்தையறியா
தபுருடர்களாற் கொண்டாடப்பட்ட ஸ்திரீகளேவெவ்வேறாகப் பிரிக்கப்பட்ட
கைகால்முதலிய அவயவங்களையுடையவர்களாகி மசானங்களிற்றுயில்கின்
றார்கள் * நாயகனாற்கருப்பூரங் கோரோசனைமுதலானவைகளாலன்புட
னேயலங்காரமாகச் செய்யப்பட்ட முகமேமாலை நிலத்திலுலருகின்றது *
மாதர்களின்கூந்தலானதுகள் சிறிதுதினங்களில்மசானத்திலிருக்கிற மரங்க

ளிலங்கிருக்கின்ற சாம்பற்பூச்சினால்இதுபழைமையானசாமரமோவென்றெ ண்ணப்படுகின்றதுகள் நிலத்திற்கிடக்கின்ற என்புகள்நட்சத்திரம்போலவி ளங்குகின்றதுகள் * புழுதிகளும்மாமிசத்தைப்புசிக்கின்றகழுமுதலியவுயிர் களுமிரத்தத்தைப்பானம் பண்ணுகின்றதுகள் தோல்களை நரிகள்புசிக்கின் றதுகள் பிராணவாயுக்களாகாசத்தையடைகின்றதுகள்*மாதர்களுடையஅ வயவங்கட்குச் சீக்கிரமாகவேவரப்போகிற தாயிருக்கிற விகாரமான நிலை யை இந்தப்படியென்னாலுங்களுக்குச் சொல்லப்பட்டது என்பிராந்தியை யடைகிறீர்கள் * பஞ்சபூதசெயற்கையாலுண்டான உருவையுடையதாயும் பெண்ணென்றுபேர்பெற்றுமிருக்கிற இத்தேகத்தைப் புத்திமானாயிருக்கிற வனாசையினாலெப்படியடைகுவன் * ஆசையாகிறகிளைகளால் நெருக்கமா யும் இகலோகபரலோகவின்பங்களானபழங்களையுடையதாயும்மாதர்களை யனுசரித்துமிருக்கிறசிந்தையானதுசுதாலமென்கிறகாட்டுக்கொடி போலு யர்ந்து விரிவாயிருக்கையையடைகின்றது * முன்சொன்ன சிந்தையினால் வியாகுலமாய் அதிக ஆசையினாற்குருடாயிருக்கின்றமனதானது தன்னினத் தைப்பிரிந்தமானைப்போல எந்தத்திக்கிற்போவேன் எவடத்திற்றனத்தை யடைவனென்கிற இந்தரூபமானபெரிதானமோகமடைகின்றது * எவ்வ னமாதையிச்சித்திருக்கிற எவ்வனபுருஷன்பெண்யானையினாசையினால்வி ந்தியமலைபின்பள்ளத்தில் விழுந்துகட்டுப்படுகிறயானையைப்போலப்பிற ரால்மிகவுமிரங்கத்தக்கவனாயிருக்கையையடைகிறான் *மனைவியை யுடைய புருஷனுக்குப்போகத்திலிச்சையுண்டாகுதுமனைவியில்லாதவனுக்குப்போ கமுண்டாகிறதேது பெண்ணைவிட்டாற்சகத்துவிடுபட்டுது சகத்துவிடுப ட்டதானால்நீங்காதபேரின்பமுண்டாகும் *மேற்பார்வைக்குமாத்திரமழகாயு மிகவுந்தாண்டக்கூடாததாயும் வண்டுகளுடையசிறசடிபோற்சஞ்சலமாயு மிருக்கின்ற போகங்களில் மரணம் சரை ரோகமுதலானதுவருமென்கிற பயத்தினால் நான்சந்தோஷமடையவில்லை பின்னையோவெனில் எத்தன த்தினாற்சாந்தியையடைந்துபரமபதத்தையடைகிறேன் *.

இருபத்தோராவதுசருக்கமுற்றிற்று.



# இருபத்திரண்டாவதுசருக்கம்.

## சரை தூஷணம்.

இச்சருகத்தில் சோகம் மோகம் பிரிவு பீடை விதனம்ரோக மிவைக ளால்நிறைந்தும் சிந்தை அவமானமிதுகளுக் கிருப்பிடமாயுமிருக்கின்றகி ழத்தனத்தைநிந்திக்கப்படுகின்றது.

(அ-கை) பால்யமும் எவ்வனமுமழியாமையினாலுங்காமாதி தோஷங் களிருக்கின்றமையாலுஞ் சுகமுண்டாகவேண்டாம் கிழத்தனத்திலவைகளில் லாததினாற் பிள்ளை பேரன் முதலானவர்களாலுபசரிக்கின்றவனுக்கு மிக வுஞ்சுகமுண்டாகலாமே யெனிலக்கிழத் தனத்திற்றுக்கவே துச்சளதிகமேன் றுவிரிவாகச்சொல்லுகின்ற இராமர் முன்னேதன்னினத்தைபட்சிக்கிறசு ர்ப்பங்களுக்குஅயலினத்திற்றயவேதென்றுசொல்லுகிறநியாயம்போல இப் பால்யமுதலான அவஸ்தைகள்மிகவுங்குரூரமென்றுசொல்லுகிறார் | விளை யாட்டுகளால்நிறைவையடையாதபால்யத்தை எவ்வனம்பலவந்தமாகவிழு ங்குகின்றது பின்பு ஸ்ரீயினால்நிறைவையடையாத எவ்வனத்தையப்பலவந் தமாகக்கிழத்தனம்விழுங்குகின்றது ஆகையாலிவைகளுளொன்றுக்கொன்று விரோதத்தைப்பாரும் * (அ-கை) பாமராளுக்குமிகவும்பிரியமானசுகத்திற் கிடமாகவிருக்கின்ற தேகமேதளர்ச்சியையடையும்போது எங்கேசுகமுண் டாகுமென்கிற ஆசையென்றுசொல்லுகிறார் | தாமரைப் புஷ்பத்துக்கிடி போலிருக்கிறபனியைப்போலவும் சரற்காலமேகத்துக்குப் பெருங்காற்றை ப்போலவும் கரையிலிருக்கின்ற விருட்சத்திற்கு நதியைப்போலவும் தேகத் தைக்கிழத்தனமானது நாசத்தையடையப்பண்ணுகின்றது * புசிக்கப்பட் டவிஷத்தின்றிவலையானது விகாரப்படுத்துவதுபோலக் கிழத்தனமான துதான்கிழமாகயிருந்தே தேகத்தைத்தளர்ச்சியாகும்படிக்கு விகாரமாகச் செய்கின்றது [கிழத்தனத்தைக்கிழமென்றுசொன்னதுதானப்படியாகாம ற்போமேயாகில்பிறரை எப்படிகிழமாக்குமென்பதுகருத்து] கிழத்தனத் தினாற்றளர்ந்தசரீரத்தை யுடையபுருஷர்களைமாதர்கள் ஒட்டகம்போலங்க வீனமாகப் பார்க்கிறார்கள் * சக்களத்தியினாலவமானஞ் செய்யப்பட்ட ஸ்ரீ யைப்போல வருத்தமில்லாமலெளிமையைக் கொடுக்கப்பட்ட சுபாவத்தையு டைய கிழத்தனத்தினாற் சீவர்கள்கிரிகிக்கப்படும்போது ஞானமானது ஓ டிப்போகின்றது * கிழத்தனத்தினால் நடுக்கமடைந்திருக்கிற புருஷனை வேலைக்காறர்கள் பிள்ளைகள் ஸ்ரீகள் பந்துக்கள் சினேசிதாளிவர்களெ ல்லாம் பயித்தியக்காறனைப்போலப்பார்த்து நகைகிறார்கள் உயர்ந்தமா

த்தைக்கழுகானதடைகின்றதுபோலப்பார்த்தற்கின்பமில்லாதவனாயுந் தளர்ந்தசரீரனாயுந் தீனனாயும் நற்குணமும்பராக்கிரமமுமில்லாதவனாயுமிருக்கிறகிழவனை மிகுந்த ஆசையானதடைகின்றது * தயின்னியமிராகாதிதோஷங்களை அதிகமாய் நீடித்தும் மனதில்வேக்காட்டைக்கொடுக்கிறதாயும் ஆபத்துக்கெல்லாமுக்கியமான தோழியாயுமிருக்கின்ற இச்சையானதுகிழத்தனத்தில்வளருகின்றது * பரலோகத்தைக்குறித்தென்னாலென்னசெய்யத்தக்கது மிகவும்வருத்தம் குரூரமாயும் பதில்செய்யத்தகாததாயுமிருக்கின்றபால்யமுதலாகச் செய்துவந்தபாபத்தின் பயமானது கிழத்தனத்திலதிகமாகவுண்டாகுது * நான் எவ்வளவுதருமார்த்தமுதலானகாரியங்களை எப்படிச்செய்வேன்மௌனமாகவேயிருக்கிறேனென்றிப்படிப்பட்டதயின்னியமானது கிழத்தனத்திலுண்டாகின்றது * எப்போதெப்படி எந்தப்போசனமெனக்குருசியாயிருக்குமென்றென்னேரமுமெண்ணுகின்ற இப்படிக்கொத்த இச்சையுமேற்சொன்னசரையுஞ் செனங்களையடைந்து மனதைக்கொளுத்துகின்றது * கிழத்தனத்திற்புசித்தற்காசையானது அதிகவுச்சாகத்தோடுண்டாகுது புசிக்கச்சத்தியில்லை புசிக்கச்சத்தியிருந்தாற்சீரணிக்கச்சத்தியில்லை இப்படிசத்தியில்லாததினால் மனதானது நிச்சயமாகவேகின்றது * தேகங்களுக்கு உபத்திரவங்களாலபகாரத்தைச்செய்கின்ற தாயும் சரீரமாகிறமரநுனியிலிருப்பதாயு மிருக்கின்றசரையாகிற கிழக்கொக்கானதுரோகமாகிற பாம்பினால்விழுங்கப்பட்டதாகியழுகின்றபோது மூர்ச்சையாகிறயிருட்டை அபேட்சித்துக் கொண்டிருக்கின்ற மரணமாகிற கோட்டானானதெங்கேயோ ஒரிடத்திலிருந்து வந்ததாகவே காணப்படுகின்றது * சாயுங்காலசந்தியுண்டானதைப்பார்த்துயிருட்டோடிவருவதுபோலத்தேகத்திற்சரையுண்டானதைப்பார்த்து மரணமானதோடிவருகின்றது * சரையினாற் பூத்த தேகமாகிற மரத்தைப் பார்த்து மரணமாகிற குரங்கானது நாசஞ்செய்யும்பொருட்டே தூரத்திலிருந்துவேகமாக ஓடிவருகின்றது * சனசூன்னியமான நகரமும் கிளைகளின்றியமரமும் மாரியின்றியதேசமுங்கொஞ்சம் விளங்கினாலும்விளங்கும் சரையினாற்றளர்ந்த தேகமாத்திரம் விளங்குகிறதில்லை * கழுகானதுமாமிசத்தைக்கிரிகிக்கின்றதுபோலக்காசரோகமாகிறதொனியையுடைய சரையானது மனுஷனைவிழுங்கும்பொருட்டேக்ஷணகாலத்தில் வேகமாகவே கிரிகிக்கின்றது * சிறுபெண்ணானவள் ஆம்பற்பூவைப்பார்த்தமாத்திரத்திற்கிள்ளுகின்றதுபோல சரையானது தேகத்தைப்பார்த்தமாத்திரத்திலுச்சாகத்தோடு சீக்கிரமாகச் சிரசைப்பற்றித்தேகத்தைநாசம்பண்ணுகின்றது * சரையாகிறநிலவானது



சிரசாகிற மலைநுனியிலுதித்தமாத்திரத்தில்வாதங்காசமுதலியரோகமாகிற ஆம்பல்முகையைமலரச்செய்விக்கின்றது * காலனாகிறஎமனானவன் தலையாகிறபூசினிக்காயை சரையாகிறலவணமுதலான சூரணத்தினாற்பக்குவமாகப் பார்த்துப்புசிக்கிறான் * சரையாகிறபூனையானது எவ்வனமாகிற எலியைப் புசித்து அத்தக்கர்வத்துடனே சரீரமாகிறமாமிசத்தையிச்சித்து அதிகவுல்லாசமடைகின்றது * தேகமாகிறபாலைநிலத்தில்ழுதுகொண்டிருக்கிறசரையாகிறநரியைப்போல அமங்களத்தைச்செய்கின்றதிவ்வுலகத்திலொன்றுமில்லை * சுவாசகாசமுதலிய சீத்காரங்களோடுகூடியும் துக்கமாகிற புகையிருட்டினால் நிறைந்துமிருக்கிற சரையாகிற அக்கினியானது எவனுக்குச் சொலிக்குதோ அவன்வெந்துபோனவன்தான் [சீத்காரமாவது ஈரக்கட்டைவேகும்போதந்தச் சுவாலையிற்பிரசித்தம்]சரையினாலிளைத்திருக்கின்றமனுஷியானது சரீரமானதுவெளுத்திருக்கிறதளிருக்குச்சரியான அவயவங்களையுடையதாகிப்புட்பங்களால்வளைந்திருக்கிற கொடியைப்போலவளைந்திருக்கின்றது * மரணமாகிற அரசன்வருதற்குமுன்னே சரையாகிறவெண்சாமரத்தை வீசிக்கொண்டு மனோவியாதிதேகவியாதிகளாகிற சேவகளானதுவெளிப்புறப்படுகின்றது * யுத்தத்திற்சத்துருக்களைச் செயித்தவர்களையும் மலைக்குகையிற்பிரவேசித்தவர்களையும் சரையாகிறதுற்பலவிராட்சசியினாற்சீக்கிரமாகச் செயிக்கப்படுகின்றதுபாரும் * சரையாகிறபனியினாற்சுருங்கியிருக்கின்றசரீரமாகிறவீட்டின்மத்தியிலிந்திரியங்களாகிறபாலர்கள்சிறிதுகூடவசைத்தற்கு வல்லவராகவில்லை * தடியாகிறமூன்றாவதுகாலோடுகூடியும் அடிக்கடியிடறிக்கொண்டும் காசம் அபானவாய்வுஇதுகளையேமத்தளவாத்தியமாக வுடையதாயுமிருக்கிறசரையாகிற ஸ்ரீயானவள்கூத்தாடுகிறாள் * சரையாகிறசந்திரனால்வெளுத்ததேகமாகிற பட்டணத்திலிருக்கவேண்டுமென்கிற ஆசையாகிறகுளத்தில் மரணமாகிற ஆம்பற்பூவானதுக்ஷணகாலத்தில் விகாசத்தையடைகின்றது * சரையாகிற சுண்ணாம்புப்பூச்சினால் வெளுத்தசரீரமாகிற அந்தப்புரத்துக்குள்ளே தள்ளாமை துன்பம் ஆபத்து இதுகளாகிற ஸ்ரீகள்சுகமாகவிருக்கிறார்கள் * சரையினாலவமானமும் மரணத்தையுமடையப்போகிறதா யிருக்கிறதேவர்முதலியநான்குவித சரீரங்களுக்குள்ளேயிச் சரீரத்தில்தத்துவத்தையறியாமலிருக்கிறவனுக்கென்னவிசுவாசமுண்டாகப்போகின்றது * சரையையடைந்துஞ்சீவித்திருக்க வேண்டுமென்கிறகெட்ட அபிமானத்தினாலாக வேண்டுவதென்ன ஆகையாலுலகத்திற்சரையானதுசெனங்களாற் செயிக்கப்படாததினாற்சகல ஆசைகளையும்விட்டுநான்சுகமாகவிருக்கின்றேன்.

உம இருபத்திரண்டாவதுசருக்கமுற்றிற்று.

# இருபத்துமூன்றாவதுசருக்கம்.

## காலதூஷணம்.

இச்சருக்கத்திற் குணதோஷங்களனுபெலம் உயர்ச்சி இவைகளையுடை
யதனுவிளையாடலாற்சகலபிராணிகளினது கருமமாகிறமவளைவிளை வி
ளையாடப்பண்ணிக்கொண்டிருக்கிறகாலமானது வருணிக்கப்படுகின்றது.
(அ - கை) இந்தப்படி அனுபவிக்கத்தக்க ஸ்ரீ போகவிச்சை போக
த்திற்குக்காலமானபால்யமுதலான அவஸ்தைகளிதுகளில் தோஷத்தையறிவி
த்து எல்லாமுடிவின்றியதுக்கமாகவேமுடியுமென்றுசொன்னதினால் தன
க்கிகபரபலவினையனுபவிக்கிறத்திலிச்சையில்லையென்கிறதற்குசாதனத்தைத்
தெரிவித்து இப்போதுகாலமாதி களுடையசுபாவத்தை வெளிப்படுத்துகிற
தைமுன்னிட்டுநித்தியாநித்தியவஸ்துவிவேகத்தைத்தெரிவித்தற் கிராமரெ
த்தனஞ்செய்கிறார் | எனக்கிதுவனுபவிக்கத்தக்கது நானித்தையனுபவிக்கி
றேனிதுகளதற்குச்சாதனங்களிதனுலிந்தையிந்தப்படிசம் பாதித்துவெகுகா
லமனுபவிக்கப்போகிறேனிதுஇப்போதென்னாலடையப்பட்டதுஇந்தமனோ
ரதத்தையடைவதற்கிச்சிக்கிறேனென்றிதுமுதலான அளவில்லாதசங்கற்பவி
கற்பங்களுடையகற்பனைகளாலதிகமான விவகாரவசனங்களை யுடையதாயு
ம் அற்பமானதேகத்திலாத்மபுத்தி யுடையதுகளாயுமற்பமானசுகலேசங்களி
ல்பரமபுருஷார்த்தமான சத்தியபுத்தியாயுமிருக்கிற மூடசனங்களாற்சத்து
ருவென்றுமித்துருவென்றுமுதாசீனனென்றுமிதுமுதலான பேதங்களால்
கிரமமாக விடத்தக்கவன்கிரகிக்கத்தக்கவன் உபேட்சைசெய்யத்தக்கவனிது
முதலானபேதங்களாலுமதனாலுண்டானஇராகத்துவேஷமுதலானபலவித
பேதங்களாலும் பிரமாண்டத்திற்குள்ளே பிராந்தியானது மிகவுந்திடமாக
ச்செய்யப் பட்டிருக்கின்றது ✻ வலைபோலவுங்கூண்டுபோலவு மிருக்கிற
இப்பொய்யானசமுசாரத்திலவிவேகிகளுக்குவிசுவாசமெப்படியுண்டாகுங்க
ண்ணாடியிற்பிரதிபலித்திருக்கிறபழத்தைப் பாலரேபுசித்தற்கிச் சிப்பார்கள்
[வலையென்பது தூரத்திலிருக்கிறதையுஞ் சமீபத்திலிழுத்துக்கட்டுகிறதுக
ளான விஷயங்கள் கூண்டென்பது தன்னிலடக்கிக்கட்டுகிற தேகமெனவ
றிக]கிணற்றில்முளைத்திருக்கிறபுன்னுனிமையைப்பற்றிப் பிழைக்கவேண்டுமெ
ன்றுதொங்குகிற பூச்சிநூலை எலியானதறுக்கிறதுபோல இச்சமுசாரத்
திலிருக்கிற அற்பசுகவாசையையுங்காலன்மீதியில்லாமலறுக்கிறான் ✻ சந்தி
ரோதயத்தாற் பெருகியிருக்கிற சமுத்திரத்தை வடவாமுகாக்கினியானது
பானஞ்செய்கிறதுபோல இவ்வுலகத்திற்சகலத்தையும் விழுங்குகிறகாலனை



லவிழுங்கப்படாதவஸ்து ஒன்றுமில்லை ஆகையாற்பயங்கரமான ருத்திர
னாகவிருக்கிறான் ✻ காலன் அறிவினாலும் வலியினாலும் உயர்ந்தமகத்துக்
களையும் க்ஷணகாலமும்பொறுக்காமற் கொண்டுபோகின்றமையால் சகல
லோகங்களையும்புசித்து உலகரூபமாகவிருக்கிறான் ✻ வருஷம்யுகம்கற்பமி
வைபேரோடுகூடினரூபங்களாற்சிறிதுபிரகாசத்தையடைந்திருக்கிறகாலன்கா
ணக்கூடாதவுருவத்தையுடையதாகிச் சகலத்தையுந்தன்வசப்படுத்திக் கொ
ண்டிருக்கிறான்✻ கருடனால்விழுங்கப்பட்டசர்ப்பங்கள்போலக்காலனால்மகா
யிருக்கிற வர்களும் நன்னடத்தையுள்ளவர்களும் மேருவிலுந்திட மானவ
ர்களும் விழுங்கப்படுகிறார்கள் ✻ தயையில்லாததாயும் லோபியாயுங்கடின
மாயுங்கொடூரமாயுங் கொடுமையாயமதயமாயுமிருக்கிற காலனால்விழுங்கப்
படாதவஸ்துகிடையாது✻ பெருந்தீனியுள்ளகாலமானதுபுசிபடதிலேயேபு
த்தியைச்செய்துகொண்டுமலைகளையும் அனந்தவுலகங்களையும் புசித்துந்
திருப்தியையடைகிறதில்லை ✻ காலனண்டசமுதலான நால்வகைபிறவிக
ளிலுண்டான உயிர்களாகிற வித்துகளைக் கிளியானதுமாதளம் வித்துக
போல உள்ளேபிளந்தெப்போதும் புசிக்கிறான் ✻ பஞ்சீகரணமாகாமலிரு
க்கிறபூதரூபியான விராணியசெற்பராகிறவேனையுந் தேவதைகளாகிறபழங்
களையுமுடைய பிரமாண்டங்களோடு கூடினபிரமரூபமான காட்டைக்கால
ன்மிகவும்நாலுபக்கத்திலும் வியாபித்துக்கொண்டிருக்கிறான் [காடென்று
சொன்னது தாண்டக்கூடாததினால் காலன்நாலுபக்கமும்வியாபித்திருக
கிறானென்றது காலன்வயிற்றிலேயேசகலவஸ்துகளுக்கும் உற்பத்தி இதி நா
சங்காணப்படுகின்றமையா லென்பதுகருத்து]இரவாகிறவண்டுகளால் நி
றைந்துத்தினமாகிற பூங்கொத்துகளை யுடையதாயுமிருக்கிறவருஷம் கற்
பம் இந்தரூபமானகொடிகளை யுண்டுபண்ணிக்கொண்டிருக்கிறகாலன் ஒ
ருக்காலுந் துன்பமடைகிறதில்லை ✻ காலன்மனோராச்சியம்போல ஒருவ
ஸ்துவைமிகவுமுயர்ந்ததாகவுமொருவஸ்துவைமிகவு மில்லாததாகவுமொரு
க்ஷணத்திற்செய்கிறான்✻காலன்கன்மமாகிற தன்மனைவியினால்தேகமுதலா
னத்திலாத்மபுத்தியைப்பண்ணுகிற சீவர்களைச்சொர்க்க நரகமுதலானதுக
விற்சுழற்றிக்கொண்டிருக்கிறான் ✻ காலன்தன்வயிறுவளர்க்கிற நிமித்தத்தி
னால் செத்தைபுழுதி சாகு மேரு மகேந்திரம் கடலிதுகளெல்லாத்தையும்
விழுங்குகிறான் ✻ இரண்டுபந்துகளையடித்துக்கொண்டிருக்கிறபாலகனை
ப்போலக்காலன்ஆகாசத்திற்சந்திரசூரியர்களையேவிக்கொண்டுவிளையாடுகிறா
ன் ✻ பிரளயகாலத்திலிக்காலனது சரீரத்தில்நின்றும்வெளிப்பிறப்படுகி
றகாற்றுகளால்மேருமலையானது ஆகாசத்திற்பூர்ச்சமரத்தின் மெல்லிதா

லைதோலைப்போல் நாலுபக்கமுஞ்சிதறிக்கொண்டுவிளங்குகின்றது [பூர்ச்
ஸதோலைப்போல் வடதேசத்தில்மரவுரிக்குதவியாகவிருக்கின்றது] காலன் அய
சமரமெனபது வடதேசத்தில்மரவுரிக்குதவியாகவிருக்கின்றது] காலன் அய
ணரியரன்குபேரனிந்திரனிவர்கள்முதலாகக் கிரமமாகவுண்டாகித்திரும்பவு
மொன்றுமிலலாமலிருக்கிருன்*காலன்ஏப்போதும் அவைகளைத் தரிக்கின்
றகடலைப்போல*தன்னிடத்திலெப்போதுங்கணக்கில்லாதசெகத்துக்களை
த்தரித்துக்கொண்டிருக்கிருன்*காலன் உயிர்களாகிற கொசுக்களால்குழ்ந்து
உதிர்ந்து கொண்டுமிருக்கிற பிரமாண்ட
ம்மென்றுசத்தித்துக்கொண்டும் உதிர்ந்து கொண்டுமிருக்கிற பிரமாண்ட
ங்களாகிற அத்திப்பழக்கூட்டங்களுக்குப்பெரிதான அத்திமரமாகவிருக்கிரு
ன்*காலன்சித்தாகிறநிலவினுடையசன்னிதானமாத்திரத்தில்மலர்ந்திருக்கி
றசகங்களாகிற ஆம்பற்புட்பங்களாலந்தந்தப்பிராணிகளது சுபா சுபகர்ம
ங்களாகிறமலைவியோடுகூடிவிளையாடிக்கொண்டிருக்கிருன் [சித்தாவ
து எல்லாத்துக்குமதிஷ்டானமான சைதன்னியம்] ஆகையாலிக்காலன
னவிடப்படாமலுமுன்பின்னெல்லையன்றியிலுமிருக்கிற பிரமத்தினிடத்தி
ற்றிடமானவிருப்பையடைந்திருக்கிருன் * (அ-கை) காலனை லோபியாக
ச்சொல்லுகிருர் | காலனுலகமாகிற வீட்டில்திக்குகளாகிற மூலைகளிற் க
ருமமாகிறவிரலாலே சூரியனாகிற தீபத்தைக்கொண்டுபோய் ஏதுவெங்கே
யிருக்குதென்று லோபத்தினாலேபார்க்கிருன் * காலன் பகலாகிற இமைக்
கொட்டலையுடையசூரியனாகிறகண்ணினாற்பார்த்துப்பிரபஞ்சமாகிற அழி
ந்தகாட்டில்நன்ருப்பழுத்திருக்கிறதிக்குப்பாலகராகிற பழங்களைப்பார்த்
துப்புசிக்கிருன் * காலன் சகமாகிறபழங்குடிசையில் நற்குணங்களையு
டையசனங்களாகிறசிதறினமணிகளை உக்கிரமான உட்புறத்தையுடையஎ
மனாகிறசம் புடத்திற்றினந்தோறுமெடுத்துநிறைக்கிருன் * காலன் வித்
தைவணக்கமுதலியபிரகாசங்களையுடையசிவர்களாகிற இரத்தினங்களைமு
க்குணமாகிற கயிற்றினாற்கோத்துதேகத்திலழகுறயுகந்தோறுந்தரித்தருத்
தெறிகிருன் [குணவான்களழிவையேமுக்கியமாகச் சொல்லப்படுகிறதென
வறிக] காலன் பிரளயகாலத்திற்பிரமத்தினிடத்திலிளைப்பாறித்திரும்பவுஞ்
சிருஷ்டிகாலத்திற்கர்த்தாவென்றும்போக்தாவென்றுஞ்சங்கரிக்கிறவனென்
றுமிந்தப்படிச்சகலவஸ்துரூபமாகவேஆகிருன் *.
அழிவணக்கிறவனென்றுமிந்தப்படிச்சகலவஸ்துரூபமாகவேஆகிருன் *.

இருபத்துமூன்ருவதுசருக்கமுற்றிற்று.

# இருபத்துநான்காவதுசருக்கம்.

## மகாகாலதூஷணம்.

இச்சருக்கத்திற்சண்டியென்னும் பெயருடைய ஸ்ரீயோடுகூடின அக்
காலனையேவேட்டையாடுகிறத்திலிச்சையையுடைய இராஜபுத்திரனாகவரு
ணிக்கப்படுகின்றது.

(அ-கை) இச்சமுசாரத்திற்கர்வமான விளையாடல்களையுடையதாயு
ம் ஒரு ஆபத்துகளில்லாமலும்நினைத்தற்கரிய பராக்கிரமத்தை யுடையதா
யுமிருக்கிறவிராஜபுத்திரனைகாலன்வேட்டையாடுகின்றதையிராமர்சொல்
லுகிருர் | [சந்திரசூரியர் முதலானவர்களையும் பிரகாசிப்பித்துக்கொண்டு
விளங்குகின்றமையால்பரப்பிரமமேயிராஜா அனாதியானமாயையே பட்டத்
துஸ்திரி அதின்சம்பந்தத்தினாலுண்டான சொருபத்தை யுடையதாகையினா
லுஞ்சகத்தினுடைய இளவரிசையான இராச்சியசம்பத்தையனுப விக்கின்ற
மையாலுமப் பிரமத்துக்குக்காலன் புத்திரனாகவாச்சுது] துற்பலமானசக
த்துரூபமானபாலைநிலத்தில் தீனமாயுமூடமாயு மிருக்கிறசீவர்களாகிறமி
ருகக்கூட்டங்களை வேட்டையாடுகிற இவ்விராஜபுத்திரனுக்கு வடவாக்கி
னிரூபமானதாமரைப்புட்பத்தையுடையஅழகான பிரளயகாலசமுத்திரமான
துவிளையாடுகிறதடாகமாகவிருக்கின்றது * அவ்விராஜ புத்திரனுக்கு உ
றைப்புகசப்பு புளிப்பென்னும்பூதங்களைமுன்னேவைத்துக்கொண்டுந்தயி
ர்பால்முதலானகடற்களோடுகூடிக்கொண்டுந் தினங்கள்தோறும் ஒருவித
மாகவேயிருக்கிற உலகரூபமானபழையதுகளால் காலபோசனம் நடக்கின்
றது * சஞ்சாரத்தையுடையதாயுஞ் சத்தமாதர்களோடுகூடிக்கொண்டுஞ்
சீவர்களைக்கொல்லுகிறத்திற்புலியாயுஞ்சமுசாரமாகிறகாட்டில்விளையாடு
தற்கேவப்பட்டுமிருக்கிறசங்காரசத்தியாகியகாளராத்திரியானது அவ்விரா
ஜபுத்திரனுக்குமனைவியாக விருக்கின்றது * தாமரை கருநெய்தல்செங்க
ழுநீர்முதலியபுட்பங்களுடையமாலையினாற்சூழப்பட்டிருக்கிற பூமியானது
அவ்விராஜபுத்திரனுக்குக்கையில்மத்தியபானஞ்செய்தற்குப்பெரிதானபாத்தி
ரமாகவிருக்கின்றது * அவ்விராஜபுத்திரனதுகையி லிருக்கின்றகூண்டிற்
கெற்சித்துக்கொண்டுஞ் சகித்தற்கரியதோள்தட்டுகிறதொனியையுடையதா
யும் பார்க்கக்கூடாதபிடரிமயிரையுடையதாயும் பெரிதானதோலையுடைய
தாயுமிருக்கின்றநரசிம்மனை விளையாடுதற்காக வாசமென்கிறபட்சியாகச்
செய்யப்பட்டிருக்கிருர் [ அசுரர்முதலான பேர்களைக் கொல்லுகிறதேவி
ளையாட்டு] பிரமாண்டங்களுடையமாலையைத் தரித்துக்கொண் டிருக்கி

ன்றமையால் அனேகசோரக்காய்களோடுகூடினவீணையைப்போல் சொரூபத்தினாலுந்தொனியினாலும்பிரியமாயுஞ் சரற்கால ஆகாசம்போலக்கறுத்துநிருமலமானசொரூபகாந்தியையுடையதாயுமிருக்கின்றமகாபயிரவனென்னுந்தேவன் அவ்விராஜபுத்திரனுக்குவிளையாடுகிறகுயிற்குஞ்சாகவிருக்கிறார் [ அன்னியாளுடையபார்வைக்குப்பயங்கரமான பயிரவருடையசத்தமானது உக்கிரமானசுபாவத்தையுடையகாலனை இராஜபுத்திரனுக்கு மனாநந்தானென்பதுகருத்து] அவ்விராஜபுத்திரனுக்கு எப்போதுந் தொணிந்துகொண்டிருக்கிற உருவையுடையதாயுந்துன்பமாகிறபாணங்களைக்கக்கிக்கொண்டுமிருக்கிறசங்காரமென்னும் பெயரையுடைய வில்லானது நாலுபக்கலும்விளங்குகின்றது * சிரேஷ்டனையும் விளையாட்டிற்பண்டிதனையுமசைந்துகொண்டிருக்கிறலட்சியத்தையுந் தானசைந்துகொண்டிருக்கும்போதுமடிக்கின்றமையாலதிகமாகவிளங்கிக்கொண்டுமிருக்கிற காலரூபமானஅழகானவிராஜகுமாரனானவன்பழைமையான உலகத்திற் குரங்குகள்போலப்போகவாசையினாற்சஞ்சலமானசீவர்களையுண்டுபண்ணி வேட்டையாடுகிறான். *

இருபத்துநான்காவதுசருக்கமுற்றிற்று.

# இருபத்தைந்தாவது சருக்கம்

காலதூஷிணம்.

---

இச்சருக்கத்தில் கருமமதற்குப்பலமிவ்விரண்டுருவமாயும் நியதியென்னும் ஸ்ரீக்குக் கணவனாயுமிருக்கிற மற்றொரு காலத்தினுடைய ஆச்சரியமாயும் விஸ்தாரமாயுமிருக்கிற கூத்தானது சொல்லப்படுகின்றது.

(அ-கை) முன்சருக்கத்தில் மகாகாலனை யிராஜபுத்திரனாகவருணித்து அதற்குபாதியானகிரியா சொரூபமானகாலத்தை அதன்விளையாட்டின்பொருட்டிரண்டுருவமாகக்கற்பித்துச்சொல்வதற்காக இராமனொத்தனஞ்செய்கிறார் | கெட்ட விளையாட்டையுடையவர்களுக்கெல்லாஞ் சிரேஷ்டமான மற்றொரு காலமானதிவ்வுலகத்திற் பலரூபமான தெய்வமென்றுங்கருமரூபமான காலமென்று மிரண்டுருவமாகச்சொல்லப்படுகின்றது [ பிராணிகளுக்குக் கருமபலத்தைக்கொடுக்கிறத்தினாலேயே விவகாரத்தைப் பண்ணிக்கொண்டெதுவிருக்குதோ அதுவேதெய்வம்அதாவது பலரூபமான கிருதாந்தன்பல



த்தை அவசியமுண்டாக்குகின்றமையாற்பலரூபமான கிருதாந்தனென்றுங் கருமமுங்காலமாகையினாற் கருமரூபமானகாலமென்றும் ஒருகாலந்தானே முன்னவஸ்தைபின்னவஸ்தைகளுடைய பேதத்தினாலிரண்டு பிரகாரமாகச் சொல்லப்படுதென்பதுகருத்து] (அ-கை) காலத்தினுடையவிரண்டாவதானகிரியாரூபமான சொரூபத்தைச்சூசிகடாகஞாயத்தினால் முன்னேசொல்லுகிறார் | தன்னுடைய அசைவரூபமாகவிருக்கிற இக்காலத்துக்குப் பலத்தைக்கொடுக்கிற கிரியைத்தவிரவேறே ஒரு ரூபமுங் கருமமும் இச்சையுங்காணப்படவில்லை [சூசிகடாகஞாயமாவது கொல்லன் ஒருவனுக்குக்கடாகஞ் செய்து கொண்டிருக்கச்சேமற்றொருவனூசிசெய்ய வேண்டுமென்று வந்தாலூசிசிறுவேலையை முடித்ததைமுடிப்பதுபோலவென்பது] வெய்யிலினாற் பனிக்கூட்டமானதுபோல அக்காலத்தினால் மிகவுந்துர்ப்பலமான சீவன்கள் மிகவும் நாசத்தையடையப்படுகின்றது [சகல அனர்த்தமுந் தனதுகருமத்தினாலேயே செய்யப்பட்டிருக்கின் றமையாலென்பதுகருத்து] விரிவாகக்காணப்படுகிற இவ்வுலகமந்தக்கிரியாரூபமானகாலந்துக்கு அற்பமான கூத்தாடுகிறவீடு அவ்வீட்டிலிக்காலமிகவுங்கூத்தாடுகின்றது [இராகத்துவேஷாதிகளாலுண்டாயிருக்கிற அதிகமானகிரியைகள் சகலபிராணிகளுக்குப்பிரசித்தமாகையினாலிக்கூத்தைவிரிவாகவருணிக்கவில்லை] (அ-கை) பலரூபமானகாலத்தைச்சாஸ்திரமொன்றினாலேயே அறியத்தக்கதாகையினால்விரிவாகச்சொல்லுகிறார் | முன்சருக்கத்திற்சொன்னகாலத்திற்குமூன்றாவதாயிருக்கிறதெய்வமானது மிகவும் பயங்கரமாயுங் காபாலிகவேஷத்தையுடையதாயும் மதத்தையுடையதாயுங் கிருதாந்தனென்னும் பெயரோடு கூடிக்கொண்டும் உலகத்திற்கூத்தாடுகின்றது* கூத்தாடிக்கொண்டும் நியதிரூபமான ஸ்ரீயினிடத்திலெப்போது மிகுந்த ஆசையுடையவனாயுமிருக்கிற பலரூபமானகிருதாந்தன்மிகவுங்காமியாயிருக்கிறான் [நியதியாவது பண்ணினகருமத்திற்குப்பலமவசியம்வருமென்கிறநியமம்நியதிசத்தியினிடத்தில்மிகுந்தஆசையென்பது கருமஞ் செய்த பிராணிகளுக்கு அவசியம் பலன்கொடுக்கை ] (அ-கை) அந்தக்காலரூபத்துக்குப்பூஷணத்தைச்சொல்லுகிறார் | மூன்றுலகரூபமான இக்கிருதாந்தனுடைய மார்பில் ஆதிசேஷன் வெளுத்திருக்கிற மூன்றுவிதமானகங்காப்பிரவாகமிதுகள்வாகுமாலையாகவிருக்கின்றதுகள் * அக்கிருதாந்தனுக்குச் சந்திரமண்டலமுஞ் சூரியமண்டலமுங்கைகளில்கடகமாகவிருக்கின்றதுகள் மேருமலைகையில விளையாடுகிறத்தின்பொருட்டிருக்கிறதாமரைப்பூவாகவிருக்கின்றது * நட்சத்திரரூபமானபுள்ளிகளையுடையதாயுஞ்சஞ்சலமாயிருக்கிற புஷ்கலம் ஆவர்த்தமென்னும்பிரள

யகாலமேகங்களானதலைப்புகளையுடையதாயும் ஊழிகாலக்கடலில் முவைக்
கப்பட்டுமிருக்கிற ஆகாயமே அக்கிருதாந்தனுக்கு முக்கியமானவஸ்திரமா
கவிருக்கின்றது * இப்படிக்கொத்த உருவை யுடையவனான அக்கிருதாந்
தனுக்கெதிரே எப்போதுங்காமத்தையுடையவளாயிருக்கிற அந்தநியதியா
னவள் ஓழிவில்லாத எத்தனத்தினுடனே பிராணிகளுடைய போகத்திற்க
னுகூலமானகாரியங்களையாரம்பித்துக்கொண்டு கூத்தாடுகிறாள் * பிரா
ணிகளுடையபோக்குவரத்துகளாற் சஞ்சலமாயிருக்கிற பிரபஞ்சரூபமான
மண்டபத்திற்குள்ளே கூத்தாடிக்கொண்டுந் தகையப்படாத கிரியாசத்
திரூபமாயுமிருக்கிற அந்தநியதியினுடைய அவயவங்களில்தேவர்களோடுகூ
டின அனேக உலகங்களுடையவரிசையானது அழகான பூஷணமாகவாகுது
பாதாளபரியந்தமிருக்கிற ஆகாசமானதுகறுத்திருக்கிற தன்மையினால்தொ
ங்குகிறகூந்தலாகவிருக்கின்றது * அழுகையாகிற கோலாகலசத்தங்களை
யுடையதாயு நரகாக்கினிகளாகிற பிரகாசத்தையுடையதாயும்பாபமாகிற
சரட்டினாற்கோக்கப்பட்டுமிருக்கிற நாகங்களுடைய வரிசையானது அந்தநி
யதியினுடைய பாதாளரூபமானகாலிற் பாதசரமாகவிருக்கின்றது * கிரியா
ரூபமானதோழியினால் எமனாகிறநெத்தியில்சித்திரகுப்தனாகிறகஸ்தூரியான
து திலதமாகச்செய்யப்பட்டது [பிராணிகளுடைய கருமங்களாகிற பரிமள
த்தைப்பிரகாசிப்பிக்கின்றமையால் சித்திரகுப்தன் எமனிடத்திற்கஸ்தூரியா
கவிளங்கிறனென்பதுகருத்து] இந்தநியதி என்கிற தேவியானவள்பிரளய
காலத்தில் தன்கணவனாகிறகிருதாந்தனுடைய கடைக்கண் பார்வையை ய
றிந்துமலைகளெல்லாம் பெரிதானசத்தங்களுடனே பிளந்துபோகும்படிக்
குக்கூத்தாடுகிறாள் * (அ-கை) அவளுடையகூத்தைத்தானே விரிவாகச்
சொல்லுகிறார் | பின்பக்கலிற்றொங்கியவளைந்து கொண்டிருக்கிற சுப்பிரம
ணியருடைய வாகனமாகிய மயிலின்பீலியைத் தரித்தும் பெரிதான ஓட்டை
களிலுண்டாகிற வெகுபயங்கரமான சத்தத்தோடுகூடிய மூன்றுகண்களை
யுந் தாழ்ந்தசைந்துகொண்டிருக்கிறசடையிற் சந்திரனையுந் தரித்திருக்கி
ற உருத்திரருடையசிரசுகளாலும் மந்தாரபுட்பங்களையுடைய பார்வதியின்
கூந்தல்களாகிற சாமரங்களாலும் அதிகமான கூத்தையுடையதாயும்மலை
கள்போலவுமிருக்கிற பயிரவனுடைய வயிறாகிற சுரைக்குடுக்கைகளாற் சத்
தித்துக்கொண்டும் ஆயிரம்நேத்திரத்துவாரங்களையுடைய இந்திரனுடைய
தேகமாகிறபிட்சாகபாலங்களாலும் பிரமாக்களுடைய உலர்ந்திருக்கிறமுது
கெலும்புரூபமானகேடையங்களாலுங் கூத்துகளிற் பலவிதமாய்ச் சுழன்று
கொண்டிருக்கிற விஷ்ட்ணுக்களின்பலவிதமானசிரசுகளுடையகூட்டங்க



ளாகிறதாமரைப்பூமாலையினாலும் ஆகாசத்தைநிறைத்துக் கொண்டிருக்கி
றதன்வினத்தன்னாற் பயப்படுத்துகிறவள்போலு மெல்லாரையுஞ் சங்காரம்
பண்ணிக்கொண்டிருக்கிற நியதியானவள் பிரளயகாலங்களில விளங்கிறாள்
* (அ-கை) இந்தப்படிநியதியினுடையகூத்தைவருணித்து அவள்கண
வனாகியகிருதாந்தனுடைய கூத்துக்குண்டான பூஷணங்களைச்சொல்லுகி
றார் | சந்திரமண்டலமாகிற குண்டலத்தினால் விளங்கிக்கொண்டும் நட்சத்
திரங்கள்சந்திரகிரணங்களிதுகளால் மனோக்கியமாயுமிருக்கிற ஆகாயமாகி
றமயிற்றேகையைத் தலையிற்சூட்டிக்கொண்டுமிருக்கிற அந்தக்கிருதாந்த
னுடையவலக்காதிலிமயபற்வதமானது வெள்ளிரூபமான குண்டலமாய்விள
ங்குகின்றது இடக்காதில் தங்கமயமானமேருபவலையானது குண்டலமாயு
மிருக்கின்றது * இந்த இரண்டுகாதுகளினின் றுங்கனைத்திற்சந்திரனுஞ்
சூரியனுமசைந்துகொண்டிருக்கிற குண்டலமாகத்தொங்குகின்றது சக்கிர
வாளகிரிகளின் கூட்டமானதுநாலுபக்கலுஞ் சுற்றிக்கொண்டிருக்கிற அ
ரைநூல் மாலையாகவிருக்கின்றது * மண்டலாகாரமாயிருக்கிற மின்னலை
தாமரைக்காய் ரூபமானகங்கணமாக விருந்துகொண்டு இங்குமங்குமோடு
கின்றது மேகமாகிறபலவிதவருணங்களான வஸ்திரங்களுடையகந்தையா
னதுகாற்றினால்அலைக்கபடட்டதாகி விளங்குகின்றது * எவனைப்போலவி
ருக்கின்றகூர்மைபொருந்திய உலக்கைகள் கத்திகள் ஈட்டிகள் சூலங்கள்
தோமரங்கள் தடிகளிதுகளால் ஆதிசேஷனுடையபெரிதான சரீரமாகிறக
யிற்றிற்சேர்க்கப்பட்டு முன்சொன்ன காலரூபமான இராஜகுமாரன்கையை
விட்டு நழுவியும் சமுசாரம்பண்ணிக்கொண்டிருக்கிறசீவர்களாகிற மிருகங்க
ளைக்கட்டுகிறதின்பொருட்டுவிடப்பட்டுநீண்டுமிருக்கின்றகயிற்றிற்றொடுக்
கப்பட்டிருக்கின்றமாலையானது இக்கிருதாந்தனுடைய கழுத்தில்விளங்கு
கின்றது * இந்தக்கிருதாந்தனுடைய விரண்டுகைகளிலும் உயிரோடுகூ
டினமகரமச்சங்களையுடையதாயுமிரத்தினங்களுடைய தேசசுகளால்விளங்
கிக்கொண்டுமிருக்கின்றஎழுகடலுங்கங்கணங்களுடையவரிசையான பூஷண
மாகவிருக்கின்றது * விவகாரங்களாகிறபெரிதானசுழிகளை யுடையதாயு
மிரசோகுணத்தினால்நிறைந்துந்தமோகுணத்தினாற்கறுத்து மிருக்கின்றசுக
துக்கங்களுடையவரிசையானது அந்தக்கிருதாந்தனுக்கு உரோமபந்தியா
கவிளங்குகின்றது * பிரளயகாலத்திலந்தக்கிருதாந்தன் இந்தப்படிவிளை
யாடிப்போட்டு பிறகுவெகுகாலம் இளைபபாறித்திருப்பவும்பிரமாமுதலா
னபேர்களோடுகூடப் பிரமாண்டத்தையுண்டுபண்ணி அபினயங்களால்நி
றைந்துஞ் சரை சோகம் துன்பமிவைகளாலுண்டானகெடுதலாலலங்கரிக்

கப்பட்டுபிநந்கிற சிநஷ்டிரூபமான இந்தக்கூடத்தைப்பாலர்கள் ஈரமண்
ணுற்பொம்மைகளைவருத்தமில்லாமற் செய்வதுபோலச்செய்கிருன்.

இருபத்தைந்தாவதுசருக்கமுற்றிற்று.

# இருபத்தாறுவதுசருக்கம்.

---

சீவர்கள்காலமுதலானத்தினுடையவசமா யிருக்கின்ற
இச்சருக்கத்தில் அதிகதோஷங்களானிறைந்த இச்சம்சாரத்தினுடையகெட்டதி
மையால் வைராக்கியமுண்டாகிறத்தின்பொருட்டுவிரிவாகச்சொல்லப்படு
சையானதுவைராக்கியமுண்டாகிறத்தின்பொருட்டுவிரிவாகச்சொல்லப்படு
கின்றது இந்தப்படிசகலகிரியைகளையுங் காலம் பண்ணுகின்றது
(அ-கை) என்னவெனில் காலமுதலானசகலவஸ்துக்களிலுந தோஷத்
அதனாலுனக்கென்னவெனில் அதற்குப்பலமான வைராக்கியத்தை இராமர்தெரிவிக்கி
தைத்தெரிவித்து அதற்குப்பலமான வைராக்கியத்தை இராமர்தெரிவிக்கி
ருர் | சமுசாரமென்றுபேர்பெற்றிருக்கின்ற முன்சொன்னகால முதலான
துகளுடையசரித்திரத்தில்நம்போலிகளுக்குவிசுவாசமெப்படியுண்டாகலாமி
தைச்சொல்லவேண்டும் * நாங்கள்சப்தமுதலான விஷயங்களால் மோக
த்தையடைந்திருக்கின்ற மான்முலானதுகள் போலமுன்சொன்னதெய்
வமுதலானநாலுகாலங்களினுல் அடுமைப்பட்டவர்கள்போலவிருக்கிறோம்*
நிகிருஷ்டாளுக்குச்சரியானநடத்தையையுள்ளதாயும் எல்லாத்தையும்விழு
ங்குகிறத் திலேயேஎத்தனப்பட்டுக் கொண்டுமிருக்கின்ற இந்தக்காலமான
துஎப்போதும்போகத்திலிச்சையுள்ளசீவர்களை ஆபத்துருபமான கடலி
ற்றள்ளுகின்றது * அக்கினியானதுசூடாயும் பிரகாசமாயுமிருக்கின்றசு
வாலைகளாற்கொளுத்துகின்றதுபோலக்காலமானது சீவர்களையுள்ளேது
ராசைகளாலும்வெளியிற்கெட்டநடத்தையினுலுங்கொளுத்துகின்றது*கா
லத்தைநியமப்படுத் துகிறரூபமாயும் கிருதாந்தனுடைய மனைவியாயுமி
ருக்கின்ற இந்திரியங் களுடையவெளிப்பிரவிருத்தி நியமரூபமான நியதி
யானவள் ஸ்ரீயாகையாற்சஞ்சலசுபாவமுடையவளாகிச்சமாதி செய்பவர்களி
டங்களில் எத்தனத்தையடைந்து அவர்கள்தயிரியத்தைப்போக்கடிக்கிருள்*
சற்பமானது காற்றைவிழுங்குவதுபோலக் கிருதாந்தன் கொடூரநடக்கை
யையுடையவனுகிஎவ்வனசரீரத்தைக்கிழத்தனமாகப்பண்ணிப் பிராணிகளு
டையகூட்டத்தை எப்போதும்விழுங்குகிருன் * தயவில்லாமலிருக்கிற அ



ரசர்களுக்கெல்லாம் உயர்ந்த எமனுனவன்துக்கித்திருக்கிற சீவர்களிடங்க
ளிதயவுசெய்கிறதில்லை ஆதலால் சகலபிராணிகளிடங்களில் தயவாயும்
உதாரமாயுமிருக்கிற சீவர்களரிதாய்விட்டது * பிரமன்முதலானசகலசீவ
பேதங்களும் வைராக்கியத்தையுடையபார்வையினுல் நசுவரமானசெல்வத்
தையுடையதுகள் பயங்கரமானவிஷயங்கள் முடிவில்லாததுக்கத்தின்பொ
ருட்டேயாகுதுகள் * ஆயுளும்மிகவுஞ்சஞ்சலம் எமன்கொடூரமான சுபா
வத்தையுடையவன் எவ்வனமுமிகவுஞ்சஞ்சலம் பால்யமுமஞ்ஞானத்தினு
ற்போக்கடிக்கப்பட்டது * சீவர்கள்விஷயங்களுடையநினைப்பினுற்கலங்கி
ப்போயிருக்கின்றதுகள் பந்துக்கள் சமுசாரரூபமானபந்தங்களா யிருக்கு
துகள்போகங்கள் சமுசாரத்திற்பெரிதானரோகங்களா யிருக்கின்றதுகள்
ஆசைகளுங் கானலாறுயிருக்குதுகள் * இந்திரியங்களேசத்துருக்களாயிரு
க்குதுகள் சத்தியமான ஆத்மாவென்றெண்ணியிருந்ததேகமுதலானதுவி
வேகமுண்டாகும்போது அசத்தியமாயிருக்கையை யடைந்ததுகள்மனதை
ச்சத்துருவாகவுடையவனுன ஆத்மாவானவன்மனோரூபமான தன்னுலேத
ன்னைத்துன்பத்தையுடையவனுகப்பண்ணுகிருன் * அகங்காரமானது அ
பிமானத்தினுற் சொரூபத்தைக்கெடுத்துப்போடுகின்றது புத்திகள்வெளிப்
பார்வையையடைந்திருக்கின்றமையாற்சொரூபத்திலிருப்பை விட்டிருக்கின்
றதுகள் தேகத்தினுடையதொழிற்கள்கெட்டபலத்தை கொடுக்கின்றதுகள்
மனதிலுண்டான விளையாட்டுகள் மாதரையடைந்திருக்கின்றதுகள் ஆ
சைகள்விஷயங்களாலவிளங்குதுகள் ஆத்மாவின்றேற்றங்கள் நாசத்தைய
டைந்திருக்கின்றதுகள்ஸ்திரிகளிராகாதிதோஷங்களாக யிருக்கிறுர்களாகை
யால்விடயங்கள் ஆசைப்படத்தகாததாக ஆய்விட்டுதுகள் * வஸ்துவான
துவேறேயாக அறியப்பட்டது மனது அகங்காரத்திலேயே வைக்கப்பட்ட
துபதார்த்தங்கள் நாசத்தினுல்விழுங்கப்பட்டிருக்கின்றதுகள் சமுசாரத்தி
ன்முடிவானதறியப்படவில்லை [வஸ்துவென்பது பிரமம] புத்தியானது
உள்ளேவியாகுலப்பட்டுக்கொண்டுமிகவுந்தபிக்கின்றது ஆலசியமாகிறரோ
கம்விளங்குது வைராக்கியம்வருகிறதில்லை [வைராக்கியமவருகிற தில்லை
யென்றுசொன்னதுஉலகத்தில் அதிதுல்லபமென்றுசொன்னதேதவிரதன
க்கல்ல எனெனில்முன் சொன்னதற்குவிரோதம் வருகின்றமையாலென்ப
துகருத்து] பரமார்த்தப்பார்வையானது இரசோகுணமாகிற தூளியினு
லடிபட்டுப்போய்விட்டது தமோகுணமானயிருட்டானதுவிருத்தியையடை
குதுசத்துவகுணமடையப்படுகிறதில்லை ஆகையால்தத்துவமிவந்தூரத்
திற்போய்விட்டது * சீவனம் நிலையில்லாமலிருக்கின்றது மரணமோவர

க்காத்திருக்கின்றது தயிரியஞ்சிதறிப்போய்விட்டது அசாரமானதேகமுத
லானவிடயத்திலெப்போது மாசையானதுண்டாயிருக்கின்றது * புத்தியா
னது அஞ்ஞானத்தினாலழுக்கையடைந்திருக்கின்றது சரீரமானது நாச
மொன்றிலேயே முடிவையுடையதாயிருக்கின்றது சரையானதுதேகத்திற்
சொலிக்கிறதுபோலவிருக்கின்றதுபாவமானதுண்டாகிக்கொண்டேயிருக்
கின்றது*புருஷார்த்தசாதனத்திற்குரிய யௌவனமானதுபயனின்றியமுயற்
சியினாலோடிப்போகின்றது பெரியோர்களுடைய சங்கந் தூரத்திலிருக்கி
ன்றது ஒருகதியுங்கிடைக்கவில்லை தருமத்திலேயேயிருக்கிற உமக்குக்க
தியேனில்லையெனில் ஒன்றுஞ்சத்தியமாகவிருக்கவில்லை [சொற்கமுதலா
னகதியும் அனித்தியமாகையால்சொற்பனசுகம்போலிருக்குதென்பது கருத்
து] மனதானது பிறர்சுகந்தனதுசுகமாயனுபவிக்கு மயித்திரியின்மையா
லுள்ளேமோகத்தையடைகின்றது பிறர்செய்யுஞ் சற்கிருத்தியத்தில் ஆன
ந்திகுமுதிதையின்மையால் சந்தோஷமானது தூரமாய்ப்போய்விடுகின்
றது பிறர்துக்கந்தன்றுக்கமாகப்பார்க்குந்தயையின்மையால் விளங்காநின்
ற கருணையுண்டாகிறதில்லை பொறுமைமுதலான கெட்டகுணந்தூரத்
திலிருந்துவருகின்றது*தயிரியமானதுதிரமாகவிருக்கவில்லைசீவர்களான
துகள்சென்னமரணங்களையேயடைந்து சுவர்க்கநரகங்களையனுபவித்து
க்கொண்டிருக்கின்றதுகள் துற்சனருடையசங்கம் எளிதாகக்கிடைக்கின்
றது பெரியோர்களுடையசங்கங்கிடைக்கின்ற தரிதாகவிருக்கின்றது *
பதார்த்தங்களுற்பத்தி நாசங்களை யடைந்துகொண்டிருக்கின்றதுகள் ப
தார்த்தங்கள் நசித்தபோதிலுமந்தப் பதார்த்தங்களாலுண்டான வாசனை
யானது சமுசாரபந்தத்திற்கேதுவாகவிருக்கின்றது பிராணிகளுடையகூ
ட்டமானது எப்போதுங்காலத்தினாற் சுவற்க நரகமுதலானவிடத்திற்கொ
ண்டுபோகப்படுகின்றது* திக்குகள் காணப்படுகிறதில்லைதேசமுநாசத்தை
யடைகின்றது மலைகளுஞ்சிதறிப்போகுதுகள் ஆகையால்நம்போலியான
சீவர்களிடத்திலென்னவிசுவாசஞ்செய்யத்தக்கது *சின்மாத்திரசுபாவனான
ஈசுவரனாலாகாசமுதலியதுகள்கூடப் புசிக்கப்படுகின்றதுபூமியுஞ் சிதறிப்
போகுதுநம்போலிகளானசீவர்களிடத்திலென்னவிசுவாசஞ்செய்யத்தக்கது
*கடல்களும்வற்றிப்போகுதுகள்நட்சத்திரங்களுஞ்சிதறிப்போகுதுகள் காய
சித்தியுள்ளவர்களுநாசத்தையடைகிறார்கள் என்னைப்போற்கொத்தவனிட
த்திலென்னவிசுவாசஞ்செய்யத்தக்கது [இவடத்திற்காயசித்தியுள்ளவர்களை
ன்றது ஞானமின்றியிருக்கின்றயோகமந்திரரசாயன முதலானத்தையுடை
யவர்களெனவறிக] அசுரர்களும்பிளக்கப்படுகிறார்கள் துருவனுநிலையின்றிய



உயிரையுடையவனாகவிருக்கிறான் தேவர்களுங் கொல்லப்படுகிறார்கள் எ
ன்னைப்போற்கொத்தவனிடத்திலென்னவிசுவாசஞ்செய்யத்தக்கது * இந்
திரனுங்காலனாற்புசிக்கப்படுகிறான் எமனுமுடிவையடைகிறான் வாயுவுநா
சமடைகின்றது என்னைப்போற்கொத்தவனிடத்திலென்னவிசுவாசஞ்செ
ய்யத்தக்கது * சந்திரனுஞ் சூனியமாயிருக்கையையடைகிறான் சூரியனு
ம்மிகவும்பிளக்கப்படுகிறானக்கினியும் முழுகிப்போகிறான் என்னைப்போற்
கொத்தவனிடத்திலென்னவிசுவாசஞ் செய்யத்தக்கது * பிரமனுமுடிவைய
டைகிறான் நித்தியராகியவிஷ்ணுவும் உருத்திரனு நாசத்தையடைகிறார்
ள் என்னைப்போற்கொத்தவனிடத்திலென்னவிசுவாசஞ்செய்யத்தக்கது *மு
ன்சொன்ன மூன்றுகாலமும் நியதியும்போக்கடிக்கப்படுகின்றது முடிவில
லாமலிருக்கிற அண்டத்துக்குவெளிப்பட்ட ஆகாசமும்லயத்தை யடைகுது
என்னைப்போற் கொத்தவனிடத்திலென்ன விசுவாசஞ்செய்யத்தக்கது *
செவியாற்கேட்கக்கூடாமலும்வாக்கினாற் சொல்லக்கூடாமலுங் கண்ணினா
ற்பார்க்கக்கூடாமலுமிருக்கிற சூட்சுமரூபத்தையுடையதாயு மறியப்படாம
லிருக்கிற ஸ்தூலரூபத்தையுடையதாயும் பிராந்தியைக்கொடுத்துக்கொண்
டுமிருக்கிற ஒருவஸ்துவினாலே உலகங்கள்தன்னிடத்திலேயே மாயையினா
ற்றோற்றுவிக்கப்படுகின்றதுகள் * அபிமானத்தையடைந்திருக்கிற பிராணி
களுக்குள்ளேசர்வாந்தரியாமியாயிருக்கிற ஈசுவரனாலுபத்திரவத்தையடை
யாதபிராணி இந்தமூன்றுலகத்திலுமில்லை * (அ-௩௧) எல்லாத்தை
யுநசிப்பிக்கிறானென்குகையைத்தெரிவித்தற்காகச் சீவர்களதுசுதந்தரவீன
த்தைச்சொல்லுகிறார் | மலைநுனியிலிருந்துதாழ்வரைகளில் வேகமாகவி
ழுகின்றசலஞ்சக்கிரமானபடிகக்கல்லு இவைகள்போலச்சூரியனானவன்குதி
ரையோடுகூடினதேராகவிருந்து கொண்டுதன்னிடத்திலேறியிருக்கிற ஈசு
வரனால்நடக்கக்கூடாதகல்விலும்மலைகளிலும் எப்போதும் பரவசனாகவே
வப்படுகிறான் [குதிரையென்பதுகிரணங்களெனக்கொள்க சூரியாதிகளுந்
காற்றினுடையபிரவாகத்தினாற்றள்ளப்படுகின்றதென்பதுகருத்து]முதிர்ந்
தவில்வப்பழமானதுதோலினால்மூடப்படுகிறதுபோலஉள்ளேதேவர்கள்அ
சுரர்களிவர்களுடையகூட்டத்துக்கெல்லாமிடமாயிருக்கிற பூமிரூபமான உ
ண்டையானது அவர்களுக்கிருப்பிடமான சோதிசக்கரத்தினால நாலுபக்கத்
திலுஞ்சூழப்பட்டிருக்கின்றது * சொற்கத்தில்கற்பிக்கப்பட்டிருக்கிற தேவ
ர்களும் பூமியில்மனுஷியர்களும் பாதாளத்திற்சற்பங்களும் சங்கற்பமாத்திர
த்தினாலேயே நாசத்தையடைகுதுகள் [ஆகையால்பராதீனனாயிருக்கையே
சீவர்களுக்குப்பெரிதான தோஷமென்பதுகருத்து] (அ-௩௨) இதரதோ

ஷங்களையுஞ்சொல்லுகிறார் | பராக்கிரமசாலியானமன்மதனானவன்சகத்துக்கு ஈசுவரனாகவிருக்கிற உருத்திரனோடுசண்டைசெய்து அதிகவல்லமையுள்ளவனாகத்தானே அனுசிதமானவழியினாலேயே உலகத்தைச்சுவாதீனப்படுத்திக்கொண்டுசுற்றுகிறான் * வசந்தகாலமாகிற மதயானையானதுபுட்பவருஷங்களாகிற மதசலத்தினாற்றிக்குகளை வாசனையுடையதாகச்செய்துகொண்டுமனதுக்குப்பயமும் உன்மாதமுமாகியசாபல்லியத்தை யுண்டுபண்ணுகின்றது * ஆசையையுடையவளான ஸ்திரீயினுடைய கண்களாற்பார்க்கப்பட்டு அதனாற்சஞ்சலமானவுருவையுடையமனதை விவேகமானதுபெரிதாயிருந்தாலுந் திரமாகப்பண்ணுகைக்குச்சத்தியுடையதல்ல * தத்துவத்தையறிந்திருக்கிறபுருடனே பரோபகாரத்தைச் செய்துகொண்டும் பரனுடையதுக்கத்தினாற்றான் தபித்துக்கொண்டும் தன்னிடத்திற் குளிர்ந்துமிருக்கிறபுத்தியினாற்சுகமாயிருக்கிறானென்றெண்ணுகிறேன் [ஞானமுள்ளவர்கள்கிடைப்பதரிதென்பதுகருத்து] காலரூபமான வடவாக்கினியில்விழுந்துகொண்டும் உற்பத்திநாசங்களையடைந்துகொண்டும் பிழைப்புரூபமானகடலில் அலையாயுமிருக்கிறபதார்த்தங்களை எண்ணுகிறத்துக்கெவனாலாகும் * முன்சொல்லப்பட்ட தோஷரூபமானபுதைகளில் மான்களாகவிருக்கிற சகலமனுஷியாளும் மோகத்தினாலுண்டாயிருக்கிற துராசையாகிறகயிற்றினாற்கட்டப்பட்டவர்களாகி சன்மரூபமானபாலைநிலத்திற்சீரணித்துப்போய்விடுகிறார்கள் * இவ்வுலகத்தில்விசாரணையையறிந்திருக்கிறநம்மாலேயுமறியப்படாமலும் ஆகாயமாகிறமரத்திலிருக்கிற கொடியினாற்கழுத்திற்கட்டிப்பிடிப்பில்லாமற்றொங்குகிறத்துக்குச் சரியாயுமிருக்கிற சொற்கமுதலானபலத்தையுண்டுபண்ணுகிறகெட்டக்கருமங்களைப்பண்ணிச் சீவர்களானது அனேகசன்மங்களில்வெகுவான ஆயுளைப்போக்கடிக்கின்றதுகள் * (அ-கை) விவேகத்தை அபகரிக்கிறசாமக்கிரியைமாத்திரமெப்பொழுதுஞ்சுளுவாகக்கிடைக்குதென்றுசொல்லுகிறார் | இவ்வுலகத்திலிப்போது இநதவுச்சவபிந்தநது இவடத்தில்யாத்திரை இவர்களேபந்துக்களினு சுகமிதுவிப்படிக்கொத்தபோகங்கள் இந்தப்படிவீணாகவே அனேகவிகற்பங்களைப்பண்ணிக்கொண்டு மிகவுஞ்சஞ்சலமாயும் துற்பலமாயுமிருக்கிற புத்தியுள்ளசீவர்களானதுசீரணித்துப்போகின்றது. *

இருபத்தாறுவதுசருக்கமுற்றிற்று.



## இருபத்தேழாவது சருக்கம்.

---

இச்சருக்கத்திற்சொல்லப்பட்டுஞ்சொல்லப்படாமலுமிருக்கிற மோட்சவிரோதமானவிஷயங்களில் திரும்பவுந்தோஷங்களை வயிராக்கியமுண்டாகிறத்தின்பொருட்டு விரிவாகச்சொல்லப்படுகின்றது.

(அ-கை) முன்தனித்தனிசொல்லிவந்தவிஷயங்களிலுமிதுவரையிற்சொல்லாமலிருக்கிற விஷயங்களிலுமுன்தெரிவிக்காததோஷங்களைச்சேர்த்துவிரித்துக்காட்டி இவைகளில்சித்தத்துக் கிளைப்பாறுதற்கேதுவானகுணமொன்றுமில்லையென்றிராமர்தெரிவிக்கிறார் | மற்றொன்றையுங் கேளும் மேலெழுந்தபார்வைக்குச்சுகமாயும் எதார்த்தப்பார்வைக்குத்துக்கமாயுமிருக்கிற இப்பிரபஞ்சத்தில் எந்தப்பொருள்கிடைத்தால்மனது பூரணசாமமாகுமோ அப்படிக்கொத்த பொருளொன்றுங்கிடைக்கவேயில்லை * விளையாட்டிலாசையையடைந்திருக்கிறபால்யம்நீங்குங்காலத்தில் மனதாகிறமானஸ்திரிகளென்னுங்குகைகளில்மடிந்துசரீரந்தளர்ந்துபோகும்போதுசீவர்கள்மோட்சங்கிடைக்கும்படியானவுபாயமொன்றுஞ்செய்யாமலேயேஆயுள்வீணாகப்போய்விட்டதென்றுமிகவும் விதனத்தையடைகுது * மூப்பாகிறபனியினாற்கெடுக்கப்பட்டிருக்கிறசரீரமாகிற தாமரைமலரை உயிராகிறவண்டானது க்ஷணத்தில்விட்டுப்போட்டு தூரத்திற்போகும்போது சீவர்கள் செய்யாநின்ற இவடத்திய எத்தனமாகிறகுளமானது காய்ந்துபோய்விட்டது * மனுஷியாளுடையசரீரமாகிற கொடியானது மூப்பாகிறபுட்பங்களையுடையதாகிமிகவுந்தளர்ச்சியடைந்துகொண்டு எப்போதெப்போதுபரிபக்குவமாகுதோ அப்போதெல்லாம் எமனுக்குச் சந்தோஷத்தை நிச்சயமாகவுண்டுபண்ணுகுது * இவ்வுலகத்திலாசையென்னுமாறானது விஷயஉச்சாகங்களாகியபிறவாகத்தினால் நற்குணமாகிற சகலபதார்த்தங்களையும்விழுங்கப்பட்டதாகியதன்கரையிலிருக்கிற சந்தோஷமாகிறநல்லமரத்தின்வேரையறுக்கிறத்தில்மிகவும்வலியுடையதாகிப்பெருகுகின்றது * சமுசாரரூபமான கடலில் மேலேதோலினால்மறைத்துக்கட்டப்பட்டும் துன்பமாகிற அலைகளாலலைக்கப்பட்டுஞ் சுழன்றுகொண்டும் முழுகிறத்திலேயே எத்தனப்பட்டுக்கொண்டும் விவேகியான சீவர்களையுடையதாகாமலுமிருக்கிறசரீரமாகிற பரிசலானது ஐந்திந்திரியங்களாகிற முதலைகளாலலைக்கப்படுகின்றது* ஆசையாகிறகொடிக்காட்டிற் சஞ்சரித்துக்கொண்டிருக்கிறமனதாகிற குரங்கானதுகாமமாகிற மரங்களிற்சுற்றிக் கொண்டாயுளைப்போக்கடித்துஞ்சுபலத்தையுமடைகிறதில்லை*இப்போதிவ்வுலகத்தில் ஆபத்

துகளில்விதனம் மோகமிதுகளைத்தூரத்திற்றள்ளியும் சம்பத்துகளிற்கெற்
வத்தையடையாமலிருக்கின்றமனதினால் மனோக்கியமாயும் ஸ்திரிகளாற்கெடு
க்கப்படாமலிருக்கிற மனதையுடையவர்களாயுமிருக்கிற பெரியோர்கள்மிக
வுமரிதாகவிருக்கிறார்கள் ❋ இவ்வுலகத்தில்யானைக் கூட்டமாகிற அலைக
ளையுடையயுத்தமாகிற கடலைத்தாண்டுகிறவர்களென்புத்திக்குச்சூராளல்
ல ஏவர்கள்மனதுரூபமான அலையையுடையதேகேந்திரியங்களாகிற இந்
தக்கடலை விவேகவைராக்கிய முதலியவைகளாலும் மேல்வருகிறதேகமாகி
றகடலை அதற்குமூலமான அஞ்ஞானத்தைப் போக்கடிக்கிறத்தினாலுந்தா
ண்டுகின்றவர்களேசூராள் [விவேகவைராக்கிய முதலானவுபாயங்கிடைப்
பது அரிதாகையாலிந்தக்கடலைத் தாண்டுகிறதுமிகவுந்துர்லபமென்பது
கருத்து] (அ-கை) கருமமதற்குச் சாதகமாகட்டுமேயெனில் அதற்குச்
சொல்லுகிறார் | ஆசையினாற் கெடுக்கப்பட்டிருக்கிற சித்தவிருத்தியையு
டையசீவர்களானது ஏந்தக்கருமத்தைச் செய்துவிசிராந்தியையடையுமோ
முடிவில்துன்பத்தையும்நாசத்தையுங் கொடாமலிருக்கிற மோட்சபலத்தை
த்தருவதினாலழகாயிருக்கிற அப்படிக்கொத்த ஒருகருமமும் ஒருவனுக்கு
மொருக்காலுங்காணப்படவில்லை (எப்படி இவ்வுலகவியாபாரத்தினாலுண்
டானபலம் நசித்துப்போகுதோ அப்படிபரலோகத்திலும் புண்ணியத்தினா
லுண்டாகிறபலம் நசிக்குமென்றிதுமுதலான அனேகசுருதி வாக்கியமிருக்
குது) ஒருகிரியையினால் சம்பாதிக்காநின்ற பலமவசிய நசிக்குமாகையினாலி
ஷ்டவஸ்துவினுடைய நாசந்துக்கத்தை முடிவாகவுடையதென்பது கருத்
து (அ-கை) யாதொருத்தனிடத்திற் செல்வமில்லாதபோதுதைரியமு
தலானதுகளுடையநாசத்துக்கேதுவானவிராகம்லோப முதலானதுகளதி
கமாகிறத்தினால கீர்த்தி பிரதாபஞ் சம்பத்துமுதலான அற்பபலமுந்துல்
லபமாகும்போது அவனிடத்தில்மகாபலமான மோட்சந்துர்லபமென்கிற
த்துக்குக்கேட்பானேனென்கிறகருத்தினாற்சொல்லுகிறார் | தைரியக்குறை
வில்லாதவர்களாயும் உலகத்தைக்கீர்த்தியினாலுந் திக்குகளைப்பராக்கிரமங்
களாலுஞ்சம்பத்தினால்யாசகனுடையவீட்டையும் பொறுமை வணக்கம் உ
தாரமுதலானகுணங்களுடையபலத்தினால் லட்சுமியையும் நிறைக்கின்றவர்
களாகியபெரியோர்கள் உலகத்திற்கிடைப்பதரிது [தைரியத்தினாலல்லவோ
சம்பத்து பூரணமாகவிளங்குதென்பது கருத்து] (அ-கை) செல்வமு
ண்டாகும்போதுயாவருக்கும் எவ்விடத்திலுஞ் சகலவிஷ்டமுங்கிடைப்பது
சுலபந்தானென்னுங்கருத்தினால் புருஷ ரத்தனம்வீணென்று சொல்லுகி
றார் | கருங்கல்லினாலாயினும் வச்சிரமணிகளாலாயினுஞ் செய்யப்பட்டவீ



ட்டுக்குளிருந்தாலுஞ் செல்வத்தோடுகூடிக் கொண்டிருக்கிற சகலசீவர்க
ளையுமணிமாதிசித்திகளுடைய வேகத்தோடுகூட அஷ்ட ஐசுவரியங்களு
முயற்சியின்றியில் வருகின்ற ஆபத்துகள்போல எப்போதும் ஓடிவந்து
அடைகுதுகள் [முன்சற்கருமஞ்செய்தவர்களுக்கே புருஷார்த்தமுதலான
சகலநன்மையுமுண்டாகுமென்பதுகருத்து] (அ-கை) முடிவிலதுக்க
முடையதென்று முன்சொன்னதை இப்போதுவிரிவாகத்தெரிவிக்கிறார் |
பிள்ளைகள் பெண்டீர்கள் தனமிதுகளெல்லாம் பிராந்தியுள்ள புத்தியினால்
மிர்தம்போலக்கற்பிக்கப்படுகுதோ அவைகளெல்லாம்மரணகாலத்திலுபகா
ரமாகிறதில்லை பின்னையோவிஷமூர்ச்சைபோலத் துன்பத்தின்பொருட்
டேயாகுதுகள் ❋ இவ்வுலகத்தில்மூப்பையுடையசீவர்கள் சரீரமுடிவிற்சங்
கடதிசையையடைந்து துன்பப்பட்டுக்கொண்டு முன் தன்னாற்செய்யப்பட்
டபுண்ணியமின்றியிருக்கிற நடக்கைகளைநினைத்து உள்ளேவெந்துபோ
குது ❋ தருமஞ்செய்தற்குச்சாவகாசமில்லாமல் எப்போதுங் காமத்தையு
மருத்தத்தையுஞ் சம்பாதிக்கிறத்தினாலேயேநாள்களைத் தள்ளிசரீரமுடிவி
லசைந்துகொண்டிருக்கிற மயிற்றோகையைப்போல புருஷனுடையசஞ்சல
மானமனதானது எந்தவேதுவினாலிளைப்பாறுதலையடையும் ❋ (அ-கை)
தருமஞ்செய்யாதவர்களது மனதில்விசிராந்தியுண்டாகவேண்டாந்தருமஞ்
சம்பாதித்திருக்கின்ற உம்மைப்போற்கொத்தவர்களுக்கு அத்தருமபலமுண்
டாயிருக்கின்றமையால் எனந்தவிசிராந்தியில்லையென்றுசங்கித்தால்தரும
த்துக்குப்பலமானசொற்கம் புத்திரன்முதலானதுஞ் சிரேஷ்டமல்லவென்
றுசொல்லுகிறார் | நதியிற்றோன்றுகிற அலைகள்போல நசுவரமாகையால்
எதிரேயிருக்கையிலு மில்லாததுபோலவிருக்கின்றதாயுந்தெய்வவசத்தினால்
வந்துமிருக்கின்ற புண்ணியடவன்சளான புத்திரன் சரீரமுதலானத்தில்
இன்பத்தையுடையசீவர்களானது வஞ்சிக்கப்படுகுது [மீண்டும்நீங்காம
லும்மேலுமனர்த்தமாகமுடியாமலுமிருக்கின்றலாபமேலாபமென்றுசொல்
லப்படுகுது மற்றலாபமெல்லாம்வஞ்சனை அதெப்படியெனில் அற்பாயு
ளாயிருக்கின்றபுத்திரலாபம்போலவும் மகூத்துக்குத்தூண்டில்மாமிசலா
பம்போலவுமிருக்கின்றது (இதற்குச்சுருதி ஆத்மாவைத்தவிரமற்றொன்றை
யிஷ்டமாகச்சொல்லுகின்றவனைக்குறித்து இஷ்டந்தைத்தகைகிறானென்
றுசொல்லுகின்றது) [ஆகையால்காமியதருமபலத்தால்விசிராந்தியுண்டாகி
றதில்லையென்பதுகருத்து] (அ-கை) முன்சொன்னதையே விரிவாகத்
தெரிவிக்கிறார் | இது இப்போதுசெய்யவேண்டுமதுபின்னேசெய்யவேண்டு
மென்று எப்போதுஞ்சிந்திக்கப்பட்டும் முடிவிலனர்த்தரூபமாயுமிருக்கிறகா

ரியமானதுகள் தேகத்தில்மூப்புண்டாகிறவரைக்கும் மனைவிமுதலியோர்க ட்குமிஷ்டத்தைச்செய்விப்பதினால் சீவர்களதுமனதைச் சீக்கிரமாய்விவேக மில்லாமற் செய்கின்றதுகள் * மரங்களுடைய விலைகளானதுகளுற்பத்தி யையடைந்து சீக்கிரத்தில்சரகாய் லயமடைகிறதுபோல சீவர்களும் உற்ப த்தியையடைந்துவிவேகமில்லாதவர்களாகிச் சிறிதுதினங்களிலேயே நாசம டைகிறார்கள் * விவேகிகளுடையசங்கத்தையுமவர்கள்சரித்திரத்தையும்நி னைத்துப்பகலெல்லாம் வெகுதூரந்திரிந்துதேடி அவர்கள்கிடைக்காமல் சாயங்காலம் வீட்டிற்குவந்து இரவில்முடவனைத்தவிர எவன்நித்திரை யையடைகுவன் * சகலசத்துருக்களையுந்துரத்திநாலுபக்கலுமிராச்சியசம் பத்தையுமடைந்துசகலசுகங்களையு மனுபவிக்கிறகாலத்தில்காலன் எங்கே யோ ஒரிடத்திலிருந்து ஓடிவருகிறான் * இன்னபடியென்று நிச்சயிக்கக்கூ டாதவேதோ ஒருயேதுவினால் விருத்திபண்ணப்பட்டும்பொய்யானசொரூபங் களையுடையதாயும் க்ஷணத்திற்றோன்றிநாசத்தையடைகிறதாயுமிருக்கிற இ வ்விஷயங்களாற்சுற்றுதலையடைந்திருக்கிறசீவர்களானது நாட்கள்வருவ தையும் போவதையுமறியவில்லை * எப்போதும் க்ஷணத்திலுண்டாகிநா சத்தையடைகிற அலைகளுடையவரிசையைப்போல உலகத்திற்சஞ்சலமா னசெனங்களானது எப்போதும் எங்கேயோ ஒரிடத்திலிருந்துவேகமாக வருகுது இப்படியே எப்போதும்வேகத்துடனே எங்கேயோ ஒரிடத்திற் போகுது [அலைகளுடையவரிசைதோன்றுதற்குச்சமுத்திரங்காரணமான துபோலசீவர்கள்வருதற்கும்போதற்குங்காரணம் பிரமமென்பதுகருத்து] சீவர்களதுபிராணனையபகரிக்கிறதிலேயே எத்தனப்பட்டுக்கொண்டுஞ்சி வந்தவுதடுகளையும் வண்டுகள்போன்றகண்களையுமுடையவர்களாகியஸ்தி ரீகள்விஷமரங்களி லுண்டானவிஷக்கொடிபோலமனதையிழுக்கிறார்கள்* மனைவியென்றும் புத்திரனென்றுமித்திரனென்றுமிந்த விவகாரரூபமான மனுஷியாளுடையசமுசாரமாயையானது உச்சவமுதலானத்தி லொன்று சேருகிறதுபோல ஒருத்தருக்கொருத்தரிச்சையினா லுண்டாக்கப்பட்டசங் கேதத்தோடுகூடினதாகிவீணாகவே ஒன்றுசேர்ந்திருக்கின்றது * பால்ய முதலானவெகுநிசைகளையனுபவித்தும் மிகுந்த ஆசையையுடையதுகளா யும் தீபச்சுவாலைகளுடைய நாசவரிசையைப்போற் சஞ்சலமாயும் பொய் யாயுமிருக்கிற செனனமரணங்களுடையவரிசைகளில் பரமார்த்தவஸ்துவா னதறியப்படுகிறதில்லை * குயவன்றிரிகையானது சுழன்றுகொண்டிருக்க ச்செய்யுஞ்சூட்சுமபுத்தியில்லாதவனுக்கிது அசையாமலிருக்குதேதவிரசுற்ற வில்லையென்னும் புத்தியையுண்டுபண்ணுவதுபோல சமுசாரத்தில்பிறவ



ந்திருபமானகெட்டசக்கரமானதுநீர்க்குமிழிபோலவனித்தியமாயிருந்தாலு ஞ்சூட்சுமமாகப்பாராமலிருக்கிற சீவர்களதுபுத்தியில்நிலையென்கிறபுத்தி யைச்செய்குது * சீவர்களுக்கு எவ்வனத்தில்விளங்கிக்கொண்டிருந்தஅழ குமுதலானகுணங்கள் கிழத்தனத்தினால்தேகந்தளரும்போது பனிகாலத் தில்தாமரைப்பூவினுடையகுணங்கள்போலத்தெய்வவசத்தினால் நாசத்தைய டைந்தவைகளாகிச்சித்தத்திற்குத்துக்கத்தைக்கொடுக்குதுகள் * பூமி சலம் காற்று முதலானதெய்வவசத்தினால் புருஷனுடையமுயற்சியையபேட்சியா மற்றானேவளர்ந்துபழம் புட்பமுதலானதுகளால் நிறைவையடைந்துதன் தேகத்தைத்தரிக்கின்றதினால்டிக்கடி சீவர்களின்பொருட்டு நிழல்பழமிலை பூமுதலான உபகாரத்தைச்செய்துகொண்டு ஓரபகாரத்தைச்செய்யாமலி ருக்கச்செயுமிவ்வுலகிலந்தமரமானது கோடாலிமுதலான ஆயுதங்களால் வெட்டப்படுது அப்படிப்பட்டவுலகில்டிக்கடி அபகாரத்தைச் செய்துகொ ண்டும் ஒருவுபகாரமில்லாமலுமிருக்கிறபுருஷனிடத்தில் சந்தோஷமுண் டாகிறதற்கேதுவென்ன * (அ-கை) அன்னியபுருஷனிடத்திற்றோஷமி ருக்கட்டும் ஆகிலுந்தனக்கிதத்தைச்செய்துகொண்டிருக்கிற தன்செனங்க ளிடத்திலென்ன தோஷமிருக்குதெனில்தற்குச்சொல்லுகிறார் | புருஷனான வனழகாயிருந்தாலுஞ் சினேகம்போகமுதலானமிகுந்த தோஷங்களோடு கூடிக்கொண்டும் உள்ளேயிருக்கிற உபசாந்தியைப் போக்கடிக்கிறத்தின் பொருட்டே உண்டாயுமிருக்கிறதன் செனங்களுடையசங்கத்தினால் விஷம ரத்தினுடையசம்மந்தத்தினால்மூர்ச்சையையடைகிறதுபோலஅஞ்ஞானரூப மானமூர்ச்சையை யிப்போதடைகிறான் [தன்னுடையசெனங்களால்மறு மைப்பயனிழத்தலே தோஷமென்பதுகருத்து] ஆகையாலிவ்வுலகில்தோ ஷமில்லாமலிருக்கிற பார்வைகள் எவைகள் துக்கவேக்காடில்லாததிக்குகள் எவைகள் க்ஷணத்தில்நாசமடையாதபிராணிகள் எவைகள்வஞ்சகமில்லாத செய்கைகள் எவைகள் * (அ-கை) அன்னியமானசீவர்கள்க்ஷணத்தில்நா சமடைகிறதாகவிருந்தாலும் பிரமாவினதுசாலோக்கியத்தையடைந்திருக் கிறகற்பாயுசுக்களான சீவர்களுக்கு க்ஷணத்தில்நாசமுண்டாகிறதில்லையெ னில்தற்குச்சொல்லுகிறார் | சென்றுபோனதாயு மேல்வரப்போகிறதாயுமி ருக்கிற அனந்தகற்பங்களுடைய எண்ணிக்கையை யறியப்படாமலிருக்கும் போது க்ஷணங்களுங்கற்பங்களுமனந்தமென்கிறத்தில்விசேஷமில்லாததினாலி க்கற்பங்களும்விஷ்ணுருத்திராதிகளுடையபார்வைக்குக்ஷணங்கள்தானாகை யால் பிரமலோகத்திலிருக்கிற பேர்களுங்கற்பமென்றுபேருடையதானக்ஷ ணத்தில்பிறப்பிறப்புக்களையுடையவர்கள்தான் ஆகையால்சலனமில

வங்காட்டைமுதலான அவயவத்தையுடைய காலத்தினுடையகூட்டத்தில்இ
லகுதீர்க்கமென்கிற புத்திகளும் சிரசீவிகள் க்ஷணசீவிகளென்கிற புத்திக
ளும்பார்க்கின்றவனுடையகற்பனையாலுண்டாகின்றமையால்பொய்களித
ற்குச்சரியானநியாயத்தினால் பிரமாண்டங்களுமனந்தங்கோடிபிரமாண்டங்
களுடையபார்வைக்குஅணுக்கள்தானென்றுசிறியதுபெரியதுமுதலானபுத்
திகளும் பொய்களென்றறியத்தக்கதுகள் [நாருடைய ஒருதினத்திலனே
கக்ஷணங்கள் தோற்றுகின்றதுபோல விஷ்ணுருத்திராதிகளுடைய ஒரு
தினத்திலனேகபிரமகற்பங்களாகியக்ஷணங்கள்தோற்றுகின்றமையால் கண
ங்களுக்கும் கற்பங்களுக்கும்பேதமில்லை ஆகையால்பிரம சாலோக்கியமுத
லானபதமுத்திகளுமனித்தியமென்பதுகருத்து] (அ-கை) முன்சொன்
னபடிபிரகிருதிசொரூபத்தைப்பார்க்கும் பொதுவிகாரங்களுடைய கூட்ட
மெல்லாம் அநித்யமாகவேதோற்றப்படுகுதென்றுசொல்லுகிறார் | எவ்விட
த்திலுங்கல்லை மலைகளென்றும் மண்ணைப்பூமியென்றுங் கட்டையைம
ரங்களென்றும்மாமிசத்தைச்சனங்களென்றுமிவைகள் விவகாரத்திற்காகப்
புருஷர்களால்வேறுவேறாகப்பெயரிடப்பட்டிருக்கின்றதேதவிர பரமார்த்த
த்தில்விசாரிக்கும்போதுமுன்னிருக்கின்ற கல் மண் முதலானகாரணத்தைத்
தவிரபுதிதாயொன்றுமில்லை ஆகையாலிவ்விடத்திலொரு விகாரமன்றியிவ்வு
ஞ்சகலசெகத்திற்குங் காரணமாயுமிருக்கிற ஒன்றானபரமார்த்தவஸ்துவே
யிருக்குதென்றுதோற்றுகுது * (அ-கை) கல்மண் முதலானதுகள்மகா
பூதசொரூபமென்று சொன்னதைப்பிரகாசமாகத்தெரிவிக்கிறார் | பிருதிவி
முதலானபஞ்சபூதங்களொன்றுக்கொன்று சேர்ந்துகடமுதலானபலவிதப
தார்த்தமாகவிருந்துகொண்டு அவிவேகிகளுடையபுத்தியினாலிந்தநாமரூப
ச்செகமாகக்காணப்படுகுது இதைநீங்குதல்கஷ்டம் விவேகமானபார்வை
யினால்பிரித்துப்பார்க்கும்போதுபஞ்சபூதங்களைத்தவிரவேறென்றுமில்லை
[பஞ்சபூதங்க ளொன்றுக்கொன்றுசேர்ந்து அனேகவித நாமங்களாகத்
தோற்றுகின்றதைப்பஞ்சீகரணத்தினாற்கண்டுகொள்க] (அ-கை) கிளி
ஞ்சில்வெள்ளியால்கடக மகுடாதிகள்செய்வதற்குக் கூடாததுபோலமுன்
சொன்னபடிபதார்த்தங்கள்பொய்யானால்சீவர்களுக்கு விவகாரங்கள்போக
ங்களிதுகளுடையசமத்காரமெப்படியுண்டாகுமெனிலதற்குச்சொல்லுகிறா
ர் | தெரிந்தவர்களுடையமனதிலுமிந்தப்பொய்யானபதார்த்தங்களில் போக
சமத்காரத்தைப்பண்ணுகிறவிவகாரசமத்காரமானது ஆச்சரியமல்ல அதே
னெனிலப்படிக் கொத்தசமத்காரமானது சிலமனுஷியாளுக்கு ஒருக்கால்
சொற்பனத்தில்காணப்படுகிற பொய்யானவிஷயத்திலுமுண்டாகுது [எல்



லாருக்குஞ்சொப்பனப்பிரபஞ்சம் பொய்யாயிருந்தாலுமதிலுண்டானபோ
கங்கள்பிரசித்தந்தான் ஆனாலும் மிகுந்தசுகதுக்கங்களையுடைய போகத்தி
னுடையவாரம்பத்தில்சீக்கிரமாய்விழிக்கின்றமையால் பிரபலகருமமிருந்தா
ல்மாத்திரம்வெகுகாலம்போகத்தையனுபவிக்குபடியானசமத்காரமுண்டாகு
து * (அ-கை) போகத்தில்சமத்காரமிருந்துதேயாகிலிப்போதுதானே
என்வைராக்கியத்தையடைகிறீர் போகங்களையனுபவித்துக் கிழத்தனத்தில்
வைராக்கியத்தையடைந்து ஆத்மவிசாரஞ்செய்கிறதுயுத்தமெனில்போகத்
திலிச்சையுண்டானால் வைராக்கியமும் விசாரமும் ஒருநாளுங்கிடைக்கமா
ட்டாதென்றுசொல்லுகிறார் | இவ்வயதிலுமினிவரப்போகிறவயதிலும்போ
கவாசையினதுகற்பனையானதுஆகாசக்கொடியினுடையபழம்போலவிசார
ணையில்லாததினால்பெரிதாயிருக்கும்போதுபோகவாசையினது லேசத்தினா
ற்கெடுக்கப்பட்டிருக்கிற புருஷாளுக்குயெல்லாத்துக்கும் உயர்ந்ததாகவிரு
க்கின்றபரமாத்மவஸ்துவினுடைய விசாரணையைபபண்ணுகிறவார்த்தை
யேவுண்டாகிறதில்லை [சர்வகாலமுமநந்தவிசாரணை தூரத்திற்றள்ளப்ப
ட்டிருக்குதென்பதுகருத்து] (அ-கை) போகங்களிலவிருப்பமிருக்கும்
போது புருஷார்த்தமானமோட்சமாத்திரஞ் சித்திக்கமாட்டாதென்கிறதில்
லை பின்னையோபெரிதானஅனர்த்தமும்வருமென்றுசொல்லுகிறார் | சீவ
ர்களுயர்ந்த போகத்தையனுபவிக்கின்ற இராஜாக்கள்முதலானவர்களுடை
யஸ்தானத்தையிச்சித்துசுதந்தரமானஎத்தனங்களைப்பண்ணிக்கொண்டுஇ
ராகமுலானதுகளால்மூடமாயிருக்கிறதன்மனதினாலேயே அடிபட்டதாய்க்
கொண்டு எவ்வனத்திலேயேசந்தேகமில்லாமற்கெட்டுப்போகுது(அ-கை)
இப்போதுசொன்ன அருத்தத்தைவேறொரு திஷ்டாந்தத்தினாற்றிடப்படுத்
துகிறார் | மிகவும்பச்சையான மூங்கில்முதலானகொடிரூபமானபலத்தினு
டைய ஆசையினாலேயேமலை நுனியிலிருந்துவிழுகிறஆடுமுதலானதுபோ
லவிழுந்துகெட்டுப்போகுது*அ-கைபிரபஞ்சத்திலபோகவிருப்பமுள்ளவர்
களதிகமேதவிர அறமுதலியவைகளைச்செய்கிறவர்களரிதென்று சொல்லு
கிறார் | ஒருத்தரும்போகக்கூடாத பள்ளத்திலிருக்கிறமாமானது நிழலி
லை பூ கொடி பழமுதலியவைகளால் சீவர்களுக்கற்பமும் உபகாரமில்
லாமல்வீணாகவிருக்கின்றதுபோல வித்தை வணக்கந் தனமுதலானசெல்
வங்களையுடையமனிதர்களுந் தங்கள்சரீரத்தையேபோஷித்துவீணாகநாச
த்தையடைகிறார்கள் * (அ-கை) சிலவிடங்களில்தற்மவான்களுமிருக்கி
றார்களாயினும்விவேகிகள்கிடைப்பதரிதென்று சொல்வதற்காகச்சீவர்களி
ரண்டுவிதமென்றுசொல்லுகிறார் | நெருக்கமான காடுகளிற்சஞ்சரிக்கிற

மான்கலைப்போல சிலதேசங்களில் சிலசனங்கள் தயவு தாட்சண்ணியம்
பொறுமைமுதலானதால்மிருதுவையும் விந்தைவணக்கமுதலான அழகை
யுடையதாயும் சிலதேசத்திலசிலசெனங்கள் கோபம் லோபம்குரூரம் முத
லானகெட்டகுணங்களால்திடமானசித்தத்தோடுஞ்சஞ்சரிக்கிறார்கள் (அ - கை)
தனக்குண்டானநடுக்கத்தைத்தெரிவிக்கிறார் | காமத்தில்விருபபத்தையுடை
யசீவர்களானது பலவிதகோணலாகிய நடக்கைகளிலேயே எப்போதுமா
சையையுடையதாயிருப்பதினாலு மெவவுலகிலிப்போது விவேகிகள் சொப்பன
த்திலுங் கிடைப்பதரிதாயிருக்கின்றதனாலுஞ் சகலகருமங்களுமவசியந்துன்
பத்தையுண்டுபண்ணுகிறதாகவே நிச்சயமாகவிருக்கின்றதனாலுஞ்சீவித்திரு
க்கின்ற இந்தத்திசையானதெப்படிபோக்கத்தக்கது நானறியேன்.

இருபத்தேழாவதுசருக்கமுற்றிற்று.

# இருபத்தெட்டாவதுசருக்கம்.



இச்சருக்கத்தில் சகலபோக்கியவஸ்துக்களுங் கெட்டதென்றுதோற்று
வதின்பொருட்டுசகலபதார்த்தங்களும் க்ஷணத்துக்குக் க்ஷணம்வித்தியாசமா
ன சுபாவத்தையுடையதென்று சொல்லப்படுகுது.

(அ - கை) சகலபதார்த்தங்களுஞ்சர்வகாலமும்வித்தியாசத்தையடை
கிறசுபாவத்தையுடையதாகையினால் நல் விசுவாசமில்லையென்றிராமர்சொ
ல்லுகிறார் | சராசரரூபமாகக் காணப்படுகிற விச்சமெல்லாஞ் சொப்பனத்
திற்காணப்படுகிறசபைகூடுகிறதுபோல நிலையின்றியிருக்குது * நீரில்லாத
கடற்போலிருக்கிற பள்ளமானது சிறிதுநாளில மேகங்களாற் சூழப்பட்டம
லையாகவாகுது *விஸ்தாரமான காடுகளோடு கூடியுமாகாசத்தை யளா
வியுமிருக்கிறமலையானது சிலதினங்களுக்குள்ளே பூமிக்குச்சரியாகவாவது
அல்லதுகிணறாகவாவது ஆகுது * இப்போதுபட்டுமாலைசந்தனமுதலா
னவைகளாலலங்கரிக்கப்பட்டிருக்கிறசரீரமேநாளைக்கு வஸ்திரமில்லாமற்று
ரத்திலொருகுழியிற் சிதறிப்போகின்றது * இப்போது அடிக்கடிவிசித்திர
ங்களானநடக்கைகள் நடந்துகொண்டிருக்கிற பட்டணமானது காணப்ப
ட்டவிடத்திலேயேசிறிது தினங்கட்குள்ளே மனுஷியசஞ்சாரமில்லாத கா
டானது உண்டாகுது * இப்போதழகாயிருந்து கொண்டராசாட்சிசெய்கி



ற புருஷனேசிலதினங்கட்குள்ளே சாம்பற்கூட்டமாயிருக்கையை அடைகி
றான் * ஆகாசமண்டலம்போல மிகவும்பயங்கரமாயும் விஸ்தாரமாயுமிரு
ண்டுமிருக்கிற பெரிதானகாடானது கொடிகளாலாகாசத்தை மறைத்துக்
கொண்டிருக்கிற பட்டணமாகவாகுது * பயங்கரமான கொடிமுதலான
வைகளாற்சூழப்பட்டுவிளங்குகின்றகாட்டினுடைய வரிசையானதுதிரும்ப
வுஞ்சிலதினங்கட்குள்ளே செடியில்லாதபாலைநிலமாகுது * சலமிருக்கிற
விடஞ்சலமில்லாத விடமாகவாகுது சலமில்லாதவிடம் சலமுள்ளவிடமா
கவாகுது கட்டை சலம் புல்லு இதுகளோடுகூடினசகலசகமும்வித்தியாச
த்தையடைகுது * அனித்தியமான யௌவனம் பால்யம் சரீரம் தனமிதுக
ளெல்லாம் அலைகள்போலெப்போதும் வெவவேறான சுபாவத்தையடைகு
துகள் * உலகத்திலுயிரானதுகாற்றுக்குள் ளகப்பட்டசிறிய தீபச்சுவாலை
போலச்சஞ்சலமாயிருக்கின்றது மூவுலகிலிருக்கிற சகலபதார்த்தங்களுமி
ன்னலினுடைய தோற்றம்போலிருக்கின்றதுகள் *வெகுவாயிருக்கின்ற இ
ந்தப்பிராணிகளுடைய வரிசையானது குதிர்முதலானத்தி லடிக்கடிநிறை
க்கப்படுகிற விதைகளுடைய கூட்டமானதுபோலெப்போதும் இழுதுமே
லதுவாக வித்தியாசத்தையடைகுது * அதிகமான உச்சவத்தோடு கூடி
ன அந்ததினங்களுமந்தப்பெரியோர்களுமந்தச் சம்பத்துகளுமந்தநடக்கை
களு மிவைகளெல்லாம் நாசத்தையடைந்து நினைப்பைமாத்திரமடைந்தி
ருக்கின்றதுகளே தவிரவேறல்லநாமுமதைப்போல க்ஷணகாலத்தில் போக
ப்போறோம் * தினந்தோறும் நாசத்தையடைகிறதாயுந் திரும்பவுந்தினந்
தோறு முண்டாகிறதாயுமிருக்கிற கெட்டவுருவையுடையதான இந்தநிகி
ருஷ்டமான சமுசாரத்துக்கு இப்போதும் முடிவுகாணப்படவில்லை * ம
னுஷியாள் பசுசென்மத்தையடைகிறார்கள் பசுக்கள்மனுஷியசென்மத்தை
யடைகுதுகள் தேவர்களும்வேறே சென்மங்களையடைகிறார்க ளிவடத்தி
லெதுதான் நிலையாகவிருக்கின்றது * சலங்கள் வடவாமுகாக்கினியில்
வீழ்ந்து நாசமடைவதுபோல பிரமவிஷ்ட ணுருத்திராதிகளும் காலமாகி
ற அக்கினியில்வீழ்ந்து நாசத்தையேயடைகிறார்கள் *சொற்கம் பூமி வா
யு ஆகாயம் மலைகள் நதிகள் திக்குகளிதுகளெல்லாம் நாசரூபமான அக்
கினிக்குநன்றாய்வுலர்ந்த விறகாயிருக்கின்றது * தனங்கள் பந்துக்கள்
வேலைக்காரர்கள் சம்பந்துக்கள் யிதுகளெல்லாம் நாசத்தையடையுமென்
று பயந்துகொண்டிருக்கின்றவனுக்கு ருசிக்கிறதில்லை * உலகத்தில்நாச
மாகிறகெட்டவிராக்ஷதன் எவ்வளவுமட்டும்நினைவில்வராயில்லையோ அவ்வ
ளவுமட்டும்முன்சொன்னயிந்ததனம் முதலானபதார்த்தங்களெல்லாம்ருசிக்

குதுகள் சீவர்களானது க்ஷணகாலஞ்செல்வத்தையும் க்ஷணகாலந்தரித்திர த்தையும் க்ஷணகாலம்ரோகமில்லாமலிருக்குகையும்க்ஷணகாலம்ரோகத்தை யும் அடைகுது க்ஷணந்தோறும்வேறுபட்டும் கெட்டசொரூபத்தையுடை யதாயுமிருக்கின்றசெகப்பிராந்தியினால் எந்தப்புத்திமான்கள் தான்மோகத் தையடையவில்லை ❋ ஆகாசமண்டலமானது க்ஷணகாலம் இருட்டுருபமா னசேற்றினாலெநன்றாகப்பூசப்பட்டும் க்ஷணகாலம் உருக்கினதங்கம்போல அழகாயிருக்கின்ற சந்திரகிரணம்முதலானதுகளால் சுந்தரமாயும் க்ஷண காலம் மேகங்களாகிறகருநெய்தற் பூக்களுடையமாலையினாலேசுற்றப்பட் டிருக்கின்றநடுவையுடையதாயும்க்ஷணகாலந்திடமாயிருக்கின்றசப்த்தத்தை யுடையதாயும் க்ஷணகாலம் உளமைபோலேயும் க்ஷணகாலநட்சத்திரங்க ளோடேகூடிக்கொண்டும் க்ஷணகாலஞ்சூரியனாலே அலங்கரிக்கப்பட்டும் க்ஷணகாலம்சந்திரனாலுண்டாகின்ற சந்தோஷித்தையுடையதாயும் க்ஷண காலம்முன்சொன்னசகலபதார்த்தங்களாலேயும் விடுபட்டுமிருக்குது [இ ந்தநிஷ்ட்டாந்தத்தைப்போல செகமிருக்குதென்பதுகருத்து] எப்போது ம்வருகின்றதாயும்போகின்றதாயும் க்ஷணம்இருப்பையும் க்ஷணம்நாசத்தை யும் உடையதாயிருக்கின்ற இந்தசெகத்தினுடையஇருப்பினால் இச்சமுசா ரத்தில் எந்ததைரியமுள்ளபுருடன்தான்பயப்படவில்லை ❋ க்ஷணத்தில் ஆ பத்து க்ஷணத்தில்சம்பத்து க்ஷணத்தில்சனனம் க்ஷணத்தில்மரணம்வருகு துகளாகையால் எதுதான்நிலையாயிருக்குது இவ்வுலகில்முன்னாலிருந்த ஒருமனுஷியனேசிறிதுதினங்களில்வேறாகிறான் ஒருபதார்த்தமும் எப்போ தும் ஒருவடிவையுடையதாயும் நிலையாயுமிருக்கிறதில்லை [வேறென் றுசொன்னது சட்பாவவிகாரத்தாற்கண்டுகொள்க] கடம்படமாகிறதும் படம்கடமாகிறதும் காணப்படுகுது இச்சமுசாரத்தில் வித்தியாசத்தைய டையாமலிருக்கின்ற வஸ்துகாணப்படவில்லை [பருத்திவிளைக்கிறநிலத்தி ல்சிதறியிருக்கின்றகடமானது பரித்தியாகப்பரிணமித்துப் படமாகுது அ ப்படியேபடமுங்கடமாகுதென்பதுகருத்து] செனனம் விருத்தி முதிர் தல் குறைவு நாசம் இந்த அஞ்சுவிகாரங்களும்புருடனைக்குறித்து இராத் திரிமத்தியானங்கள்போல வெகுகாலமிராமல் எப்போதுஞ்சுற்றுகின்றது கள் ❋ பராக்கிரமமில்லாதவனால்சூரனடிபடுகிறான் ஒருவனால்நூறுபேரடி படுகிறார்கள் அற்பாள்பிரபுத்துவத்தையடைகிறார்கள்சகலசகமும்வித்தியா சத்தையடைகுது❋ இச்சீவாத்மாக்களானதுசடமானபிராணன் முதலான அசைவினுடையசம்பந்தத்தினால்விலைகளுடையவரிசையானதுபோலெப்போ தும்வித்தியாசத்தையடைகின்றது ❋ பால்யமானதுசிறிது தினங்களிலேயே



போய்விடுகுது அப்படியே எவ்வனமுஞ்சரையும்போகுது ஆகையால் தே கமும் ஒருதன்மையாகவிருக்கவில்லை அப்படியிருக்க வெளிவஸ்துக்களில் என்னவிசுவாசஞ் செய்யத்தக்கது❋ கூத்தாடியானவன் விதனஞ்சந்தோ ஷமுதலான அபிநயத்தைக்காட்டுவதுபோல மனதானது சகலபதார்த்தத் திலும் க்ஷணகாலஞ்சந்தோஷித்தையும் க்ஷணகாலம் விதனத்தையும் க்ஷ ணகாலந்தெளிவையுமடைகின்றது ❋ சமுசாரத்திலுண்டாகிற பதார்த் தங்கள டிக்கடிதோற்றி மறைந்துகொண்டிருக்கின்றமையால் சீவர்களுக் கு ஆபத்துகளுஞ் சம்பத்துகளும் நிலையாகவிருக்கவில்லை ❋ சகலசமர்த் தாவினையும் எளிதாகவே வெவ்வேறான விகாரத்தையுடையதாகப் பண்ணு கின்ற நடக்கையினால் வல்லமையாகவிருக்கின்ற இந்தக்காலமானது சக லத்தையும் மிகவுமாபத்திலே தள்ளிக்கொண்டு விளையாடுகுது ❋

இருபத்தெட்டாவதுசருக்கமுற்றிற்று.

# இருபத்தொன்பதாவதுசருக்கம்.



இச்சருக்கத்திலிராமர்சகலபதார்த்தங்களிலுந்தோஷங்களைக்கண்டமை யால் தனதுவைராக்கியத்தைச்சொல்லி அத்தோஷநீங்குதற்காகவுபதேசத் தைப்பிரார்த்திக்கிறாரென்றுசொல்லப்படுகுது.

இந்தப்படிதோஷங்களுடையபார்வையாகிறகாட்டுத்தீயினால்ஆசையினுடை யவிதையானதுகொளுத்தப்பட்டிருக்கிறதாயு மதிகமானவிவேகத்தையுடை யதாயுமிருக்கிற என்சித்தத்திற்போகவாசைகளானதுகள்தடாகத்திறகானல் நீருண்டாகாததுபோலவுண்டாகிறதில்லை ❋ இச்சமுசாரத்தினிருப்பானது நாளாக நாளாகக்கொடி வேம்புபோல அதிககசப்பைத் தினந்தோறுமு ண்டுபண்ணுகுது ❋கருவேலமுட்போற்குரூரமானமனதிற்றினந்தோறுந்து ர்மத்தினதுபாதம்நசிக்கின்றமையாலும்அதர்மத்தினதுபாதம்விருத்தியடை கின்றமையாலும் கெட்டநடக்கைவிருத்தியடைகின்றதுநன்னடக்கைகுறை ந்துபோகின்றது❋ உலர்ந்திருக்கிறஉளுத்தநெற்றானதுடங்காரசப்தத்தோ டுவெடிக்கின்றதுஉலகத்தினதுவருணாச்சிரமதருமமோவெனில்சத்தமில்லாம ற்றினந்தோறுஞ்சீக்கிரமாகப்போகின்றது❋ இராச்சியங்களினாலும் போகங் களினாலும் வெகுசிந்தைகளுண்டாகின்றமையாலவ்விராச்சியமுதலானவை

களினுமொருசிந்தையன்றியில்லைகாக்கிரமாகவிருக்கையே சிரேஷ்டமென்ற ங்கீகரிக்கப்பட்டுது ✻ எனக்குப்பூங்காவனமும் ஸ்திரிகளுந் தனமுஞ்சந் தோஷத்தைக்கொடுக்கவில்லையாகையாலமன தோடுகூடசாந்தியையடைகி றேன் ✻(அ-கை) சாந்தியைத்தவிரசுகவேது வேறென்றுமில்லையென்று சொல்லுகிறார் | உலகமனித்தியமாயுஞ் சுகத்தைக்கொடாமலுமிருக்கின்ற மையாலும் ஆசையபாரமாயிருக்கின்றமையாலும் மனதுசஞ்சலத்தினுற் கெட்டுப்போயிருக்கின்றமையாலும் யானெப்படிசுகமடைவேன் ✻ நான்ம ரணமடைகவலையுஞ் சீவித்திருத்தலையுஞ் சந்தோஷிக்கவில்லை எப்படியி ருக்கிறேனே அப்படியே ஒருதாபமின்றியிருக்கிறேன் ✻ எனக்கு அகங் காரம்போய்விட்டமையாலவ்வகங்காரத்தினுலுண்டான இராச்சியம் போ கம்தனம் ஆசையிதுகளால் கவேண்டுவதென்னவிருக்கின்றது ✻ மிருதுவா கவிருக்கிறதாமரைப்பூவானது யானையினதுகால்களாலதுவைக்கப்படுகி றதுபோல மனதானது ஸ்திரிகளாலுபத்திரிக்கப்பட்டிருக்கின்றது ✻ அந் தச்சித்தமானது நிருமலமானபுத்தியினுலிப்பால்யவயதிற் சிட்சைசெய்யாமற் போனுலப்போது திரும்பவுஞ்சித்தத்தைச் சிட்சைசெய்வதற்குச்சமயமேது [மரமானது முளையிற்பிடுங்குதற்கெளிது நல்லகிளைகளையுடைத்தாயிருக்கு ம்போதுபிடுங்குதற்குவருத்தமென்னுநியாயத்தினுலென்பதுகருத்து] மறு சென்மங்களிலுந் துன்பத்தையுண்டுபண்ணுகிற விஷயத்தினுடையகெட்ட செய்கையே விஷம் ஒருதேகத்தைமாத்திரங்கொல்லுகிறவிஷம் விஷமாகச் சொல்லப்படவில்லை ✻ . சங்கை · தத்துவஞானிகளும்விஷயங்களையனுப வித்துக்கொண்டுசுகத்தையடைந்தவர்களாகக்காணப்படுகிருர்களவர்களிடத் திலென்னவிசேஷமிருக்குதெனில்தற்குச்சொல்லுகிறார் | ஆத்மஞானியினு டையமனதுக்குசுகம் துக்கம் சினேகிதன் பந்துக்கள் சீவனம் மரணமி வைகளெல்லாம்பந்தத்தைக்கொடுக்கிறதில்லை ✻ (அ-கை) உற்பத்திமுத லான துக்கத்தைவேரோடறுக்கின்றமையால்தத்துவஞானமே பெரிதானபு ருஷார்த்தமென்று அதற்காகவுபதேசத்தைப்பிரார்த்திக்கிறார் | ஆகையால் முன்பின்னறிந்தவர்களுக்கெல்லாம் பெரியவரே நான்ஞானியாகவிருந்து விதனம் பயம் ஆயாசமிதுகளைவிட்டிருக்கும்படி எனக்குச்சீக்கிரமாயுப தேசம்பண்ணும் ✻ (அ-கை) சீக்கிரமாயுபதேசம்பண்ணும் பொருட்டு அதிகதுக்கத்தையும் வைராக்கியத்தையுந்தெரிவிக்கிறார் | வாசனைகளாகிற கொடிக்கூட்டங்களாற்சூழப்பட்டுந் துன்பமாகிறமுட்களால் நிறைந்தும்ஆ பத்துசம்பத்து இந்தரூபங்களான்மிகுந்தபள்ளமேடுகளையுடையதாயுமிரு க்கிற அஞ்ஞானமாகிறகாடானது பயங்கரமானவுருவையுடையதாகவிருக்கி



ன்றது ✻ கைவாளின்முனைகளாலறுப்பதையுஞ்சகிப்பேன்சமுசாரவிவகா ரத்தினலுண்டாயிருக்கிற ஆசை விஷயமிவைகளால் செய்யப்படுகிற அறு ப்பைச்சகிக்கமாட்டேன் ✻ இவ்வனிஷ்டமானதிருக்குது இவ்விஷ்டமில்லை யென்று அனிஷ்டத்தைப்போக்குவதிலுமிஷ்டத்தைச்சம்பாதிப்பதிலும் பி ரவிர்த்திநிவிர்த்திரூபமாகிய விவகாரரூபமான அவித்தையாகிற அஞ்சன த்தினலுண்டாகிறபிராந்தியானது சுபாவத்திலேயேயிருக்கிற யிந்தமனதை புழுதியைக்காற்றுனதுபறக்கடிக்கிறதுபோலப்பறக்கடிக்குது [சந்தோஷம் விதனஞ்சிந்தைமுதலானதுகளாலறுத்துப்போடுகுதென்பதுகருத்து] இ ருதயமாகிற காட்டுக்குப்பனியாயிருக்கிற என்மனதினுடைய அஞ்ஞானமா கிறயிருட்டை சுகத்தைக்கொடுக்கிற உம்முடைய உபதேசமாகிறசூரியனு ற்போக்கவேண்டும் [விவேகமாகிறகண்ணைமறைக்கின்றமையாலஞ்ஞான த்தையிருட்டெனவறிக] சூரியனுல்நாசமடையாத யிருளிலாததுபோல பெரியோர்களுபதேசத்தினுல்நாசமடையாதமனோவியாதிகளிலவேயில்லை ✻ (அ-கை) சாந்திமுதலானதிடமில்லாமலும் பாலனுயுமிருக்கிற உன்னி டத்திலுபதேசஞ்செய்தபோதிலும் அதெப்படிபலிக்குமெனில் தனக்குசாந் திமுதலானவைகள் திடமாகவிருக்குதென்றுசொல்லுகிறார் | ஆயுள்காற்றி லசைகிற சலத்துளிபோலநசுவரமாகவும் மின்னற்போற்சஞ்சலங்கள் நிலைக்கப்பட்டிருக்கிற மேகவரிசையிற்றெங்குகிற மேகங்களினடுவில்விளங்குகிறமின்னலைப்போலச்சஞ்சலமாகவும் போகங்கள் விளையாட்டுகள் சலத்தினுடையவேகம்போலச்சு ரம் போகங்கள் ... எவ்வனத்தினுலுண்டானவிளையாட்டுகள் சந்தியின்பொருட்டேசி ஞ்சலங்களிந்தப்படிசீக்கிரமாய்விசாரணைசெய்துசாந்தியின்பொருட்டே தென் ஞ்சலங்களிந்தப்படிசீக்கிரமாய் அதிகாரமுத்திரையானதிபோதென்றுக் த்தத்தினிடத்தில்வெகுகாலமாளுகிற அதிகாரமுத்திரையானதுவெகுபோதிகாரங்கட்குக்காற்றுக் ஞற்கொடுக்கப்பட்டுது [அரசனுனவன் வெகுபோதிகாரங்கட்குக் ... லோபம் பயமுதலானதோஷ கொண்டிருந்தபோதிலும் எவர்களிடத்தில் லோபம் பயமுதலானதிருக்கி ங்களால் தேசபிடையிதாதேசத்தைப்பிடியாமலிருக்கை முதலானதிருக்கிறபுருஷின் ன்றதோ அவர்களைவிட்டு குணவானுயுஞ்சமர்த்தனுயுமிருக்கிறபுருஷன் எவனுகவிருந்தாலுமுக்கியமான அதிகாரமுத்திரையானதுகொடுக்கப்படுகி ன்றதோ அப்படி நானிந்தவயதிலும் ஆயுள் போகம் எவ்வனமுதலான வைகளிலாசைசாபல்லியமுதலான தோஷங்களால்சித்தத்தில் துக்கம் நாச முதலான அனர்த்தத்தை எண்ணி அதுகளைவிடடுசகலதோஷங்களுமில் லாததாயும் வலியுள்ளதாயுமிருக்கிறசாந்தியின்பொருட்டு சஞ்சலமின்றியி ருக்கிறஅதிகாரமுத்திரையானதுசித்தத்தையடக்கிறகாரியத்தில் கொடுக்கப்ப ட்டதென்பதுகருத்து]

இருபத்தொன்பதாவதுசருக்கமுற்றிற்று.

# முப்பதாவதுசருக்கம்.



இச்சருக்கத்திவிராமர்தன அசித்தத்தின் நடுக்கத்தை யேதுக்களால்பிர காசப்படுத்தி அதைப்போக்குதற்காகவுஞ்சித்தசமாதானமுண்டாவதற்காகவு ம்தத்துவவுபதேசத்தைப்பிருர்த்திக்கிருரென்றுசொல்லப்படுகுது.

முன்சொன்னபடியுண்டாயிருக்கிற அனேக அனர்த்தங்களால் நெருக் கமாயிருக்கிறசமுசாரரூபமானபாழுங்கிணற்றுக்குள்ளே செனங்கள் முழுகி யிருக்கிறதைப்பார்த்து என்மனதானதுசிநதைரூபமான சேற்றில்முந்தியி ருக்கின்றது * என்மனதானது முன்சொன்னதனமுதலானதோஷத்தினு ற்சுழலுகின்றதுபோலேயிருக்கின்றது பயமும் உண்டாயிருக்கின்றது துற் பலமானமரத்தினிலைகள்போலென்னதவயவங்கள் நடுங்குதுகள் * இரட்சித் தற்குவலிமின்மியிருக்கிறகணவனையுடைய எவ்வனஸ்திரியானவள் காடுமு தலானத்திலொரு யிடமகப்படாமலெப்படிபயப்படுவளோ அப்படி என்பு த்தியானதுஉத்தமசநதோஷத்தைக்கொடுக்கிறதைரியரூபமானமாதாவின்ம டியையடையாமலிருக்கிறகுழந்தையைப்போல ஒருநிலையையடை யாமற் சஞ்சலத்தையடைந்து பயப்படுகின்றது * பள்ளத்திற்றெருங்குகிற அசார மானபுல்லைபிச்சித்துக்கொண்டிருக்கிறமான்கள் தெரியாமையினுல்விழுகி ன்றதுபோல பொய்யானவிஷயங்களாலவஞ்சிக்கப்பட்டிருக்கிற அந்தக்க ரணவிருத்திகளானதுகள் விஷயரூபமானதுன்பமாகிற பள்ளத்தில்விழுகி ன்றதுகள் * (அ·கை) அதற்கேதுவைச்சொல்லுகிருர் | நிகிர்ஷ்டமாயு ம் அவிவேகிகளையடைந்துமிருக்கிற கண்முதலான இந்திரியங்களானது கள்சமுசாரத்திலேயேதிடமான வாசனையையுடையதாகிப் பரமார்த்தவஸ் துவைப்பரிசயம்பண்ணுததினுல்பாழுங்கிணர்கள்போலவிருக்கின்றதுகள் * சிந்தையானதுசிவனுநிறகணவனுக்குவசமாகவிருந்து புருஷன்வீட்டிலிரு க்கிறஸ்திரியைப்போலத்திவையடைகிறதுமில்லைதனக்கு வேண்டியவிடத்தி ற்போகிறதுமில்லை * தைமாதத்துக்கொடியானதுபனியினுற் கெடுதலை யடைகின்றதுபோல தைரியமானதுவிவேகத்தினுற்சிலவிஷயங்களை இா சமில்லாமலவிட்டுசில்விடயங்களை இரசமிருக்கிறதாகக் கிரிகித்துக்கெடுத லையடைகுது [இரசமாவது மனதினுடைய ஆசை ரசமும்பரத்தைக்கண் டபின்புபோய் விடுகுதென்றுபகவான் சொல்லியிருக்கின்றமையால் ஆத் மதரிசனமில்லாமல்ரசம்போகிறதில்லையென்பதுகருத்து] (அ·கை) கி லேசத்தைச்செய்கிற அந்த நடு அவஸ்தையைத்தானே விரிவாகச்சொல்லுகி ருர் | என்னை இச்சமுசாரத்தினிருப்பானதுவிவேகத்தினுற்பாதிவிடடும்பா



ர்த்திபிடித்துக்கொண்டுமிருக்கின்றமையால் என்மனது நிலையில்லாமலிருந் துகொண்டு சமுசாரசுகம் மோட்சசுகமிவவிரண்டுசுகங்களையுங் கையினுற் பிடித்துத் தள்ளிக்கொண்டிருக்கின்றது [ஆகையாலிரண்டுங் கிடையாதே போய்விட்டுதென்பதுகருத்து] கட்டையைப்பார்த்துக்கள்ளனே கட்டை யோவென்கிறசமுசியத்தையடைகின்றதுபோலதத்துவநிச்சயமில்லாதஎன் புத்தியானது இதுதத்துவமோ அதத்துவமோவென்கிறசமுசியத்தையடை ந்துகொண்டிருக்கின்றது * தேவருனவன்பலபோகங்களால் நிறைந்தவி மானத்தைவிடாததுபோல சஞ்சலமாயும் பலபோகவாசனைகளால் நிறை ந்தும் உலகங்களில் விளையாடி விளையாடி அப்பியாசிக்கப்பட்டிருக்கிறசா பல்லியத்தையுடையதாயுமிருக்கின்ற இந்தச்சித்தமானது பலவநதமா க அடக்கினபோதிலும் தத்துவக்கியானரூபமானபற்றில்லாததினுல்சஞ்சல த்தைவிடுகிறதில்லை * ஆகையால்புருஷனுக்குபரமார்த்தசத்தியமாயுஞ்சன னமரணரூபமானஆயாசமில்லாமலுந் தேகமுதலான உபாதியில்லாமலும் பிராந்தியில்லாமலும் ஒருதுன்பமில்லாமலுமிருக்கிற இனைப்பாறுகிறயி டம்யாது * சற்சனரானசனகர்முதலானபேர்கள் திருஷ்டபலங்கள் அதிர் ஷ்டபலங்களுக்கனுகூலமானலெளகிகவைதிகவிவகாரத்தைப்பண்ணிக்கொ ண்டெப்படிஉத்தமபதத்தையடைந்துசீவன்முத்தர்களானுர்கள் * இவ்வுல கத்தில்புண்ணியபாபரூபமாயுமசோகமோகரூபமாயுமிருக்கிறசமுசாரமாகிற சேறுஅசரீரத்தில்மிகுதியாகப்பற்றினபோதிலும புருஷனையெப்படிபற்றுமலி ருக்கும் * இவவுலகிற்களங்கமற்றவர்களாயும் பெரியோர்களாயும் பெரிதா னபுத்தியையுடையவர்களாயுமிருக்கிறநீங்களேந்தப்பார்வையையடைந்து சீவன்முத்தர்களாகச்சஞ்சரிக்கின்றீர்கள் * விஷயரூபமானசற்பங்களான துகள்பயத்தின்பொருட்டே ஆசைப்படுத்திக்கொண்டு நசுவரமான கோண லாயிருக்கின்றவுருவுடையதாயுஞ்செல்வமாகிறவிஷத்தையுடையதாயுமிருக் கின்றமையால் மங்களரூபமாயிருக்கையையெப்படியடையும் * மோகமாகி றயானையினுற்கலக்கப்பட்டும் காமமுதலானசேற்றையடைந்துமிருக்கிற புத்திரூபமானபெரியஓடையானதுஎப்படிதெளிவையடையும் * தாமரையி லையிற்சலமானதுபற்றியும்பற்றுமலிருக்கின்றதுபோல சனனமரணப்பிர வாகரூபமானசமுசாரத்திலேயே புருஷனுனவன் விவகாரத்தைப்பண்ணிக் கொண்டிருக்கும்போதும்எப்படிபற்றுமலிருப்பன் * புருஷனுனவனிச்சக லசெகத்தையும் உட்பார்வையினுல்பிறனுக்குவந்ததுன்பந்தனக்கு வந்ததுபோலவும் தனக்குவந்ததுன்பந்துரும்பைப்போலவும் வெளிப்பார்வையினுல்தனச்குவந்ததுன்பநதுரும்பைப்போலவும்வெளிப்பார்வையினுல்தனக்குவந்ததுன்பந்துரும்பைப்போலவும்

டிசிவன் முத்தியையடைகுவன் * புருஷனானவன் அஞ்ஞானரூபமானகட
லைத்தாண்டியிருக்கின்றசிவன்முக்தனாக எந்தப்புருஷனுடையநடக்கை
யைநடந்துதுன்பத்தையடையாமலிருப்பன் * அடைதற்குயோக்கியமான
மோட்சம் எது யோக்கியமான கருமம் உபாசனை முதலானத்தினுடை
யபலம் எது கெட்டதான இச்சமுசாரத்திலெப்படியிருக்கவேண்டும் * ஒ
ருவிதமாகயிராமலிருக்கிறதெய்வத்தினுடையசெய்கைரூபமான இச்செகத்து
க்கு உற்பத்திக்குமுன்னும் நாசத்துக்குப்பின்னு மிருந்திருக்கிற வஸ்துவை
எந்தவுபதேசத்தினலறிவேனே அந்தத்துவமானவுபதேசத்தை எனக்கு
ச்சொல்லவேண்டும் * இருதயாகாசத்துக்குச்சந்திரனாயிருக்கின்றசித்தத்தி
னுடைய அஞ்ஞானமாகிறகளங்கம்போகும்படிக்கு ஒருதடங்கலில்லாமற்
றுனேசெய்யவேண்டும் * இவ்வுலகத்தில் கிரகிக்கத்தக்கது எது விடத்தக்கது
எது இவ்விரண்டுமின்றியிருக்கிறதெது சஞ்சலமாயிருக்கிற என்மனதும
லைபோல் அசையாமலிருக்கையையெப்படியடையும் * அனேகதுன்பங்க
ளையுண்டுபண்ணுகிற இக்கெட்டசமுசாரமாகிற விஷபேதியானதுபரிசுத்த
மான எந்தமந்திரத்தினலெளிதாகச் சாந்தியடையும் [ரோகங்களெல்லாம்
பாபத்தினலேயேவுண்டாகின்றமையால் பாபத்தைப்போக்கடிப்பதைமுன்
னிட்டுக்கொண்டுபரிசுத்தமென்றுசொன்னது] ஆனந்தமாகிறமரத்துக்கு
ப்பூங்கொத்துப்போலவும்தேசகாலங்களாலளவிடப்படாமலுமிருக்கின்றகு
ளுமையைப்பூரணச்சந்திரனைப்போலமனதிலெப்படி நானடைவேன் *மன
தில்நிறைவையடைந்துபூரணனாகவிருந்துகொண்டு திரும்பவுந்துக்கத்தை
யெப்படியடையாமலிருப்பனே அப்படி தத்துவத்தையறிந்தபேர்களாயும்
பெரியோர்களாயுமிருக்கிறநீங்களிவடத்தில் எனக்கு உபதேசம்பண்ணுங்
கோள் *காட்டில்குத்துயிராகவிருக்கின்றதேகத்தைச்செந்நாய்கள் உபத்தி
ரவப்படுத்துகின்றதுபோல உயர்ந்த ஆனந்தமானவிடத்தில்முக்கியமான
இளைப்பாறுதலையடையாதவனாயிருக்கிற என்னை எப்போதும்விஷயே
யங்களானதுகள்மிகவும்உபத்திரவப்படுத்துகின்றதுகள்.

முப்பதாவதுசருக்கமுற்றிற்று.



# முப்பத்தோராவதுசருக்கம்.

இச்சருக்கத்திலிராமரிச்சமுசாரத்தில் பிழைத்திருக்கின்றது மழைகால
க்காட்டினுடைய கெட்டபிழைப்புக்குச்சரியாகவிருக்கின்றதென்றுசொல்லி
மோட்சமடையத்தக்கவுபாயத்தைக்கேட்கிறுரென்றுசொல்லப்படுகுது.

ஆயுளானதுமிகவுமுயர்ந்தமரத்தில்லசைந்து கொண்டிருக்கிறயிலையிற்
றெருங்குகின்றநீர்த்துளிபோலச்சீக்கிரத்தில்நசிக்கிறதாகவிருக்கின்றமையால்
சிவன் பரமசிவன்முடியிலொருகலைமாத்திரமிருந்திருக்கிற சந்திரனைப்போ
ல அற்பமாகவிருக்கும்போது [வருஷாகாலத்தில் சந்திரன் காணக்கூடாதவ
ன் அதிலும் ஒருகலைமாத்திரமிருந்திருக்கின்றசந்திரன் மிகவுங்காணக்கூடா
தவனென்பதுகருத்து] கெட்ட தேகமானது வயல்களில் கூவிக்கொண்டி
ருக்கிறதவளையின் கழுத்துத்தோலின் மத்தியம்போலச்சீக்கிரத்தில்நசிக்கின்
றதாகவிருக்கும்போது இஷ்டாள்பந்துக்களிவர்கள்சங்கமானது சிவர்களு
க்குவலைபோலவிருக்கிற கொடிகளால் சுற்றப்படும்போது [நன்மார்க்கத்
தைத்தகைகின்றமையால்சுற்ற லென்றுசொன்னது] வாசனரூபமான கிழ்
க்காற்றினுற்சூழப்பட்டும் துராசையாகிறமின்னலையுடையதாயும் பிரகாச
மாயும் உக்கிரமாயுமிருக்கிற மோகமாகிறதிவலை மேகமானது இடிவிழு
ம்படியாகக்கெற்சிக்கும்போது சஞ்சலமாயும் துஷ்டமாயுமிருக்கிற லோப
மாகிறமயிலானது அதிகமாகக்கூத்தாடும்போது அனர்த்தமாகிற குடை
மல்லிச்செடியானதுகலகமாகிறமொக்குகள் பிரிந்துமலரும்போது சிவர்க
ளாகிறஎலிகளைப்புசித்துக்கொண்டும் ஒழிவின்றியிருக்கிறசலப் பிரவாகம்
போலச் சஞ்சாரத்தையுடையதாயுமிருக்கின்ற கோடூரமானகாலனாகிறபூ
னையானது எங்கேயோ ஒரிடத்திலிருந்துமேலே விழும்போது எது உ
பாயம் எதுகதி எந்தசிந்தைபண்ணத்தக்கது எது அடையத்தக்கவிடம் எ
தினாலிந்தப்பிழைப்பாகிற மழைகாலக்காடானது இனிமேல்துன்பத்தைக்
கொடாமலிருக்கும் [காட்டிலுண்டான காற்றுமழைமுதலான பீடைபோ
கிறத்துக்கு குடை திரை பாய்முதலானத்தை வுபாயமென்றது ரசகுண்
டுமருந்துபூசுகிறதுமுதலானத்தினுல்மழையில்லாமற்செய்து கொண்டுதா
ரதேசத்திற்போகையைக்கதியென்றது சங்கடத்தில்நின்றும் விடுவிக்கின்ற
மந்திரதேவதைமுதலானதைச் சிந்தையென்றது மலைக்குகையையடைகி
ன்றதையிடமென்றது இவைகள்சாதனங்களாகவுலகத்தில் பிரசித்தமாயிரு
க்கின்றதுகள் அப்படியிவடத்திலுங்கேட்கப்படுகின்றதுகள் * தவம் ஞா
னமிவைகளுடையசத்தியினுல்திடமானபுத்தியையுடையவர்களான உங்களை

ப்போற்கொத்தபெரியோர்கள் ஏந்தவஸ்துமிகவுங் கெட்டதாயிருந்தாலும் அந்தவஸ்துவைநல்லதாகப்பண்ணமாட்டார்களா அந்தவஸ்துபூமியிலிருக்கின்றமனுஷியாளுக்குள்ளேயாவது சொர்க்கத்திலிருக்கிற தேவர்களுக்குள்ளேயாவது ஓரிடத்திலுமில்லை [அதேதெனில திரிசங்குவுக்குச்சண்டாளனாகப்போகும்படியான குருவினுடையசாபமும் கற்பகாலபரியந்தமனுபவிக்கத்தக்கசொர்க்கமாகுவாச்சுது சுனசேபனுடையமரணமுந் தீர்க்காயுளாகமுடிந்ததென்பதுகாத்த] ஏப்போதுந்துக்கசிந்தையினாற் சஞ்சலமாயும் ரசமில்லாததாயுமிருக்கின்ற இந்தநிகிர்ஷ்டமானசமுசாரமானது அக்கியானத்தைவிட்டுருசித்திருக்குந் தன்மையைபெறும்படியடையும் * வசந்தகாலத்தில்வெளுத்திருக்கிற புட்பங்களால்பூமியானது அழகையடைந்திருக்கின்றதுபோல இச்சமுசாரமானது ஆசைக்குவிரோதமான பூரணகாமனுயிருக்கையாகிறபால்மாழக்கினால் ஏப்படிஅழகாயிருக்கையையடையும் * மனதுருமானசந்திரனிடத்திலிருந்தும் சீவன்முத்தர்களுடைய அனுபவத்திற்பிரசித்தமாயிருக்கிற ஏந்தவிளக்கத்தினால் காமமுதலான அழுக்குதுடைக்கப்பட்டு சந்தோஷமாகிற கிரணமானதுண்டாகும் * முடிவில்துக்கத்தையுடையதென்றுசமுசாரநடத்தையையறிந்தவனும் இகபரலோகபோகங்களைவிவேகவைராக்கியங்களாற் போக்கடித்தவனுமிருக்கிற ஏந்தமகாபுருஷனைப்போல்நாங்களிச்சமுசாரமானகாட்டுவழிகளில் விவகாரம்பண்ணிக்கொண்டிருக்கவேண்டியதைச் சொல்லவேண்டும் * சமுசாரமாகிறசாகரத்திற்சஞ்சரித்துக்கொண்டிருக்கிறசீவர்களை ராகத்துவேஷங்களாகிறபெரிதானபோகங்களும் போகங்களுடையகூட்டங்களும் சப்பத்துகளும் ஏப்படிதுன்பப்படுத்தாமலிருக்கும் * மூலிகையின்ரசத்தினாற்கட்டப்பட்டிருக்கிற ரசமானது அக்கினியினால்வேகாததுபோல புருஷன் அக்கினிபோற்கொளுத்துகிறசமுசாரத்தில் விழுந்திருந்தபோதிலும் ஏதினால்வேகாமலிருப்பன் அந்தசிரேஷ்டமானபதமியாது * (அ-கை) விவகாரந்துக்கமேயாகிலதை விடுமெனிலதற்குச்சொல்லுகிறார் | கடலிலுண்டாயிருக்கிறசீவர்களுக்குசலமின்றியிருக்கிறயிருப்பானதுண்டாகாததுபோல சீவர்களுக்கிச்சகத்தில் விவகாரத்தைவிட்டிருக்கிறயிருப்பானதுண்டாகிறதில்லை * (அ-கை) துஷ்டவிவகாரத்திற்றுக்கமிருக்கட்டும் நன்றானவிவகாரத்திற்றுக்கத்தினுடைய எண்ணிக்கையேயில்லையெனிலதற்குச்சொல்லுகிறார் | ஆகையாற்சூடன்றியிலிருக்கிற அக்கினிச்சுவாலையானதில்லாததுபோல ராகத்துவேஷங்களாலுஞ்சுகதுக்கங்களாலும்விடுபட்டிருக்கிற நல்விவகாரமானதிவ்வுலகத்திலில்லை * (அ-கை) வெளிவிவகாரமிருக்



கட்டு மனதினுடைய அசைவேபெரிதான துக்கமாகையாலதினுடையசிட்சையைச்சொல்லவேண்டுமென்றுகேட்கிறார் | மூன்றுலகத்திலும் விஷயத்தைப்பற்றியிருக்கிற மனதினுடைய இருப்புக்குநாசமானதுயுத்தியில்லாமலுண்டாகிறதில்லை யாகையாலுயர்ந்திருக்கிற அந்தயுத்தியையெனக்குப்பூரணமாகச்சொல்லவேண்டும் * விவகாரத்தைப்பண்ணிக் கொண்டிருந்தாலும் விவகாரத்தைப்பண்ணாமலிருந்தாலும் துன்பம்வராமலிருக்கிற உத்தமமானயுத்தியைச்சொல்லுங்கோள் * உத்தமமாயும்பரிசுத்தமாயுமிருக்கிறமனதானது ஏந்தயுத்தியினாலிளைப்பாறுகுதோ அந்தவுபாயத்தை உத்தமமான மனதையுடைய ஏத்தப்புருஷன்முன்னேயெப்படிசெய்து ஏன்னபலத்தையடைந்தான் அதைநீரெப்படியறிந்திருக்கிறீரோ அப்படிசொல்லும் * சாதுக்களெந்தவுபாயத்தினால் துக்கமில்லாமலிருக்கின்றதையடைந்தார்களோ அந்தவுபாயத்தைநீரறிந்தபடி எனக்குமோகம்போகிறதின்பொருட்டு நிச்சயமாகச்சொல்லவேண்டும் * (அ-கை) அப்படிக்கொத்தயுத்திகிடையாவிட்டால் நான்தேகத்தைவிடும்படியான பிறையோபவேசம்பண்ணுகிறதேதவிர சீவனவிவகாராதிகள்பண்ணுகிறதில்லையென்றுசொல்லுகிறார் | [பிறையோபவேசமென்றது பிராணனைவிடுகிறேனென்கிற படுக்கை] அப்படிக்கொத்தயுத்தியானதில்லாமலிருந்தாலுமல்லது அந்தயுத்தியிருந்தபோதிலும் எனக்கு ஒருவராவது நன்றாகச்சொல்லாமற்போனாலுமல்லது நானேவிசாரணைசெய்தாவது உத்தமமாயும் பிரசித்தமாயுமிருக்கிற இளைப்பாறுதலையடையாமற்போனேனேயாகிலப்போது நான்சகல இச்சைகளையும் அகங்காரத்தையும்விட்டு ஸ்நானம்பண்ணுகிறது வஸ்திரத்தையுடுத்துகிறது தானங்கொடுக்கிறது சலபானம்பண்ணுகிறது புசிக்கிறதுமுதலான விவகாரத்தைப்பண்ணுகிறதுமில்லை ஒருகாரியங்களிலேயுமிருக்கிறதில்லை ஆபத்துசம்பத்துக்களிலுமிருக்கிறதில்லை தேகத்தைவிடுகிறத்தைத்தவிர நானொன்றையுமிச்சிக்கிறதில்லை * மிகவுஞ்சந்தேகமில்லாதவனாகவிருந்து மமதைமாச்சரியமிவைகளைவிட்டுச்சித்திரத்திலெழுதப்பட்டவுருவத்தைப்போல இவ்விடத்தில்மௌனமாகவேயிருக்கிறேன் * அதன்பின்புநாள்வரையில்மூச்சைவிடுகிறது வாங்குகிறது வெளிஞானமிதுகளைவிட்டுத்தேகமென்று பெயருடையதானவுருவோடுகூடின இந்த அனர்த்தத்தைவிடுகிறேன் * நான்தேகத்தையுடையவனுமல்லதேகமும் என்னுடையதல்லமற்றொருவருமென்னுடையவரல்ல எண்ணெயில்லாததீபம் போலச்சாந்தியையடைந்துசகலத்தையும்விட்டு இத்தேகத்தையும்விடுகிறேன் * வான்மீகிசொல்லுகிறார்களங்கமில்லாதசந்திரனைப்போல அழகுபொருந்தின

வாயும்பெரிதானவிசாரணையினால்மலர்ந்தமனதுள்ளவராயுமிருக்கிற இ
ராமரித்தப்படி சொல்லிவசிஷ்டர்முதலானவர்கள்முன்னே மேகங்களுக்கெ
திரே மயிலானது கேகாவென்கிறசத்தத்தைச் சொல்லிச்சிரமத்தினால்மௌ
னமாகவிருந்ததுபோலமௌனமாகவிருந்தார். ※

முப்பத்தோராவதுசருக்கமுற்றிற்று.

# முப்பத்திரண்டாவதுசருக்கம்.

இச்சருக்கத்திலிராமருடையவார்த்தையைக் கேட்டவர்களாகவிருக்கிற
மனுஷியாள்தேவாளிவர்களுக்குண்டாகிறமிகுந்த ஆச்சரியமும் ஆகாயத்தி
லிருந்துவிழுகிறபுட்பவருஷமுஞ்சொல்லப்படுகின்றது.

(அ-கை) தங்களுடையவிவேகத்துக்கும் நல்லவிசாரணைக்குமூல
மான இராமருடையவசனங்கள்தாங்களாய் விசாரணைசெய்தற்குவலியில்
லாதவர்களான முமுட்சுக்களுக்கு உபதேசமாகின்றமையால் விருப்பத்தின
லும்அப்பியாசத்தினாலுங்கிரகிக்கத்தக்கதென்றுதெரியப்படுத்துவதற்காக இ
ராமருடையவசனத்தைச்சந்தோஷத்துடன்கேட்டுச்சபையில் வருகின்றதே
வர்கள்முதலானவர்களுடைய உச்சவத்தை ஸ்ரீவான்மீகர்தெரியப்படுத்து
கிறார் | தாமரையிதழ்போன்ற கண்களையுடைய இராமர்மனதினுடைய
மோகத்தைப் போக்கத்தக்கவசனத்தைச்சொல்லும்போது ※அச்சபையிலிரு
க்கிறசகலமானபேர்களும்ஆச்சரியத்தினால்நன்றாகமலர்ந்திருக்கிற கண்களை
யுடையவர்களாகவும் அவர்வார்த்தையைக்கேட்கிறதுக்காக எழுந்திருந்த
துகள்போலிருக்கிறவுடம்புமயிர்களால்துவாரம் பண்ணப்பட்டிருக்கிறவஸ்
திரத்தையுடையவர்களாகவும் வைராக்கியவாசனையினால் சகலசம்சாரவா
சனைகளையுந்தள்ளி ஒருமுகூர்த்தகாலம் அமிர்தசமுத்திரத்தில் முழுகினவ
ர்கள்போலவும் சித்திரத்திலெழுதப்பட்டவர்கள்போலவும் ஆனந்தத்தினு
டைய அடையாளத்தினால் பூரித்தசரீரத்தையுடையவர்களாகவுமானார்கள் ※
சபையிலிருக்கிறவசிஷ்டர் விசுவாமித்திரர்முதலானரிஷிகளாலும் ஆலோ
சனைதெரிந்தசயந்தன் முதலானமந்திரிகளாலும் தசரதர்முதலான அரச
ர்களாலும் சிலதேசங்களிலிருந்துவந்திருக்கிற அரசர்களாலும் பட்டண
த்துச்சனங்களாலும்இராசகுமாரர்களாலும் பிரமத்தையறிந்த பெரியோர்க



ளாலும்பிராமணர்களாலும்வேலைக்காறர்களாலும்அசையாமற்கூண்டிலிரு
க்கிறபட்சிகளாலும் தங்கள்தங்கள்சன்னலிலிருந்துகொண்டு ஆபரணங்களு
டையசத்தமில்லாமலசையாமலிருக்கின்றகௌசல்லியைமுதலான ஸ்ரீகளா
லும் ஆகாயத்திற்சஞ்சரிக்கின்ற சித்த கந்தருவ கின்னராதிகளாலுஞ் சிரே
ஷ்டமான நாரதர் வியாசர் புலகர்முதலானமுனிகளாலும் தேவர்திக்குப்
பாலகர் வித்தியாதரர் உரகர் இவர்களாலும் விசித்திரமான அருத்தங்க
ளையுடையதாயுமிகவுஞ் சிரேஷ்டமாயுமிருக்கிறவிராமருடைய வசனங்களா
னதுகள்கேட்கப்பட்டதுகள் ※ அதன்பின்பு தாமரையிதழ்போலிருக்கிறக
ண்களையுடையவராயும் இரகுகுலமாகிற ஆகாயத்துக்குச்சந்திரனாயும் பூ
ரணச்சந்திரன் போலழகாயுமிருக்கிற அவ்விராமர்மௌனமாக விருக்கும்
போது ※ நன்றுநன்றென்றசொற்களோடுகூடச்சித்தர்களாலிறைக்கப்பட்ட
டமலர்மழையானது ஆகாயத்திலிருந்து அசுமானகிரிபோல்விழுந்தது ※
(அ-கை) மலர்மழையைவருணிக்கிறார் | மந்தாரவரும்பிலிவண்டுப்பாறிக்
கொண்டிருக்கிற ஆண்பெண்ணிரண்டுவண்டுகளுடையதொனியையுடைய
தாயும் மதுரம் வாசனை அழகு இதுகளால்மனுஷர்களைச் சந்தோஷமு
ள்ளவர்களாயும் பரவசர்களாயும்பண்ணிக்கொண்டும் ஆகாயத்திலுண்டான
காற்றினாற்றள்ளப்பட்டிருக்கிற நட்சத்திரங்களுடையவரிசைபோலவும் தே
வஸ்திரீகளினுடையநகைபயினதுபிரகாசம்பூமியில்விழுந்தாப்போலவும் வ
ருஷித்துக்கொண்டும் கெர்சனையின்றியுமின்னற்களாற்பிரகாசித்துக்கொ
ண்டுமிருக்கிறமேகலேசங்கள் விழுந்தாப்போலவும் வெண்ணெய்க்கட்டிகளு
டையவரிசையானது இறைக்கப்பட்டாப்போலவும் முத்துமாலைகள்போல
வுஞ் சிரேஷ்டமானபனிமழைபோலவும் சந்திரகிரணங்களுடைய வரிசை
போலவும் பாற்சமுத்திரத்தலைகளின்வரிசைபோலவும் தாமரை தாழை ஆ
ம்பல் குருக்கத்தி கருநெய்தல்முதலியபுட்டங்கள் சமீபபூமிகள் வீட்டினு
டைய இறப்புகள் நாற்சந்திகளிவைகளை நிறைத்துக்கொண்டும் பட்டண
த்திலவசிக்கின்றபுருடர்கள் ஸ்திரீகளிவர்களால்நிமிர்ந்துபார்க்கப்பட்டுமே
கமின்றியுங்கருநெய்தற்புட்டம்போலவுமிருக்கிற ஆகாயத்திலிருந்துவிழுகி
றமழைபோலவும் நெருக்கமாயும் ஒருநாளுங்காணப்படாமலும் சகலசெ
னங்களுக்கும் ஆச்சரியத்தைப்பண்ணிக்கொண்டும் ஆகாயத்திற்கண்ணுக்
குத்தெரியாமலிருக்கிறசித்தர்களுடையகைகளாலிறைக்கப்பட்டுமிருக்கிற அ
ந்தமலர்மழையானது அரைநாழிகைவரைக்கும் வருஷித்தது ※ அந்தப்பு
ட்பவருஷமானது சபையையும் சபையிலிருக்கிறசனங்களையும் நிறைத்து
ஓயும்போது அச்சபையிலிருக்கிறசனங்கள் சித்தர்களுடைய விவ்வார்த்தை

பைக்கேட்டார்கள் * சொர்க்கத்தில்நாலுபக்கலிலும் சித்தர்களுடைய கூட்
டங்களிற்கற்பகாலம்வரைக்குஞ் சுற்றிக்கொண்டிருக்கிறநம்மால் ஒருநாளு
ங் கேழ்க்கப்படாமலு விஷ்டமாயும் காதுக்கமிர்தமாயும் பெரிதாயும் புண்
ணியமாயும் மநோக்கியமாயுமிருக்கிற இவ்வசனமானது கேட்கப்பட்டது
ஆச்சரியம் * இரகுகுலத்துக்குச்சந்திரனாகவிருக்கிற இவ்விராமனால்சிரே
ஷ்டமானயாதொருவசனமானது வைராக்கியத்தினாற் சொல்லப்பட்டுதோ
அதினுடைய அருத்தமானதுவியாழபகவானுக்குந் தெரியமாட்டாது ஆ
கையாலிதைக்கேளாதசன்மம்வீணாகவாகுது * சாதி குலம் நடக்கை தரு
மம் ஞானம் முதலானத்தில்வந்திருக்கிற வுயர்ச்சிக்குப் பிரயோசனத்தையு
ண்டுபண்ணி ரட்சிக்கின்றதாயும் யோக்கியமாயும் உபசாந்திர சத்தினாலிழ
காயுமிருக்கிறவசனத்தைப் பிரீதியினாற்சொன்னாரோ அவ்வசனத்தினால்நா
ங்களிப்போதுசொற்கமுதலானசுகமும் அசாரமென்றுவிசாவிற் றெரியப்
படுத்தப்பட்டோம்.

முப்பத்திரண்டாவதுசருக்கமுற்றிற்று.

# முப்பத்துமூன்றுவதுசருக்கம்.

---

இச்சருக்கத்திற்சித்தர்கள் சபையிலிறங்கித்தகுதியானபடிக்கிருந்திராம
ர் வசனத்தைத் தோத்திரஞ்செய்வதைச் சொல்லப்படுகின்றது ஸ்ரீ வான்
மீகிசொல்லுகிறார்.

இரகுவமிசத்தைப்பிரகாசஞ் செய்கின்றவராகவிருக்கிற இராமனாற்
சொல்லப்பட்டபரிசுத்தமான இவ்வசனத்துக்கு மகாரிஷிகளாற் சொல்லப்
போகிற யோக்கியமானநிச்சயத்தைக்கேட்கவேண்டுமென்று சித்தர்கள்சொ
ல்லுகிறார்கள் * நாரத வியாச புலகர் முதலான முனிசிரேஷ்டர்களே சகல
மானரிஷிகளே விக்கினமில்லாமற்கேட்கவேண்டியதற்காகச்சீக்கிரமாகவாரு
ங்கோளீ * சம்பத்தினால்நிறைந்தும் தனத்தினாலுயர்ந்துமிருக்கிறபிரகாசத்
தையுடையதாயும் புண்ணியமாயுமிருக்கிற இந்த தசரதர்சபையினுடைய நா
லுபக்கலிலும் தாமரையில்வண்டுகள்போலயிறங்குவோமென்று சொல்லிஆ
காயத்தில் விமானத்தின்மீதிருக்கிற சகலமானமுனிவர்களுடைய வரிசையா
னது அச்சபையி லிராமன் முதலானவர்களிருக்கிற விடத்திலிறங்கிற்று *



(அ • கை) அச்சபையைவருணிக்கிறார் | அம்முனிவர்களுடைய வரிசையா
னது ஏப்போதுப் வீணையைமீட்டிக்கொண்டிருக்கிற நாரதர் கருநிறத்
தையுடையவியாசர் இவர்களுடையநடுவில் பிருகு ஆங்கிரசுபுலத்தியர்மு
தலானமுனிசிரேஷ்டர்களாலலங்கரிக்கபபட்டும் சவனர் உத்தாலகர் உசீரர்
சரலோமர் இவர்கள்முதலான ரிஷிகளாற்சூழப்பட்டும் * அச்சபையிலுள்ள
வர்கள் ஒருத்தருக்கொருத்தர் நெருக்கத்தினால் மளமளவென்கிற மான்
றோலையுடையவர்சளாயும் வளையமாயசைநதுகொண்டிருக்கிற உருத்திரா
ட்சமாலைகளையுடையவர்களாயும் அழகானகமண்டலத்தைத் தரித்தவர்க
ளாயும் ஆகாயத்திலிருக்கிற நட்சத்திரங்களுடையவரிசைபோலவும் சூரியர்
களுடையவரிசைபோலவும் ஒருவருக்கொருவரால் பிரகாசிக்கின்ற அலங்
காரமானமுகங்களையுடையவர்களாயும் இரத்தினங்களுடைய வரிசைபோ
லொன்றுக்கொன்றினால் பலவிதநிறங்களை யடைந்திருக்கின்றவுருவையு
டையவர்களாயும்முத்துவரிசைகள்போலொன்றுக்கொன்றினால் மிகுந்தகா
ந்தியையடைந்துகொண்டும் வேறானசந்திரகிரணங்களுடைய மழைபோல
வும் சூரியர்களுடையவரிசைபோலவும் வெகுகாலமாக ஒருவிடத்திற்சேர்க்
கப்பட்டிருக்கிற பூரணச்சந்திரர்களுடையவரிசைபோலவுமிருக்கின்றது *
நட்சத்திரங்களுடைய கூட்டத்திற்சந்திரன்போலநாரதர் ஓரிடத்தில்விளங்
குகிறார் தேவர்களுக்குள்ளிந்திரன்போல ஓரிடத்திற்புலத்தியர்விளங்குகிறார்
தேவர்களுக்குள்ளேசூரியனைப்போல ஆங்கிரசு ஓரிடத்தில்விளங்குகிறார்
* பின்பு இச்சித்தர்களாகாசத்தைவிட்டுச்சபையிலிறங்கும்போது முனிவ
ர்களால்நிறைந்த அச்சபையானது ஏழுந்திருந்தது * சித்தர்களும்மனுஷி
யர்களுங்கலந்தொருவருக் கொருவர்சேர்ந்துகொண்டிருக்கிறதேககாந்திக
ளால்பத்துதிக்குகளையும்பிரகாசம்பண்ணிக்கொண்டுவிளங்கினார்கள் * அவ
ர்களிற்சிலர்மூங்கிற்றண்டைக்கையிற் பிடித்துக்கொண்டுஞ் சிலர்தாமரைம
லரைக்கையிற்பிடித்துக்கொண்டுஞ்சிலர் அறுகம்புல்லைச்சிகையிற்றரித்துக்
கொண்டுஞ் சிலர்சூடாமணியைச்சிகையிற் றரித்துக்கொண்டுஞ் சிலர்சடை
முடிகளையுடையவர்களாயுஞ் சிலர்சிரசின்முன்பக்கத்தில்மாலைகளைச்சூட்
டிக்கொண்டுஞ் சிலர்கணுக்கையிலுருத்திராட்சமாலையைத்தரித்துக்கொண்
டுஞ்சிலர்மாவுரிகளையுடுத்திக்கொண்டுஞ்சிலர்முஞ்சிபபுற்கயிற்றையரையிற்றரித்துக்
கொண்டுஞ் சிலர்வெண்பட்டுகளைபபோர்த்துக்கொண்டுஞ்சிலர்முத்த மாலைசளாலலங்கரிக்கப்பட்டுமிருக்கிறார்கள் * வசி
ஷ்டரும் விசுவாமித்திரரும் வந்திருக்கின்றசித்தபுருஷாளனைவரையுமருக்
கியம் பாத்தியம் வசனமிவைகளாற்கிறமமாகப்பூசித்தார்கள் * அச்சித்தபு

ருஷிகள்வசிஷ்டனையும் விசுவாமித்திரனையும் பிரீதியோடு அருக்கியம் பாத்
தியம் வசனமிவைகளாற்பூசித்தார்கள் ❋ அதன்பின்புதசரதர்சகலவுபசார
த்தினாலும் அச்சித்தர்களைப்பூசித்தார் அவர்களும் நன்றாயிருக்கிறீரா வெ
ன்கிறவசனத்தினாற்றசரதனைப்பூசித்தார்கள் ❋ சித்தர்கள்மனுஷியாளிவர்க
ளெல்லாரும் பிரீதியாக ஒருவருக்கொருவர் பூசைகளைப்பண்ணிக்கொண்டு
ஆசனங்களிலிருந்தார்கள் ❋ அச்சித்தர்கள் வந்தனஞ்செய்து எதிராகவி
ருக்கிற இராமனைப்பார்த்து யோக்கியமானவசனத்தினாலும் புட்பவருஷ
த்தினாலுந்தோத்திரவினாலும் பூசித்தார்கள் ❋ வேதவேதாங்கங்களைக் கரை
கண்டவர்களாயும் அறியவேண்டியத்தை யறிந்தவர்களாயும் பெரியோர்க
ளாயுமிருக்கிற விசுவாமித்திரர் வசிஷ்டர் வாமதேவர் நாரதர் வியாசர்
மரீசி தூர்வாசர் ஆங்கீரசர் கிரது புலஸ்தியர் புலகர் சரலோமர் வாச்சியா
யனர் பரத்துவாசர் வான்மீகி உத்தாலகர் ரிசீகர் சய்யாதி சவனர் முத
லியரிஷிகளும் அச்சபையில்நாயகர்களாகவிருந்தார்கள் ஆசாரியனிடத்தில்
நியமப்படிக்குவேதாப்பியாசம்பண்ணினவர்களான அந்தநாரதர்முதலான
சித்தர்கள் வசிஷ்டர் விசுவாமித்திரர்களுடனேகூடவணக்கமாகவிருக்கின்
ற இராமனைப்பார்த்துச்சொல்லுகிறார்கள் ❋ விசாரணையினால் நிச்சயிக்க
ப்பட்டிருக்கிறபொருட்களையுடையதாயும் பதார்த்தங்களுடைய உண்மை
யான அறிவோடுகூடிக்கொண்டும் வித்துவான்களுடையசபைக்குயோக்கி
யமாயும் பிரகாசமான அட்சரங்களோடுகூடிக்கொண்டும் உள்ளே உயர்
ந்திருக்கிற வெகுகருத்துக்களையுடையதாயு மனதுக்குச்சந்தோஷத்தைப்
பண்ணுகிறதாயும் பெரியோர்களுக்குயோக்கியமாயும் ஒருதோஷமன்றியி
லும் பிரகாசமானபொருளையுடையதாயும் வியாகரணங்களாற்சோதிக்கப்ப
ட்டபதங்களையுடையதாயும் பிரகாசமாயும் இதமாயும் சொற்குற்றமன்றி
யிலும் வைராக்கியரசத்தையுடையதாயும் மிகவுங்கெம்பீரமாயும் ஆசைநீ
ங்குகின்றதனாலுண்டாகிறசந்தோஷத்தையுடையதாயுமிருக்கிற பதினாறுகு
ணங்களையுமுடைய இவ்விராமராற்சொல்லப்பட்டவாக்கியமானதுயாருக்
குத்தான் ஆச்சரியத்தைப்பண்ணமாட்டாது ❋ நூற்றிலொருவருக்கேயா
வரினுமுயர்வாகியசமத்காரமும் கருத்தில்வைக்கப்பட்டிருக்கிற அருத்தத்
தை ஒருக்காலும்பிசகாமற்றெரியப்படுத்துகிறவல்லமையுமுடைய வாக்கான
துண்டாகுது ❋ வாரீர் இராசகுமாரரே உம்மைத்தவிரயாருக்குப்பாணம்
போலேசூட்சுமார்த்தங்களைப்பிளந்துகொண்டிருக்கிறபுத்தியாகிற கொடி
யானது விஸ்தாரத்தையடைந்து விவேகமாகிறபழத்தை யுண்டுபண்ணிக்
கொண்டுவிசாரணை வைராக்கியங்களாகிற பூவினாலுந் தளிரினாலும் மிகு



ந்தவிருத்தியடைகுது ❋ இராமருடையவிருதயத்தில் மற்றொன்றினாலுந்
தோற்றாமலிருக்கின்ற பதார்த்தங்களுடையவுண்மையைத்தோற்றப்பண்ணிக்
கொண்டுசொலிக்கின்றஞானமாகிறதீபச்சுவாலைபோலெந்தப்புருஷனுக்கு
ச்சொலிக்குதோ அவனேபுருஷனென்றுவிளக்கப்படுகிறான் ❋ இப்போது
சொன்னஞானமில்லாதசீவர்களிரத்தமாமிசம் என்புருபங்களானவெகுதே
கங்களையே ஆத்மாவென்றெண்ணுகின்றமையால் சத்தமுதலானபதார்த்
தங்களையனுபவிக்கிற அந்தத்தேகங்களில ஆத்மாவில்லை [ஆகையாலுல
காயுதமதமே அவர்களுக்குப்பலித்துதென்பதுகருத்து அவர்களிடத்திலஞா
னத்தோடுகூடின ஆத்மாயிருப்பனேயாகில அவசியம்புருஷார்த்தத்திலே
யே எத்தனம்பண்ணுவன் அப்படி எத்தனஞ்செய்யாததினால் கடம்போல
வுஞ்சுவர்போலவுபுத்தியில்லாதவர்களென்று நிந்திப்பதற்காக ஆத்மாவி
ல்லை என்றுசொன்னது]மோகத்தைப்பொருந்திச்சனன மரணங்களைய
டிக்கடியடைந்துகொண்டுசம்சாரசொரூபத்தை விசாரணைபண்ணாமலிரு
க்கின்றசீவர்களைப்பசுக்களென்றறியத்தக்கது ❋ காமாதிசத்துருக்களை நா
சம்பண்ணிக்கொண்டும் முன்பின்விசாரணைக்கியோக்கியராயு மிருக்கிற
இவ்விராமனைப்போல நிருமலபுத்தியையுடையவரானபுருஷன் எங்கேயோ
ஓரிடத்தில்வெகுபிரயாசத்தினாற்காணப்படுகிறான் ❋ நிரதிசயானந்தத்தை
யுடையவர்களாயும் அழகானவுருவையுடையவர்களாயுமிருக்கிற நல்லோர்க
ள்சட்டுமாங்கனிபோல அரிதாகவிருக்கிறார்கள் ❋ கொண்டாடத்தக்கபுத்தி
யையுடைய இவ்விராமரிடத்தில் உலகவிவகாரங்களைநன்றாகவறிந்துதன்
னுடையவிவேகத்தினாற்றானேதத்துவத்தைக்காணும் படியானசமத்காரமா
னது இவ்வயதிலேயேகாணப்படுகுது ❋ பழங்களாலுந்தளிர்களாலும் விள
ங்கிக்கொண்டும் அழகுபொருந்தியும் ஏறுதற்கெளிதாயுமிருக்கிற மரங்கள்ச
கலதேசங்களிலுமுண்டாகுதுகள்சந்தனமரமாத்திர முண்டாகிறதில்லை ❋
சந்திரனிடத்திற்குளுந்தகிரணம்போலவும் நல்லமரத்திற்பூங்கொத்துப்போ
லவும்புட்பத்திற்பரிமளம்போலவுமிராமரிடத்திலிந்தச்சமத்காரமானதுகாண
ப்பட்டுது ❋ மிகவுந்துஷ்டசொரூபமாயிருக்கிறமுன்கருமத்தினுடைய சிருஷ்
டியினாலுண்டுபண்ணப்பட்டகெட்டதான இச்சமுசாரத்தில் விவேகத்தினா
லுண்டான ஆத்மலாபமானதுமிகவுமரிதாயிருக்கின்றது ❋ எப்போதுங்கீ
ர்த்திக்கிடமானதத்துவவிசாரணைபண்ணிக்கொண்டுமோட்சமடைதற்கெத்
தனஞ்செய்கின்றவர்களே பலமுள்ளவர்களாயுஞ் சத்துக்களுடைய எதிரே
எண்ணத்தக்கவர்களாயும் புருஷ உத்தமர்களாயுமிருக்கிறார்கள் ❋ உயர்வா
இயவிவேகமும் மேலானமனதுமுடையவராகிய இராமருக்குச்சரியான ஒ

ருபுருஷனிப்போது மூன்றுலகத்திலுமில்லை முன்னுலுங்காணப்படவில்லை இனிமேலுமுண்டாகப்போகிறதில்லையென்று எங்களுடையநிச்சயம் * சகலசெனங்களுக்கும் ஆனந்தத்தையுண்டுபண்ணுகிற இராமருடையமனதுக்கும் நம்முடைய உபதேசத்தினுலிஷ்டமான அருத்தஞ்சித்தியாமற்போனுல் அப்போதுமுனிகளென்றுபேர்பெற்றிருக்கிறநாமேமிகவுங்கெட்டபுத்தியையுடையவர்களாகையால் அவசியம் உபதேசிக்கவேண்டும்.

முப்பத்துமூன்றுவதுசருக்கமுற்றிற்று.

கைலாசபதிதுணை.

ஸ்ரீவான்மீகியினுற்பண்ணப்பட்ட
மோட்சோபாயமானமகாராமாயணத்தில்.

# வைராக்கியப்பிரகரணம்.








ஓம்.

இரண்டாவது.

# முமூட்சுப்பிரகரணம்.

கடவுள்வாழ்த்து.

நித்தியமாயுஞ் சனாயில்லாமலுஞ் சகலத்துக்குமூதன்மையாயும் ஒன்றுயுஞ் சொருபானந்தலேசத்தினுலலங்கரிக்கப்பட்ட விஷயானந்தமுதலான ஆனந்தத்தையுடைத்தானதாயும் மகத்துக்களாற்சித்தத்திற்றியானிக்கப்பட்டும் வேதாந்தங்களாற்றெரியப்பட்ட மோட்சத்துக்கிருப்பிடமாயுமிருக்கின்ற ஆத்மசொருபத்தைநமஸ்காரஞ்செய்கின்றேன்.

(அ - கை) முன்பிரகரணத்திலிராமர் முதலானவர்களாற்சொல்லியவசனவழியாகசாதனசம்பத்து சொல்லப்பட்டபோதிலுமதைமுமூட்சுக்களால் எந்தக்கிரமமாகவிவகாரம் பண்ணிக்கொண்டுசம்பாதிக்கத்தக்கதோ எப்படியதனுல்தத்துவஞானங்கிடைக்குமோ அப்படிவெவ்வேறுகப்பிரித்து அதுகளையுபதேசிப்பதற்காக இவ்விரண்டாவதான முமூட்சுவிவகாரப் பிரகாணத்தை ஸ்ரீவான்மீகிபகவான்சொல்ல ஆரம்பிக்கிருர் |

# முதற்சருக்கம்.

இச்சருக்கத்தில் சுகப்பிரமரிஷிதத்துவசொருபத்தைத் தானேவிசாரித்துத்தெரிந்திருந்தாலும்பிதாவினுல்நன்றுகச் சொல்லப்பட்டபோதிலுமத்தத்துவசொருபத்தில் விசுவாசம் வாராமற் சனகராஜாவினுபதேசத்தினுல் தத்துவத்தையறிந்தாரென்று சொல்லப்படுகின்றது |

(அ - கை) இப்பிரகரணத்தில் முதலில்மந்தமாயிருக்கிற வைராக்கியமுதலானசாதனமுள்ளவர்களுக்குச்சீக்கிரமாகவே சாதனசம்பத்துவந்ததென்கிற அஞ்ஞானத்தினுல் சிரவணுதிகளில் எத்தனம் வரக்கூடாதென்

று சுகப்பிர்மரிஷியினுடைய கதையினுற் சாதனபரிபாக சொரூபங்களைக்கா
ண்பிக்கத் குருவினிடத்திலிருந் தறியப்பட்டவித்தையே நல்லபலத்தை
யுண்டுபண்ணுமென்கிற சுருதியினுலிராமருடைய குலத்துக்குக்குருவாயி
ருக்கிற ஸ்ரீவசிஷ்டரையிராமருக்குபதேசஞ்செய்வதற்காகப்பூருவநடந்தகா
ரியத்தைத்தெரியப்படுத்தித்தத்துவ உபதேசத்தையாரம்பிக்கின்றதுகளாலு
ச்சாகப்படுத்தப்போகிறவராயிருக்கிற விசுவாமித்திரர் தன்காரியஞ்சித்திக்கி
றதற்காகவுஞ் சிரவணஞ்செய்கிறதற்காகவுமவசரப்பட்டு முன்னுதாகச்சொ
ல்லுகிருர் | முன்பிரகரணமுடிவில் சித்தபுருஷர்கள் சொல்லியபின்பு விசு
வாமித்திரர் இராமரைப்பார்த்து அன்போடுசொல்லுகிருர் ✻ சூட்சுமமாகவி
ருக்கின்ற உம்முடையபுத்தியினுலேயே சகலரகசியத்தையு மறிந்தவராகவி
ருக்கிறீர் உமக்குவேறேயறியத்தக்கதாயாதொன்றுமில்லை [சாராசாரங்க
ளைப்பிரித்துப்பார்க்கிறதில்யோக்கியமாயிருக்கிற உம்முடையபுத்தியினுல்
பரமார்த்தமாயும் உத்தமமாயும் பிரிக்கப்படாமலும் அத்துவிதமாயுஞ் சிற்
சொரூபமாயுமிருக்கிற ஆத்மசொரூபமும் உம்மாலறியப்பட்டதென்று தா
ற்பரியம்] (அ - ளை) ஆனுல் எனக்கென்னத்தினுல்நிச்சயம்பிறக்கவில்லை
யெனில் | உம்முடையபுத்தியாகிற கண்ணுடியில் நம்பிக்கையில்லாததினு
லுண்டாயிருக்கிற சந்தேகமாகிற அழுக்கைத் துடைக்கவேண்டியதொன்
றேசெய்பத்தக்கது [தன்புத்தியினுலறிந்திருந்தாலுஞ் சாஸ்திரங் குருமுக
மானவர்களோடு விசாரணை பண்ணுகிறத்தைத்தவிர மற்றொன்றினுலு
நம்பிக்கை வரமாட்டாதென்பதுகருத்து] சுகப்பிர்மரிஷியினுடையபுத்தி
யைப்போலிருக்கிற உம்முடையபுத்தியானது அறியவேண்டியத்தை யெல்
லாமறிந்திருந்தபோதிலும் நிச்சயமுண்டாகிறத்தைமாத்திரமபேட்சிக்குதெ
ன்று விசுவாமித்திரர்சொல்ல ✻ இராமர்சொல்லுகிருர் சுகப்பிர்மரிஷிக்கு
முன்னேதன்னுலறியத்தக்க தத்துவத்தில் நிச்சயம்பிறவாமல் திரும்பியுங்கு
ருவுபதேசத்தோடேகூடினபுத்தியினுலெப்படிநிச்சயம் வந்ததென்றுகே
ட்க விசுவாமித்திரர்சொல்லுகிருர் உமதுநடத்தைக்குச் சரியாயும் மோட்ச
த்துக்கேதுவாயுமிருக்கிற சுகப்பிர்மரிஷியினுடையநடத்தையைக்கேளும்✻
உமதுபிதாவினதுசமீபத்திற்சிம்மாசனத்தில் நீலபருப்பதத்தைப் போலிருக்
கின்றஇவ்வியாசருக்குச்சகலசாஸ்திரங்களையறிந்தவராயுமகாபுத்திசாலியா
யுமிருக்கிறசுகனென்னுமொருபுத்திரருண்டானுர் ✻ அவர் உம்மைப்போல
இவ்வுலகசுபாவத்தைவிசாரித்து விவேகமானதுண்டாகி அவ்விவேகத்தினு
ற்றன்றனேவெகுகாலம் விசாரித்துப்பரமார்த்தமாயு மத்துவிதமாயுஞ்சிற்
சொரூபமாயுமிருக்கிற ஆத்மதத்துவத்தையறிந்தார் ✻ தன்னுலறியப்பட்ட



உத்தமமானவஸ்துவிலிதுவே வஸ்துவென்று நிச்சயமடையாததனுல்மன
துக்கிளைப்பாறுதலுண்டாகவில்லை பின்பு அவரது நிராசையானமனதா
னதுவெகுவாயும் நசிக்கிறதாயுந் துக்கத்துக்கேதுவாயுமிருக்கிறபோகங்க
ளைவிட்டுநீங்கிச்சாதகப்பட்சியானது அகாலவருஷதாரைகளைவிட்டுநீங்குவ
துபோல வைராக்கியத்தையடைந்தது ✻ பின்பு அவர்மேருபருவதத்திற்
றவஞ்செய்கிறபிதாவிடத்திற்சென்றுபத்தியுடன்வணங்கி இவ்வஞ்சனையா
னசமுசாரமாகிறபொய்யானது எப்படியுண்டாச்சுது எப்படிநாசத்தை
யடையும் எவ்வளவுகாலம்யாருக்கிருக்கின்றதென்றுகேட்க [இச்சமுசார
ஞ்சரீரத்தையுடையதா இந்திரியத்தையுடையதா மனதையுடையதா பிரா
ணனையுடையதாமுன்சொன்னகூட்டத்தையுடையதா இதுகளைவிட்டுவே
றுயிருக்கிற சீவனையுடையதாநிருவிகார பிரமத்தையுடையதா வென்று
கெட்பவர்யாருக்கிருக்கின்றதென்றுமென்பதுகருத்து] ஆத்மசொரூபந்தெ
ரிந்தவியாசராற்சொல்லத்தக்கவெல்லாநன்றுகச்சொல்லப்பட்டது ✻ பின்பு
சுகப்பிர்மரிஷியானவர்நீருபதேசித்தபொருளை நான் முன்னமறிந்தபிரகார
மேசொன்னீரென்றுசொல்லி அவ்வசனத்தினுல்நிச்சயமடையாமையைவியா
சர்பார்த்துஇபபோசொன்னதைத்தவிர வேறொருதத்துவத்தை நானறியவி
ல்லை ✻ ஆனபடியினுற்பூமியிற்சனகரென்று ஒராஜனிருக்கிறுரவரறிய
வேண்டியதைநன்றுக அறிந்தவர் அவரிடத்திற்சகலத்தையுமறிகுவாயென்
றுவியாசர்சொல்ல ✻ சுகப்பிர்மரிஷிமேருவிலிருந்து பூமியில்வந்து சனக
ராலிரட்சிக்கின்ற விதேகமென்கிறதேசத்தில்மிதுலையென்கிறபட்டணத்
தையடைந்து அரண்மனைவாசலிற்சேர்ந்தார் ✻ அபபோது அவ்வரண்ம
னைவாசலிலிருக்கின்றகாவலாளர்கள் மகாத்மாவான சனகமகாராஜாவினி
டத்திற்சென்றுவியாசர்பிள்ளையாகியசுகப்பிர்மரிஷியானவர் வாசலில்வந்தி
ருக்கிறுரென்றுசொல்ல சனகர் அவருடையவைராக்கிய முதலானகுணத்
தையறிவதற்காக அனுதாரவினுல்வாசலிலிருக்கட்டுமென்றுசொல்லஎழு நா
ள் சும்மாவிருந்தார் ✻ பின்புநடுக்கட்டிலழைப்பிவித்தார் அந்தச்சுகர்தத்து
வத்தையறியவேண்டுமென்கிறமனதுள்ளவராகி அவ்விடத்திலுமுன்போல
எழுநாளிருந்தார் ✻ அதன்பின்பு அந்தப்புரத்தி லழைப்பிவித்து அவ்வி
டத்திலுத்தமமானஸ்திரீகளாலும் போசனங்களாலும் படுக்கைமுதலானது
களாலுஞ் சந்திரன்போன்றமுகமுள்ளவரான சுகப்பிர்மரிஷிக்குபசாரஞ்
செய்வித்தார் ✻ அரசனுற்செய்வித்த அந்தத்துக்கங்களு மிந்தப்போகங்க
ளுஞ் சுகருடையமனதைத்திடமான இருப்பையுடையமலையைத்தென்றற்
காற்றுகள்போல விகாரப்படுத்தவில்லை ✻ சமபுத்தியாயுஞ் சுத்தமாயும்

மௌனியராயுஞ்சந்தோஷம் பொருந்தின மனதுள்ளவராயுமிருக்கிற சுகரானவர் பூரணச்சந்திரன்போல அவ்வந்தப்புரத்திலிருந்தார் * சனகர் தத்துவஞானம்வருகிறவனாக்கும்ஸ்திரமாயிருக்கின்றவிசாரணை வைராக்கிய முதலானதுகளுடையபரிபாகத்தையுடைத்தானவராயுஞ் சந்துஷ்டராயுமிருக்கிறசுகப்பிர்மரிஷியைப்பார்த்து நமஸ்காரஞ்செய்து *உலககாரியங்களையெல்லாம்விட்டு அடையவேண்டியவிஷ்டங்களெல்லா மடைந்தவராகவிருக்கின்றவரோ இவ்விடத்திற்கெழுந்தருளிய காரணமென்னவென்றுசீக்கிரமாகக்கேட்க * சுகர்சொல்லுகிறார்வாரீர்குருவே இச்சமுசாரமாகிறபொய்யானது எப்படியுண்டாச்சுது எப்படிநாசத்தையடையுமிதையெனக்கு யதார்த்தமாகச்சீக்கிரத்திற்சொல்லவேண்டுமென்றுகேட்க * சனகர்சுகரைப்பார்த்து அவருடையபிதாவினால் முன்சொல்லப்பட்டதத்துவசொரூபத்தையே அப்போதுசொல்ல * சுகர்சொல்லுகிறார் என் விவேகத்தினால் முன்னேயே அறியப்பட்டதுதானேஎன்பிதாவினாலும்உம்மாலுஞ்சொல்லப்பட்டுது இவ்வாக்கியார்த்தந்தான்வேதாந்தசாஸ்திரங்களிலுஞ்சொல்லப்படுகுது *சாரமில்லாமற்கெட்டதாயிருக்கிறஇச்சமுசாரமானது தன்னுடையவிகற்பத்தினாலெப்படியுண்டாச்சுதோ அப்படியேதன்னுடையவிகற்ப நசிக்கும்போது நசிக்குமென்றுபெரியவாளுடையநிச்சயம் [அஞ்ஞானத்தினால்மறைக்கப்பட்டஆத்மாவில்வெகுவிதகற்பனைகளைப்பண்ணிக்கொண்டு அனந்தமானகாமகருமவாசனைகளாகிறவித்துக்களால்நிறைந்தும்பிரளயசுழுத்திகளிற்சமஷ்டிசமஸ்காரமாகவும் வியஷ்டிசமஸ்காரமாகவும் அவ்வியாகிருதத்தில் மறைந்துமிருக்கிற அனாதியானசீவபாவத்துக்குபாதியான அந்தக்கரணத்தில்நின்றும் பிரளயகிரமத்துக்கு விபரீதகிரமமாகமுன்னேபஞ்சீகரணமில்லாமலிருக்கிற ஆகாயமுதலானதுகளுடைய உற்பத்திகிரமமாய் சமஷ்டியிரணியகெற்பசொரூபமாகவும் பின்புபஞ்சீகரணத்தினால்விராட்டுசொரூபமாகவும் பின்பு உட்கிரமமாய் வியஷ்டிஸ்தூலதேகரூபமாய் அதற்குள்வியஷ்டிலிங்கதேகரூபமாயுமுண்டானமஹா அனர்த்தரூபமானசம்சாரமானது கருமம் உபாசனைமுதலானசகலத்தையுஞ் செய்ததினால் அத்தியாத்மீகவியஷ்டிபாவத்துக்குபாதியானவாசனைமாத்திரம்போகிறபோது சமஷ்டியிரணியகெற்ப சொரூபமாகச்சேஷிக்குது சிரவணமுதலானதுகளாலுண்டாகிற தத்துவசாட்சாத்காரத்தினால் வாசனையோடுகூடின காரியகாரண அவித்தைநசிக்கும்போதுமூலாவித்தைக்குநாசம்வந்ததினாலே அந்தக்கரணம்மிகவும் போய்விட்டதினாலே சேஷமில்லாமல்நாசத்தையடைகுது இல்லாவிட்டால்சுயம்பிரகாசமான ஆத்மாவினிடத்துண்டானதினாலும் பொய்யாயி



ருக்கிறத்தினாலும்முன்னேயேவெந்துபோனதாகையினாற்சாரமில்லாமலுமிருக்கிறசமுசாரமானது ஆத்மசாட்சாத்காரமாகிற பிரளயாக்கினிவியாபிக்கும்போதுமறுபடியுமெப்படியிருக்கு மென்றுதாற்பரியம் மேலேகொளுத்தப்பட்டாலும்உள்ளேசாரத்தோடுகூடினபுல்லைப் போலமறுபடியுமுளைக்குமென்கிறசங்கையைப்போக்குவதற்காகச்சாரமில்லாமலிருக்கிற தென்றுசொல்லப்பட்டுது] என்னாலறியப்பட்ட இந்த அருத்தம்யெதார்த்தந்தானாசந்தேகம்நீங்கும்படிசொல்லும் அலைந்துகொண்டிருக்கிற மனதோடுகூடிய நானும்மாலிளைப்பாறுதலையடைய வேண்டுமேன்றுசுகர்கேழ்க்க * சனகர்சொல்லுகிறார் உம்மால்சுயமாக அறியப்பட்டும் உம்முடைய பிதாவினிடத்தில்மறுபடியுங்கேழ்க்கப்பட்டுமிருக்கிற இந்த அருத்தத்தைத்தவிர வேறே ஒருநிச்சயமான அருத்தங்கிடையாது * (அ-கை) இப்போதுசொன்னதையேமறுபடியும் நன்றாகநிச்சயம்வருதற்காகச்சொல்லுகிறார்] அகண்டமானசிதாகாசபுருஷனொருவனே இங்கிருக்கிறான் வேறொன்றுமில்லை அந்த ஆத்மாவேதன்னுடையசங்கற்பத்தினாலே சமுசாரியாகிறான்சங்கற்பநாசத்தினால் அகண்டமாயிருக்கிறமுத்தியையடைகிறான் * அப்படிப்பட்ட ஆத்மஞானத்தைச்செவ்வையாகநீயிப்போதறிந்தாயாதலால் போகங்களிடத்தாசையையும்திரிசியதிருஷ்டியையும்விட்டுநீங்கினாய் * வாரீர்பாலனாயிருக்கிற மகாசூரரே உம்முடையபுத்தியானதுபோகங்களாகிறபெரியவியாதிகளிலிருந்து ஒழிவையடைந்தது இன்னம்வேறே எதைக்கேழ்க்கவேண்டுமென்று இச்சைப்படுகிறீர் * உமக்குப்பரிபூரணமாயிருக்கை எப்படியுண்டாச்சுதோ அப்படிச்சகலமானஞானங்களுக்குமிருப்பிடமாகவும் பெரிதானதபசைப்பண்ணிக்கொண்டுமிருக்கிறஉம்முடையதகப்பனாருக்கு வரவில்லை [இப்படிசொன்னது சுகருக்கு நிச்சயமுண்டாவதற்காக ஸ்தோத்திரம்பண்ணினதென்பதுகருத்து இப்படியேமேலும்பார்த்துக் கொள்ளவும்] வியாசரிலும்நானதிகமாகவேயிருக்கிறேன் அவருக்குச்சிஷியராகவிருக்கிற உமக்குப்போகத்திலிச்சையில்லாததினால் என்னிலுமிகவு மதிகமாகவிருக்கிறீர் * பரிபூரணமான மனதுள்ளவராக விருக்கின்ற வும்மாலடையத்தக்கதெல்லாமடையப்பட்டுது மறுபடியுந்திரிசியங்களையடையாதவராயும் முக்தராயுமிருக்கிறநீர் பிராந்தியைவிட்டுவிடும் * மகாத்மாவாயிருக்கிற சனகர் இந்தப்பிறகாரம் அகண்டமானசிதாகாசசொரூபம் நீதானென்றுபதேசிக்க அந்தச்சுகர் நிருமலமான பரமாத்மவஸ்துவினிடத்திற் சும்மாவிருந்தார் *சனனபயமும் மரணதுக்கமும் மனவருத்தமும் சுத்தவாசனையிச்சையும் அனுபவசந்தேகமும் நீங்கியிருக்கிற சுகர்சத்துவகுணத்தோடுகூடினதேவ

தைகளிருக்கிறத்தினாலும் மனதுக்கு விக்ஷேபவேதுக்களில்லாததினாலுஞ் சமாதிக்கியோக்கியமான மேருவினுடைய சிகரத்தையடைந்து ✻ அவ்விடத்திற்பதினாயிரம் வருஷம் நிருவிகற்பசமாதிபண்ணி சலனமில்லாத தீபம்போலபரமாத்மாவிலேசாந்தியையடைந்தார் ✻ [விதேகமுத்தாரானாரென்பதுகருத்து] திரிசியப்பார்வையும் அதற்குமூலமான அஞ்ஞானமும் நீங்கினத்தினால் சுத்தராயும்மகாத்மாவாயுமிருக்கிறசுகப்பிர்மரிஷியானவர் ஆகாம்மியமென்கிற புண்ணியபாவங்களுடைய சம்மந்தமில்லாததினாலுஞ்சஞ்சிதநாசத்தினாலும் நிருமலசொரூபமாயும் பிராரத்தகருமமும் அசுத்தமான தேகமுதலானதும் நீங்கினதினாற் பரிசுத்தமாயுந்தானாயுமிருக்கிறபாமாத்மவஸ்துவில் சமுத்திரத்தை விட்டு வேறாகவிருக்கையும் மேகசம்மந்தமுமில்லாதசலத்திவலையானது பரிசுத்தமாயுந்தெளிவாயுமிருக்கிற சமுத்திரத்திலொன்றாகச் சேருகின்றதுபோல சகலவாசனைகளுமற்று ஒன்றாயிருக்கையையடைந்தார்.

முதற்சருக்கமுற்றிற்று.

# இரண்டாவதுசருக்கம்.

---

இச்சருக்கத்தில் ஸ்ரீராமருக்குபதேசஞ்செய்வதற்காகவிசுவாமித்திரர் வசிஷ்டரைப்பிரார்த்திக்கின்றதும் அதனாலவருக்குண்டானவுச்சாகத்தையுஞ் சொல்லப்படுகின்றன.

(அ-கை) சுகப்பிர்மரிஷியினுடையகதையை பிரகிருதத்திலனுகூலமாகச்சேர்த்துக்கொண்டு ஸ்ரீராமருக்குபதேசஞ்செய்வித்தற்காக வசிஷ்டரைப்பிரவிர்த்திபண்ணிவைத்தற்காரம்பிக்கின்ற விசுவாமித்திரர்சொல்லுகிறார் | வாரீர்இராமரே!வியாசருடையபிள்ளையானசுகருக்கெப்படிச் சந்தேகமாத்திரம்போக்கவேண்டியதோ அப்படி உமக்குஞ்சந்தேக மாத்திரம்போக்கவேண்டியது✻(அ-கை)சொன்னகாரியத்திற்சகலமானரிஷிகளுக்குஞ்சம்மதியுண்டாவதற்காகச் சொல்லுகிறார் | வாருங்கோள் முனீசுவரர்களேபுத்திசாலியாயிருக்கின்ற இவ்விராமருக்குப்போகங்களானதுகள்ரோகங்கள்போலருசிக்காததினாலிவராலறியத்தக்கதெல்லாங்குறைவில்லாமலறியப்பட்டது ✻ சகலமானபோகங்களும்ருசிக்காம லிருக்கின்றதுவே அறியவேண்டியத்தையறிந்தமனதுக்குலட்சணம் இதுநிச்சயந்தான் ✻ உலகத்தில் பொய்யாயிரு



க்கிறபந்தமானதுபோகங்களுடையவாசனையினாலவ்வளவாயிருக்கின்றதுஅப்போகவாசனைசாந்தியடையும்போதுபந்தமானதுகுறைந்துபோகின்றது ✻ அவ்வாசனைகளுடையகுறைவே மோட்சமென்றும் பதார்த்தங்களிற்செட்டியாயிருக்கிறவாசனையேபந்தமென்றும் பெரியோர்களாற் சொல்லப்படுகின்றது [வாசனைநீங்கியவளவுபந்தநீங்கும் சுத்தமாய்வாசனை போய்விடில்நன்றாகமுத்தியுண்டாகுமென்றுதாற்பரியம்] மனுஷியாளுக்குக் கொஞ்சஞ்சிரவணமுதலான யத்தனத்தினால் ஆத்மஞானமானதுமேலெழுந்தபார்வையினாலுண்டாகும் விஷயவைராக்கியமோவென்றால்வெகு யத்தனத்தினாலுண்டாகுது [ஆத்மஞானந்திரிசியத்தைப்பிரித்துப்பார்க்கிறத்தினாலேயே எளிதாகப்பரிசயம்பண்ணலாமென்பதுகருத்து] (அ-கை) அப்போது திரிசியவிவேகமேபோரும் வைராக்கியத்தினாலாகவேண்டுவதென்னெனில் | ஆசைமுதலானவைகளாற் கெடுக்கப்படாமலிருந்து ஆத்மசொரூபத்தைப்பார்க்கின்றபுருஷனே அந்த ஆத்மசொரூப ஞானத்தினால் அஞ்ஞானத்தைப்போக்கியதனாலுண்டானபிரமானந்தபலத்தை யடைந்தவனென்றும் அறியவேண்டியதத்தையறிந்தவனென்றும்பண்டிதனென்றுஞ்சொல்லபடுகிறான் மேலெழுந்தவாரியாகப்பார்க்கிறவனோவென்றால் அகங்காரம்போகாததினாலவனப்போலவல்லவென்றுதாற்பரியம் அப்பேர்ப்பட்டமகாத்மாவுக்கு பூமியிலிருக்கிறபோகங்களேப்போகங்கள்பலவந்தமாகவும்ருசிக்கிறதில்லை ✻ எல்லாவற்றினும் ருசியில்லாதவன்போலவெளிக்கிக்காண்பித்தால்நமக்குக்கீர்த்தியுண்டென்றும் நம்மையெல்லாரும் பூசிப்பார்களென்கிற வுத்தேசத்தையும்விட்டுப்பரமார்த்தமாகருசியில்லாதபுருஷனே சீவன்முத்தனென்று சொல்லப்படுகிறான் ✻ (அ-கை) வைராக்கியம் ஞானம் உபசாந்தி இவைகள் ஒன்றுக்கொன்றுசகாயத்தினால் பரிபக்குவமாய் விருத்தியாகும்போது அஞ்ஞானம்போகிறத்தினால்மிகவும் ஆசைநசித்துபோகுதென்றுசொல்லுகிறார் | எவ்வளவுஎவ்வளவுகாலத்துக்குள்ளே யிருக்கிறஞானத்தினாலேயே அறியத்தக்க ஆத்மசொரூபமானதறியப்படவில்லையோ அவ்புருஷனுக்கு அறியத்தக்க விஷயங்களில்வைராக்கியமானது பாவவளவு அவ்வளவுகாலத்துக்குள்ளேவிஷயங்களில்வைராக்கியமானது பாலைநிலத்திற்கொடியுண்டாகாததுபோலவுண்டாகிறதில்லை [பிரமத்தைக்கண்டபின்பு ஆசைசுத்தமாகப்போகுதென்று கீதையிற்பகவான் சொல்லியிருக்கிறாரென்பதுகருத்து] யாதொருகாரணத்தினாலழகாயிருக்கிற விஷயங்களிராமரை ஆசைப்படுத்தவில்லையோ அதினாலேயே இவரை அறியவேண்டியதெல்லாமறிந்தவராக எண்ணத்தக்கது ✻ (அ-கை) இராமர்தத்துவத்தையறிந்தாரானால் அப்போது உபதேசம்பண்ணவேண்டியதற்காகவசிஷ்

டைப்பிரார்த்திப்பது என்னத்துக்கெனில் | வாருங்கோள்முனீசுவரர்களே இராமர்புத்தியினுலெதையறிந்திருக்கிறுரோ அதுவேபரமார்த்த வஸ்துவென்று இராமருமின்னஞ்சில அதிகாரிபுருஷர்களும் வசிஷ்டருடைய சன்னிதானத்தில்நின்றுங்கேட்டுமனதுக்கிளைப்பாறுதலையடைவார்கள் [சகலரும்முத்தியடைவதற்காக வசிஷ்டரைப் பிரார்த்திக்கிற தென்பதுகருத்து] (அ-கை) அதைத்தானே நன்றுகச்சொல்லுகிறுர் | சரற்கால இலட்சுமியானவள்நிருமலாகாசத்தை எப்படியபேட்சிப்பளோ அப்படிஇராமருடையபுத்தியும் ஒன்றுனசிற்சொரூபத்தை யபேட்சிக்குது * இப்போதுமகாத்மாவாயிருக்குற இராமருடையமனதுக்கிளைப்பாறுதலுண்டாகிறத்துக்காகப் பகவானுயிருக்கிறவசிஷ்டரானவர்யுத்தியைச்சொல்லவேண்டும் * (அ-கை) உம்மாலேயே என்னத்தினுலுபதேசிக்கப்படவில்லையெனில | சகலசாஸ்திரமுந்தெரிந்தவராயும் சகலபதார்த்தங்களுக்குஞ்சாட்சியாயு மூன்றுலகங்களிலுநிருமலமானமனதுடையவராயுமிருக்கிற வசிஷ்டரானவர் இரகுவம்சத்திராஜாக்களுக்கெல்லாங்குலகுருவாயும் பிரபுவாயுமிருக்கிறுர் [இவரை அதிக்கிரமித்துதிரிசங்குமுதலானபேர்களுக்கு நன்மையில்லாததினுல் இவரேயுபதேசிக்கவேண்டுமென்பதுகருத்து] வாரீர்பகவானுயிருக்கிற வசிஷ்டரே உமக்குஞாபகமிருக்குதா முன்னுல்நம்மிருவருக்குமுண்டானதுவேஷம் நீங்குகற்காகவும் மகாவிவேகிகளானமுனிவர்களுக்குமோட்சமுண்டாவதற்காகவும்நிடதபர்வதத்தினுடையதாழ்வரையில் பகவானுயிருக்கிற பிரமாவானவர் தாமேவெகுயுத்திகளோடுகூடினஞானத்தையுபதேசித்தாரோ அந்தஞானத்தினுலிந்தச் சமுசாரவாசனையானதுசூரியனு லிராத்திரியானது போலச் சாந்தியை நிச்சயமாகவடைகின்றதோ அந்தஞானத்தை சிஷியராகிய இவ்விராமருக்கு இளைப்பாறுதலுண்டாகும்படிக்குச் சீக்கிரமாகவுபதேசம்பண்ணும்* இராமர்மலினவாசனையைவிட்டுச்சாதன சம்பத்தோடுகூடியிருக்கின்றதனுல் உம்முடையவுபதேசமானது பலமற்பமாகவும் பிரயாசமதிகமாகவுமுள்ளதல்ல அதெப்படியெனில் நிருமலமான கண்ணுடியில்முகமானது எத்தனமில்லாமற் பிரதிபலிக்கின்றதுபோலவாகும் * (அ-கை) இராமருக்குபதேசஞ்செய்வதனுல் உம்முடையதெரிந்தநன்மைக்குந்தயவுமுதலானகுணங்களுக்கும் பிரயோசனமுண்டாவதினுல் நன்றென்று சொல்லுகிறுர் | வைராக்கியத்தோடுகூடினநல்லசிஷியனுக்கு உபதேசம்பண்ணுகிறதுதான்ஞானம் அதுதான்வேதாந்தசாஸ்திரத்தினுடைய அருத்தம் அதுதான்வுத்தமமான பாண்டித்தியம் [வித்தையைநல்ல பாத்திரத்திற்கொடாமற்போனுல் வீணுகப்போகிறத்தினுல் நிந்திக்கப்படு மென்பது கருத்து]



வைராக்கியமில்லாதவனுயுஞ் சிஷியனல்லாமலுமிருக்கிறவனுக்கு ஏதாவது உபதேசித்தால அந்தவுபதேசநாய்த்தோலாற் செய்யப்பட்ட துருத்தியிலிருக்கிறபசுவின்பாலைப்போல அசுத்தமாகப்போகும் * அவித்தையினுலுண்டாகிற ஆசைமுதலானதுகளவித்தைபோனத்தினுல் போய்விடுமாகையால் ஆசை பயம் கோபம் அபிமானம் பாபமுதலானதுகளில்லாத உண்மைபோற்கொத்தபேர்கள் எந்தபுருஷினுக்குபதேசம்பண்ணுகிறுர்களோ அந்தப்புருஷினுடையபுத்தியானது இந்தவுபதேசகாலத்திலேயே யிளைப்பாறுதலையடைகுதென்றுவிசுவாமித்திரர் சொல்லும்போது வியாசர்நாரதர்முதலானபேர்கள் அவர்சொன்னதையேநன்றுநன்றென்றுதுதிசெய்தார்கள் * அதன்பின்புதசரதர்பக்கத்திலிருக்கின்ற முனீஸ்வரராகிய வசிஷ்டர்சொல்லத் அடங்கினர் * (அ-கை) தத்துவத்தையறிந்தோர்கட் கடையாளமாயிருக்கிற அகங்காரமில்லாமலிருக்கைமுதலானகுணங்களைத்தன்னுடையநடத்தைகளிலுலிதராளுக்குச் சிட்சிப்பிக்கின்றவர்போல வணக்கமுள்ளவார்த்தையினுல் தன்னைப்பிரார்த்திக்கப்பட்டகாரியத்தைவசிஷ்டர்பிரதிக்கினைபண்ணுகிறுர் * வாரீர்முனீசுவரரோநீர் எனக்கு ஏதை ஆக்கினைபண்ணுகிறீரோ அதைவிக்கினமில்லாமல் நான்செய்கிறேன் சமர்த்தனுகவிருந்தாலும் எவன்றுன்பெரியவாளுடையவார்த்தையைத்தள்ளுகிறத்துக்குயோக்கியன் * தீபத்தினுலிராத்திரியிலிருக்கிற இருட்டைப் போக்கிறதுபோல இராமர்முதலான இராஜகுமாரர்களுடையமனதிலிருக்கிற அஞ்ஞானத்தை ஞானுபதேசத்தினுற் சீக்கிரமாகநான் போக்கிவைக்கிறேன் * யாதொருஞானமானதுபிரமாவினுல் சமுசாரப்பிராந்திபோவதற்காக முன்னாலேநிடதபர்வதத்திற்சொல்லப்பட்டதோ அதையெல்லாத்தையுங்குறைவில்லாமற்கிரந்தத்தோடும் அருத்தத்தோடும்நினைத்துக்கொண்டிருக்கிறேன் அல்லது அளவில்லாமலிருக்கிறதினுல் பூரணமாயும் ஞானசொரூபமாயுமிருக்கிற அந்த ஆத்மசொரூபத்தை எப்போதும் அனுசந்தானம் பண்ணிக்கொண்டிருக்கிறேன் * ஸ்ரீவான்மீகிசொல்லுகிறுர் மகாத்மாவாயிருக்கிற இந்தவசிஷ்டரானவர்பிரகாசமாக முன்சொன்னபடிக்குப் பிரதிக்கினைபண்ணிக்கொண்டு சூரனுவது அல்லது கூத்தாடியாவது ஆயுதங்களையெடுத்துக்கொள்ளுகிறது அலங்காரங்களைப் பண்ணிக்கொள்ளுகிறதுமுதலானசாமக்கிரியைகளோடுகூடிக்கொண்டெப்படிவிளங்குகிறுனோ அப்படிசிஷியனுக்குஆத்மஞானம்வரவேண்டியத்துக்காகசாதகங்களான திஷ்டாந்தங்கள் கதைகள் பிரமாணங்கள்யுத்திகள்முதலானதுகளை நினைத்துப்பார்க்கிறத்தினுலுண்டான உச்சாகமுதலானசாதனங்களாலடையப்பட்டும் விசேஷமா

கவுபதேசம்பண்ணுகிறபேர்க ளுடையதேசசையுடைத்தானவராயு மிருந்
துகொண்டு சகலசெனங்களுடைய அஞ்ஞானமும் வேரோடுபோவதற்காக
ச்சொல்லப்படுவதாயும் பாமபதத்தைமுக்கியமாகத்தெரியப்படுத்துவதாயு
மிருக்கிற இந்தச்சாஸ்திரத்தைச்சொல்லத்துடங்கினார்.

இரண்டாவதுசருக்கமுற்றிற்று.

## மூன்றுவது சருக்கம்.

---

இச்சருக்கத்தில்இராமருடையசங்கையைப்போக்கடிக்கிறகாரணமாகஸ்
தூலமுதலானதுகளாயிருக்கிறசெகத்துகளுடையஅத்தியாரோபஅபவாதங்
களால் உட்பார்வையினா லறியப்பட்டிருக்கிற சிதாத்மாவை இச்சாஸ்திர
த்திற்குவிஷயமாகச்சொல்லப்படுகின்றது.

(அ-கை) இந்தப்பிரகாரம்முன்னடந்தகாரியத்தையெல்லாம் விஸ்
தாரமாகச்சொல்வதற்காக ஸ்ரீவசிஷ்டர் ஆரம்பிக்கிறார் | சிருஷ்டியினுடை
ய ஆதியில்பகவானாயிருக்கிற பிரமாவினால் செனங்களுடையதுக்கம்போக
வேண்டியதற்காகமுன்னாலெனக்குஞானசாதனமாயிருக்கிறயாதொருசாஸ்
திரமானதுசொல்லப்பட்டுதோ அந்தச்சாஸ்திரத்தைநான்சொல்லுகிறேன்
வேறேசொல்லவில்லை [இப்படிசொன்னதினாற்சம்பிரதாயஞ்சுத்தமென்ப
துகருத்து] (அ-கை) இந்தப்பிரகாரம்பிரதிக்கினை பண்ணினத்தினா
ல் சிரவணத்திற்சாவதானப் படுத்தப்பட்டிருக்கிற இராமர்வேறொன்றைக்
கேட்க்கவேண்டுமென்கிற ஆசையிருக்கும்போது முன்சொன்னத்திற்சாவ
தானமாகமனதிருக்கமாட்டாததினால் சூசிகடாகநாயம்போல முன்னாலே
வேறொன்றை அறியவேண்டுமென்கிற ஆசையைப்போக்கடிக்கிறத்தைப்பி
ரார்த்திக்கிறார் | வாரீர்பகவானேவிரிவானமோட்சசாஸ்திரத்தைச்சொல்லப்
போகிறநீரிப்போதெனக்குண்டானசமுசயத்தைப்போக்கினபின்புசொல்லு
ம்* (அ-கை) அந்தச்சமுசியமாவதென்னவெனில் | சகலமுந்தெரிந்தவரா
யும் மகாபுத்திசாலியாயும் குருவாயும் சுகருக்குப்பிதாவாகியுமிருக்கிறவி
யாசரென்னத்தினால்விதேகமுத்தராகவில்லை அவர்பிள்ளையானசுகப்பிரமரி
ஷி எப்படிவிதேகமுத்தரானார் [சேஷமில்லாமற்றுக்கங்கள்போகிறத்தினால்
நிரதிசயானந்தசொருபமாயுஞ்சுயம்பிரகாசமாயுமிருக்கிறஆத்துமராமாத்திர



மாகச்சேஷித்திருக்கையினால் விதேகமுத்திதானேஞானபலமானால்அந்தஞா
னபலமானது சகலத்தையுமறிந்தவராயிருக்கிற வியாசருக்குண்டாகாமற்
போனால்ஞானம் அனித்தியமானபலத்தோடுகூடினதாகவாகுதுஞானத்தினா
ல்அஞ்ஞானஞ்சுத்தமாகப்போய்விட்டால்அப்போதேகமுதலானகாரியங்களு
க்கு அஞ்ஞானருபமான முக்கியகாரணம் நசித்துப்போகும்போதுகாரியங்
களுடையயிருப்புக்கூடாததினாற்பிழைத்திருக்கிறதில்லாமற்போகும்பிழைத்
திருக்கிறதில்லாமற்போனால் பிரமவித்தையைத்தெரிவிக்கிறபேரில்லாததினா
ற்சம்பிரதாயம்விட்டுப்போகும் அஞ்ஞானஞ்சுத்தமாகப்போகவில்லையெனி
ல்மோட்சமில்லாமற்போகுங்கருமங்களைப்போலஞானமும்புண்ணியருபமாக
மாணம்வந்தபின்புபலிக்குமென்றுசொல்லக்கூடாது அதேனெனில் ஞானங்
கருமத்தைப்போலவிதிக்கப்படாததினாற்சீவன்முத்திசித்திக்கமாட்டாதென்று
வசிஷ்டர்தாற்பரியம்] (அ-கை) இந்தப்பிரகாரங்கேட்கபகவானாயிருக்கிறவசிஷ்டர்
இந்தப்பிரகாரங்கேட்கபகவானாயிருக்கிறவசிஷ்டர்
தாற்பரியம்] (அ-கை) இந்தப்பிரகாரங்கேட்கபகவானாயிருக்கிறவசிஷ்டர்

மானசகத்துக்கள் பூதகாலசகத்துக்களைப்போலவா பவுஷியகாலசகத்துக்
களைப்போலவா இவ்விரண்டுமல்லாததாலுங் குறைந்தகணக்குள்ளதாலு
ம்மூன்றையுஞ்சரியாகச் சொல்லக்கூடாது [ஆகையாலாரோபிக்கப்பட்டி
ருக்கிற அனந்தசகங்களுக்குஉபாதானகாரணமாயும் ஆத்மதத்துவமாயும்
நாசமில்லாததாயும் ஒன்றாயும் அதிஷ்டானமாயுமிருக்கிற சிதாத்மாவா
னவர் உம்மால் தெரிவிக்க யென்னுவறியப் பட்டுதென்று தாற்பரியம் ]
(அ - கை) இந்தப்பிரகாரந்தன் மனதிலிருக்கிறதாற்பரியத்தை இராமர
றிந்துமதிலொருவிசேஷஞ் சொன்னதினாற்சந்தோஷத்தையடைந்து முன்
சொல்லப்பட்ட ஸ்தூலப்பிரபஞ்சத்தைப் பொய்யென்றறிவதற்காக சூட்சு
மபூதங்களே பஞ்சீகரணத்தினால்ஸ்தூலபூதமாகத் தோற்றுகின்றமையாற்
சூட்சுமப்பிரபஞ்சமாத்திரமா யிருக்கையைக் காண்பிவிக்கப்போகிறவராயி
ருக்கிற ஸ்ரீவசிஷ்டர் சொல்லுகிறார் | பசுபட்சிமுதலானதுகள் மனுஷி
யாள் தேவாளிவர்களுக்குள்ளே யாதொருபிராணியானவன் ஏந்தத்தேசத்
தில் ஏந்தக்காலத்தில மரிக்கிறானோ பிரத்தியகாத்மாவாயிருக்கிற அந்தப்பி
ராணியானவன் அந்தத்தேசத்தில அந்தக்காலத்தில் மூன்றுலகத்தையுஞ்சீ
க்கிரமாகப் பார்க்கிறான் * (அ - கை) அந்தப்பிராணியானவன் ஏந்த
சாதனங்களோடுகூடி ஏந்தச்சொருபமாகவிருந்து முன்சொன்னமூன்றுல
கத்தையும்பார்க்கிறானெனில் | தூமமார்க்கம் அர்ச்சராதி மார்க்கங்களுக்
கபிமானிகளானதேவதைகளால் பரலோகத்தையடையப் பண்ணுகிறத்து
க்குயோக்கியமாயும் ஆதிவாகிகமென்று பேரோடுகூடியும் சித்தம் அகங்
காரம் மனது புத்தி தசேந்திரியங்கள்பஞ்சப்பிராணன்கள்இவ்வுருவமாயும்
வாசனாமயமாயுமிருக்கிற சூட்சுமசரீரத்தோடுகூடின அந்தப்பிராணி யா
னவன் றன்னிருதயமத்தியிலிருக்கிற தகராகாசத்திலேயே வாசனாமயமாயி
ருக்கிற இந்தமூன்றுலகத்தையும்பிராந்தியினாலனுபவிக்கிறான் ஏதார்த்த
மாகவோவென்றாலந்தப் பிராணியானவன் செனனமுதலானவிகாரங்களில்
லாமலிருக்கிற சிதாகாசசொருபனாகவிருக்கிறான் : சங்கை : இந்தச்சீவாத்
மாவானவன் கண்வழியாகவாவது சிரசுவழியாகவாவது இன்னஞ் சரீரத்
தில்வேறாகவிருக்கிற இடைவெளிவழியாகவாவது சரீரநசிக்கிற காலத்தில்
வெளியிற்கிளம்பிப்போகிறான் அவனோடுகூட பிராணனுங்கிளம்பிப்போ
குதென்றுசொல்லுகிற சுருதிமுதலானத்துக்குவிரோதமாக மரித்தபுருஷ
னானவன் தன்னிருதயத்திலேயேபரலோகத்தைப் பார்க்கிறானென் றெப்ப
டிசொல்லப்படுமென்று கேட்கும்போது : சமாதானம் : நீர்சொல்லுகிற
துசரிதான் ஆனாலும் கருமம் உபாசனைகளையனுசரித்துப் பரலோகமுத



லானவிவகாரப்பார்வையினாலந்தச்சுருதிமுதலானதுசொல்லுகின்றது இ
வ்விடத்திலேயோவென்றால் பரமார்த்தப்பார்வையினால் ஆகாசம்பூமிமுத
லானது இந்தச்சிதாகாசத்துக்குள்ளேயிருக்கிறதென்று சொல்லுகிறசுரு
தியைப்போல இருதயாகாசத்திலேதானே பரலோககற்பனையானதுசோ
ல்லப்படுகின்றது [சாட்சியிருதயாகாசமாத்திரமென்கிற நியமத்தைத்தள்
ளிக் கிரியையில்லாமலிருக்கிறானென்கிறத்தையும் பிரபஞ்சம்வாசனாமாத்தி
ரமாகயிருக்குதென்கிறத்தையும் தெரியப்படுத்துகிறத்துக்காக பரலோகத்
துக்குப்போகிறதுபோல உயரக்கிளம்புகிறது நடக்கிறதுமுதலானதும்
அவ்விடத்திலேயேகற்பனாமாத்திரமாகவிருக்கின்றமையால் முன்சொன்ன
துகூடலாமென்றுதாற்பரியம்] (அ - கை) ஓரிடத்திற்சொன்னஞாயத்
தைப்பலவிடத்திலுங்காண்பிவிக்கிறார் — இந்தப்பிரகாரம்மரித்ததுகளாயும்
மரிக்கிறதுகளாயும் மரிக்கப்போகிறதுகளாயு மிருக்கிறபிராணிகளுடைய
கோடிகளானதுகள் மரணகாலத்தில்வாசனாமயமாய்த்தங்களிடத்தில் லயித்
தும் அவ்வாசனானுகுணமாக தேவமனுஷியா திருபமாய் வெவ்வேறாகவு
ண்டாகியும்விளங்கிக்கொண் டிருக்கிற செகத்துக்களை யடையுதுகள் *
(அ - கை) இந்தப்பிரகாரஞ்சகத்துவாசனாமயமாயிருக்கும்போதுண்டா
னபலத்தை ஆறுசுலோகத்தினாற் சொல்லுகிறார் | மனதினாற்செய்யப்பட்
டபூசைமுதலானதுகளில் ஏத்தனப்பட்டு இரத்தினமயமான உப்பரிகைமு
தலானதுகளைச்செய்கிற சங்கற்பசிருஷ்டிபோலவும் ஏத்தனமில்லாமலிரு
க்கிறமனோராச்சியவிலாசம்போலவும் மாவலபோலவரிசையான இந்திரசா
லப்பிராந்திபோலவும் கதையினுடைய அருத்தங்கள் தோற்றுகிறது போ
லவும் வாதரோகவிசேஷத்தினாற்பூமி அலைகிறபிராந்தி போலவுங் குழந்
தையைப்பயப்படுத்துகிறத்துக்காகக் கற்பிக்கப்பட்டபிசாசம்போலவும் நி
ருமலமான ஆகாயத்திற்றேற்றுகிற முத்துக்கூட்டம்போலவும் ஓடத்திலே
றிப்போகிறபுருஷனுக்கு கரையிலிருக்கிறமரம்நடக்கிறதுபோலவுஞ் சொ
ப்பனத்திற்காணுகிறபட்டணம்போலவும் நினைவினாலுண்டாயிருக்கிற ஆ
காசபுட்பம்போலவுமிருக்கிற சகத்தினுடையதோற்றுதலை மரித்தபுருஷ
னானவன் தன்னிருதயத்திற்றான்றானே அனுபவிக்கிறான் * (அ - கை)
அப்போதுசாக்கிரத்துக்குஞ்சொப்பனத்துக்கு மிகவுங்குணபேதமிருக்கின்
றமையால் சொப்பனமுதலானதுபோலச் சாக்கிரமாக மாட்டாதென்று
சொல்லுகிறவியாசருடைய சூத்திரமும் அந்தச்சாக்கிரத்தையனுபவிக்கிற
புருஷனுக்கு வெகுகாலம்நியமமாகத் துடர்ந்துவருகிற விவகாரமானது
சத்தியமாகத் தோற்றுகையுமெப்படி கூடலாமெனில் | சொப்பனத்தைப்

போலத் தோற்றுகிறபிரபஞ்சமானது நெடுநாளானபரிசயத்தினாலும் ப
ஞ்சிகரணத்தினாலும் வலுவாயிருக்கிற அந்தச்சகத்தே இகலோகமென்றேசீ
வாகாசத்திற்றோற்றுகிறது [அந்தப்பேதத்தினாலேயே சொப்பனசாக்கிரங்
களுக்குக்குணபேத விவகாரமேதவிரவேறொன்றினாலும் பேதமில்லையெ
ன்பதுகருத்து] (அ - கை) ஒருநிலையில்லாதசுபாவத்தையுடைத்தாயி
ருக்கையினாலுஞ்சகம் பொய்யென்கிறதைத்தெரிவிக்கிறார் | திரும்பவுஞ்
சீவனானவன் அந்தச்சகத்திலேயே செனனமுதல்மரணபரியந்தமிருக்கிற
நடத்தைகளையும் மரணமுதலான துகளையுமனுபவித்துக்கொண்டுபரலோ
கத்தைக்கற்பித்து அவ்விடத்தில்மரித்தவனாய்க் கொண்டுதிரும்பவுமுன்சொ
ன்னபடியனுபவிக்கிறான் * அந்தப்புருஷனுக்குள்ளேவேறேவெகுபுருஷா
ளிருக்கிறார்கள் அவர்களுக்குள்ளேயும் வேறேவெகுபுருஷாளிருக்கிறார்கள்
இந்தப்படிஇந்தச்சமுசாரங்களானதுகள் வாழைப்பட்டைகள்போலொன்
றுக்குளொன்று வரிசையாகவிருக்கின்றதுகள் * (அ - கை) இந்தப்பிற
காரஞ்சகத்துபொய்யாயிருக்கை சித்திக்கும்போது அந்தச்சகத்தினுடைய
அபவாதத்தினால் ஆத்மாமாத்திரமாகச்சேஷிக்கிறதுசித்திக்குதென்கிறகருத்
தினாற்சொல்லுகிறார் | மரணத்தையடைந்த அந்தப்புருஷர்களுக்கு அந்த
ப்பரலோகத்திலும் பூமிமுதலானமகாபூதங்களுடைய கூட்டங்கள் சகத்து
க்களுடையநடக்கைகள் இதுகள்யாதொன்றுங்கிடையாது ஆனாலும் அ
ந்தந்தப் புருஷாளுக்கு பிராந்தியினாற் சகத்துக்கள் தோற்றுகின்றதுகள்
* (அ - கை) அவித்தைவேரோடுநசிக்கிறத்தைத்தவிர அந்தப்பிராந்
திகள்போகிறதில்லையென்கிற கருத்தினாலவித்தையினால் நசிக்கிறதுசித்தி
க்கவேண்டியதற்காகச் சூட்சுமரூபமாகத் தெரியப்படுத்தப்பட்ட பிரபஞ்ச
த்துக்குக்காரணமாயிருக்கிற அவித்தையாமாத்திரமாயிருக்கையைச் சொல்
லுகிறார் | அளவிடப்படாமலிருக்கிற இந்த அவித்தையாகிறமகாநதியா
னது நானாவிதமாக ஓடிக்கொண்டும் மூடர்களுக்குத் தாண்டக்கூடாததா
கியும் அலைந்துக்கொண்டிருக்கிறசகத்தாகிற அலைகளோடு கூடிக்கொ
ண்டிருக்கின்றது * (அ - கை) அவித்தை முதலான சகலகற்பனைக்
குமிருப்பிடமான பிரமத்தைக் காண்பிக்கிறார் | பரமாத்மாவாகிற பெரி
தானசமுத்திரத்தில்சகத்தாகிற அலைகளானதுக ளடிக்கடிமுன்னுண்டா
னதாயும் வேறேபுதிதாயுமனேகவிதமாயுமிருக்கின்றதுகள் * உலகத்தில்
சிலசனங்கள்குலங்க ளுடையவரிசை மனது குணங்களிதுகளெல்லாத்தின
லும்முன்போற்சரியாயும் சிலசனங்கள் முன்போற்பாதிசரியாயும் பாதிவே
றேபிரகாரமாயுஞ் சிலசனங்கள்முழுதும்வேறே பிரகாரமாயு மிருக்கின்ற



சமாதானத்துக்காக
துகள் * (அ - கை) பிரகிருதசங்கையினுடைய விஷயத்தையுங்கா
ச்சகத்தினுடையநிலையாமையையு மிச்சாஸ்திரத்துக்கு யோக்கியமானசனனம் சாஸ்
ண்பிக்கிறார் | புராணமுதலான செய்கை களோடுகூடிய வியாசருடைய
திரமுதலானஞானம் ஆத்மவித்தை யிவைகளோடுகூடிய இவ்வியாசமுனியைமுப்பத்தி
அவதாரமாகிற அலைகளில் ஏதிரோயிருக்கிற அந்தமுப்பத்திரண்டுவியாச
ரண்டாவதாகநினைக்கிறேன் * (அ - கை) அவ்வியாசமுனி
ரிஷிகளுக்குள்ளே தாரதன்மியத்தைச் சொல்லுகிறார் | அதிகாரம்நடத்தைஇ
களுக்குள்ளேபனிரெண்டுவியாசமுனிகள்குலம்உருவம்அதிகாரமுதலில்லாமலிருக்கிறத்தி
துகளினால்சரியாயுந்துரியத்தையடைந்திவைப்பா முனிகள் சரியான
னாற்புத்தியாயுமிருக்கிறார்கள் மறுபடிபத்து வியாசமுனிகள் குலத்தினால்வே
உருவத்தையுடையவர்கள் மறுபடிபத்துவியாசமுனிகள் மனுஷியாள்வி
றுவேறுயிருக்கிறார்கள் * இப்பவும்வேறேயாயிருக்கிற பிருகு ஆங்கிரசு புலஸ்திய
யாசவான்மீகிகளாக வுண்டாகப்போகிறார்கள் * ம
ரிவர்கள்முன்போலும் அதற்குவேறேயாயுமுண்டாகப்போகிறார்கள்
அஷியாள் தேவரிஷிகள் தேவதைகளிவர்களுடைய கூட்டங்களானதுக
ள் ஒருக்கால்சேர்ந்துகொண்டு அதிகமாகவுண்டாகிநாசத்தையடைகிறார்க
ள் ஒருக்கால்வெவ்வேறாகவுண்டாகிநாசத்தையடைகிறார்கள் * பிரமகற்ப
த்தினுடைய ஏழுபத்திரண்டாவதா யிருக்கிறதிரேதாயுகமான திப்போதிரு
க்கின்றதுகற்பந்தோறும்முன்னேயுமிருந்ததுஉண்டாகவும்போகுது நீ
ரும் நானுமிந்தவுலகங்களும் முன்போலவும் அதற்குவிலட்சணமாகவும்
முன்னாலுண்டாயும் மேலுமுண்டாகவும்போகிறோமிதுகளெல்லாம் நா
னறிந்திருக்கிறேன் * ஆச்சரியமாயிருக்கிற காரியங்களோடுகூடியும் மு
னீசுவரராயும் திரிகாலக்கியானமுள்ளவராயும் ஏதிரோயிருக்கிறவியாச மு
னியினுடைய இச்சனனமானது சீவன்முத்தகிறமத்தினால் பத்தாவதாகக்
காணப்படுகுது [முப்பத்திரண்டாஞ் சன்மத்தை யுடையவராகமுன்னே
சொன்னதுசாமானியமென்றும் பத்தாவது சன்மத்தையுடையவராக இ
ப்போதுசொன்னதுசீவன்முத்தகிற மத்தினாலேன்றுமறிவது] வியாசவா
ன்மீகிகளோடுகூடிக்கொண்டிருக்கிற நாங்களனேகந்தரமுண்டானோமிந்
தநாங்களே வெவ்வேறாகவுமனேகந்தர முண்டானோமிந்தநாங்களே ஒருவ
ருக்கொருவர்சரியாயுஞ்சரியில்லாமலுந் தெரிந்தவர்களாயுஞ் சரியானமன
துள்ளவர்களாயும்நாநாவிதமானவுருவங்களையுடையவர்களாயும் உண்டா
யிருந்தோம் * இவ்வுலகிலிவ்வியாசரின்னம் எட்டுஅவதாரஞ்செய்து அனே
ககதைகளோடுகூடினமகாபாரதமென்கிறகிரந்தத்தையும்வேதங்களுடைய

பிரிவினையையுஞ்செய்து தன்வமிசத்துக்குப் பிரசித்தியைச்செய்துவைத்துப் பிரம பட்டத்தைப் பிரசித்தமாகவனுபவித்துப் பின்பு விதேகமுத்தியையடையப்போகிறார் * (அ - கை) இவ்வியாசருக்கிப்போது சீவன்முத்தியைத்தெரிவிக்கிறார் | சாந்திகுணமுள்ளவராயுமஞ்ஞானமில்லாதவராயும்நானெனதென்கிற அத்தியாசகற்பனையில்லாதவராயுந் துக்கம்பயமிதுகளில்லாதவராயும் மனதைச்செயித்தவராயுமிருக்கிற இவ்வியாசரானவர்சீவன்முத்தரென்று சொல்லப்படுகிறார் * பிராணிகளானதுகள் திரவியம் பந்துக்கள் வயது கருமம் வித்தை ஞானம் நடத்தை இதுகளால் ஒருக்கால்சரியாயும் ஒருக்கால்சரியில்லாமலுமிருக்கின்றதுகள் * அந்தப்பிராணிகளானதுகள் ஓரிடத்தில் ஒருகாலத்தில் அனேகசென்மங்களிலுண்டாகின்றதுகள் ஒருக்கால் உண்டாகிறதுகளில்லை இந்தமாயையானது இந்தப்பிரகாரம் ஒழிவில்லாமலிருக்கின்றது * இந்தப்பிராணிகளுடையவரிசையானது அடிக்கடிஅளக்கப்பட்டுக்தும்பலாகச்சேர்க்கப்பட்டவிளாப்பட்டடையைப்போலமேலதுகீழதாயுங்கீழதுமேலதாயும்வித்தியாசத்தையடைகின்றது *காலமாகிறசமுத்திரத்திலிருந்துஞ்சிருஷ்டிரூபமானஅலைகளானதுகள்அடிக்கடிமுன்னிருந்தகிரமமாயும் அதற்குவித்தியாசமான கிரமமாயும் உண்டாகுதுகள் * (அ - கை) சீவன்முத்தருக்குயோகாப்பியாசபெலத்தினாலதிகாரத்துக்கு யோக்கியமானவெகு விதமானசரீரத்தையடைந்த போதிலும் உண்டாயிருக்கிற முத்திக்குக்குறைவில்லையென்று சொல்லுகிறார் | சீவன்முத்தனாயிருக்கிற புருஷனானவன் சமசித்தமுள்ளவனாயும் அவித்தையினுடைய மறைவில்லாததினால அசாரமாயிருக்கிற தேகமுதலானத்தில் ஆத்மபுத்தியில்லாதவனாயும் விகற்பமில்லாதவனாயும் ஆத்மசோரூபத்தினுடையசாரமயனாயும் முக்கியமாயிருக்கிற சமகுணமாகிற அமிர்தத்தினால் திருத்தியடைந்தவனாயுமிருக்கிறான் [ ஆகையால் ஞானத்துக்குச்சீவன்முத்திதான்பலம் அந்தச்சீவன்முத்தியும் ஒருக்காலுண்டாகிறது ஒருக்காலுண்டாகிறதில்லையென்பதுகிடையாதென்றுகருத்து. ] *

மூன்றாவதுசருக்கமுற்றிற்று.



# நான்காவதுசருக்கம்.

இச்சருக்கத்தில் முத்தியடைந்தபேர்களுடைய அனுபவத்தினால் சீவன்முத்திவிதேகமுத்திகளுக்குப்பேதமில்லையென்றும் மோட்சோபாயத்தைச் சொல்லுகிற மூலக்கிறந்தங்கெட்டிப்பட வேண்டியதற்காக சாஸ்திரங்களிற்சொல்லியிருக்கிற புருஷப்ரயத்தனமுக்கியமாகச் சொல்லப்படுகின்றன.

(அ - கை) நித்தியமுத்தசுபாவமாயிருக்கிற ஆத்மாவுக்கு அஞ்ஞானத்தினாலுண்டாயிருக்கிற மறைவுதானே பந்தமென்றும் ஞானத்தினால் அந்தப்பந்தம்நசிக்கிறதே முத்தியென்றுஞ்சொல்லப்படும் அந்த அஞ்ஞானஞ் சேஷமில்லாமல் நசிக்கும்போது சித்திரமென்று அறியப்பட்டசித்திரப்புலியானதுபோல உலகவிவகாரமானது காணப்பட்டபோதிலுஞ் சந்தோஷத்துக்கேதுவேதவிர துக்கத்துக்கேதுவல்லவென்று சீவன்முத்தன் விதேகமுத்தனிவர்களுக்குப்பேதமில்லையென்று முன்கேட்ட சங்கையைச்சமாதானம்பண்ணிப்பிரகிருதமாயிருக்கிறஆத்மதத்துவத்தைவிஸ்தாரமாய் உபதேசிக்கவேண்டுமென்கிற இச்சையுள்ள ஸ்ரீவசிட்டரானவர் மூலக்கிறந்தங்கெட்டிப்படவேண்டியதற்காக புருஷப்ரயத்தனத்தைமுன்னே சமர்த்திக்கிறார் வாரீர்சாந்தமாயிருக்கின்ற இராகவரே அசைவில்லாமலிருக்கும்போதும் அலைரூபமாக அசைந்துகொண்டிருக்கும்போதுஞ் சமுத்திர சலமானது எப்போதுஞ் சலமாகவே எப்படியிருக்குதோ அப்படியே சீவன்முத்தவிதேகமுத்த முனீஸ்வரருக்கு ஆத்மசொரூபமாக யிருக்கையானது சரியாகவே யிருக்கின்றது * புருஷனுக்கு விதேகமுத்தி வந்தாலுஞ் சீவன் முத்திவந்தாலும் அது விஷயத்தைப் பற்றி வரப்பட்டதல்ல [ அதேனென்னில் சுவற்க முதலானது போல முத்தியும்விஷயத்தைப்பற்றிவருமேயானால் அப்போது அப்படியேவிஷயங்களுடைய ஏற்றத்தாழ்த்தியினால் முத்தியும் ஏற்றத்தாழ்த்தியாகுமென்பதுகருத்து ] (அ - கை) ஆனாலுந் தேகத்தினுடைய இருப்பானதுபோகத்தைபிரயோசனமாகவுடைத்தாயிருக்கையினால் சீவன்முத்தனுக்குப்போகங்களுண்டு விதேகமுத்தனுக்குப் போகங்களில்லையென்கிற விசேஷமிருக்குதென்று கேட்கும்போது சொல்லுகிறார் | சத்தியபுத்தியினாற்போகங்களைப்புசியாமலிருக்கிறசீவன்முத்தனுக்குப்போகங்களுடைய அனுபவங்களானதுகளெப்படிவரும் [ போகங்களிற்சத்தியபுத்தியினால் நான்புசிக்கிறேனென்கிற அபிமானத்தினாற்போகத்தைப்புசிக்கும்போதுபோகத்தினாற்பண்ணப்பட்டவிசேஷமுண்டாகுஞ்சம்பந்தமில்லாமலும் உதாசீனனாயுமிருக்கிறஆத்மாவோடேயொன்றாயிருக்

கிறபார்வையுள்ள சீவன்முத்தனுக்கு விசேஷமில்லையென்பது கருத்து ]
(அ - கை) அப்போதித்த வியாசருக்கு தேகமென்னத்தினா லிருக்கு
தென்றுகேட்கும்போது சொல்லுகிறார் | சீவன்முத்தராயும் முனீஸ்வரரா
யுமிருக்கிற இவ்வியாசரை தேகத்தோடே கூடினவர்போல நம்முடையக
ற்பனையினால் எதிரேயிருக்கிறவராகப் பார்க்கிறோமேதவிர அவருடையம
னதில் தேகமில்லாமலிருக்கிற நிச்சயத்தை நாமறியோம் * ஞானசொரூப
மானசீவன்முத்தருக்கும் விதேகமுத்தருக்கும் பேதத்துக்கேதுவாயிருக்கி
ற அஞ்ஞானம்போகும்போதும் ஞானமாத்திரமாகச் சேஷித்திருக்கும்போ
தும் என்னபேதமிருக்குது அலையாக இருக்கும்போதெந்தச்சலமிருக்குதோ
அந்தச்சலந்தான் அலையில்லாமற் றெளிவாயிருக்கையிலு மிருக்குது *
(அ - கை) சலத்தில் ஒருக்கால் தெளிவில்லாததினால் விசேஷமிருக்கலாமென்று
வேறேதிஷ்டாந்தத்தினாற்சொன்ன அருத்தத்தைச்சாதிக்கிறார் | வாயுவானது அ
சைவோடேகூடினபோதிலுமசைவில்லாதபோதிலும் வாயுவாகவே பேதமி
ல்லாமலெப்படியிருக்குதோ அப்படி சீவன்முத்தனுக்கும் விதேகமுத்தனுக்கு
மற்பமும்பேதமில்லை * (அ - கை) சீவன்முத்தியென்றும் விதேகமுத்தியென்
றும் பந்தமென்றும் மோட்சமென்றுமிது முதலான விவகாரமானது அஞ்ஞா
னியினுடைய பார்வையினால் கற்பிக்கப்பட்டதேதவிர ஞானியினுடையபார்
வையினால் கற்பிக்கப்பட்டதல்லவென்று சொல்லுகிறார் | எப்போதும் பிரி
வில்லாமலும் ஒன்றாயுமிருக்கிற ஆத்மசொரூபமான சீவன்முத்திதானாவது
விதேகமுத்திதானாவது எங்களுக்கு மிவ்வியாசருக்கும் பரமார்த்தமான
பார்வைக்குப் பேதமில்லை ஞானத்துக்குப் பலமாயிருக்கிற அவ்வாத்
மாவினுடைய லாபத்தில் விசேஷமில்லாத்தினால் ஞானத்துக்கு ஒருக்கால்
பலமுண்டு ஒருக்கால்பலமில்லையென்கிற தோஷத்துக்கிடமில்லை ஞான
முண்டாகும்போது தேகம்போய்விடவேண்டுமென்கிற சங்கையுமில்லை
அதேனெனில் தனக்குவிரோதியாயிருக்கிற அஞ்ஞானந்தானே ஞானத்தி
னாற் போகிறபடியால் தேகமிருக்கிறதும் பிராரத்துவ கருமத்தினுடைய
பலமாயிருந்துகொண்டு ஞானத்துக்குச்சமானமாகவு மதற்கேதுவாகவுமி
ருக்கிறத்தினால் ஞானத்துக்குவிரோதியல்ல அதெப்படியென்றால் முக்கிய
காரணமாயிருக்கிற நித்திரைபோனபோதிலுஞ் சொப்பனத்தினுடைய அ
னுபவத்தினாலுண்டான சமுஸ்காரமானது சிறிதுகாலமிருக்கின்றதுபோ
ல அஞ்ஞானம்போனபோதிலும்பிராரத்த கருமமிருக்கிறவரைக்குந்தேகமு
தலானதுகளுடைய தோற்றுதல்கூடலாமென்பதுகருத்து * (அ - கை)
இந்தப்பிரகார மிராமருடைய சமுசயத்தைநீக்கிமோட்ச சாஸ்திரத்தைச்



சொல்வதற்கு ஆரம்பிக்கிறார் | ஆகையால் முதன்மையாயுங்கேட்கிறத்து
க்கழகாயும் அஞ்ஞானிகளுடைய அஞ்ஞானமாகிற குருட்டுத்தனத்தைப்
போக்குகிறதாயு மிருக்கிற ஞானசாஸ்திரத்தைக்கேளும் * (அ - கை) சா
ந்திமுதலானசாதன சம்பத்தோடுகூடின சுகப்பிரமரிஷிமுதலான பெரி
யோர்களுக்குவேதாந்த சிரவணம்பலித்திருக்குது சாந்திமுதலானசாதனங்
களைச்சம்பாதிக்கிறது வருத்தமானபடியினா லிப்போதிருக்கிற[..]
அந்தவேதாந்த சிரவணமெப்படி பலிக்குமெனில புரு[..]த்தனத்தினு
சாத்தியமாகுமென்று சொல்லுகிறார் | வாரீர் இராமரே இ[..]
ற்சகலமானபேர்களாலும் செம்மையாகச்செய்யப்பட்ட புருஷப்ரயத்தனத்தி
னாலெப்போதுஞ் சகலகாரியங்களு மடையப்படுகுது [ அ[..]
டத்திற்புருஷப்ரயத்தனம் பலியாமற்போகிறதென்னத்தினாலெனில் காரிய
ஞ்சித்திக்கிறவரைக்கும் சோம்பலினால் நடுவில்விட்டுப்போகாமலிருக்கிறபு
ருஷப்ரயத்தனமில்லாததினா லென்பதுகருத்து ] இவ்வுலகத்தில்புருஷப்ரயத்
தனத்தினாலேயே சாஸ்திரத்தினால் விதிக்கப்பட்டும் மனவாக்குக்காயங்களு
டைய அசைவுரூபமாயுமிருக்கிற கருமத்துக்குப்பலமான ஞானமானதுசி
த்தசுத்திவழியாய் வந்திருக்கும்போது இருதயத்தில் காமக்குரோதமுதலா
னத்தினாலுண்டான சந்தாபத்தினாற் கேடுபடாமலுஞ் சந்திரனுடையகுளு
மையைப்போற் குளிர்ந்துமிருக்கிற சீவன்முத்திச்சுகமான துண்டாகுதே
தவிர வேறொன்றினாலும் வுண்டாகிறதில்லை [ பிரமத்தையறிந்தவனு
டையசுகத்தி லணுமாத்திரமிரணிய கெற்பர்முதலானவர்களுடைய சுகமெ
ன்றுசுருதிசொல்லுகிறபடியினாலும் காமபோகத்தினாலுண்டாகிறசுகமுஞ்
சுவர்க்காதிபோகத்தினாலுண்டாகிறசுகமும் நிராசையுள்ள புருஷனுடைய
சுகத்தில் பதினாறிலொருபங்குக்குச்சரியாகமாட்டாதென்று ஸ்மிருதிசொல்
லுகிறபடியினாலு மிச்சுகங்களெல்லாம் புருஷப்ரயத்தினத்தினாலேயேவுண்
டாகுதென்பது கருத்து ] * (அ - கை) தெய்வம்பிரதிகூலமாயிருக்கும்
போதுபுருஷப்ரயத்தனம் வீணாகக்காணப்படுகுது அப்படியேநல்லகாரியங்க
ளெல்லாம் வெகுவிக்கினத்தோடேகூடினதென்று பிரசித்தியினால்புருஷ
ப்ரயத்தனம்பலிக்குமென்கிறத்தில் விசுவாசம்வரமாட்டாதெனில் புருஷப்ர
யத்தனத்துக்குள்ளே தெய்வமடங்கியிருக்கையு மத்தெய்வத்துக்குத்துற்பல
மாயிருக்கையுஞ் சொல்லப்போகிறதைக் கருத்தில்வைத்துக்கொண்டுதெ
ய்வத்தினுடைய சுவாதந்திரியத்தைத்தள்ளுகிறார் | புசிக்கிறது நடக்கிற
துமுதலானபுருஷப்ரயத்தனமானது அசைவுவழியாக இன்னமொருகிராமத்
தையும் திருத்திமுதலானத்தையு மடையப்பண்ணிக்கொண்டுபிரத்திஷ்

மாகக்காணப்படுகின்றது மோகத்தையடைந்திருக்கிறபுத்தியில்லாதவனால் கற்பிக்கப்பட்டதெய்வமானதொன்றுமில்லை * (அ - கை) துதிக்கத் தக்கதானபுருஷ எத்தனமானதெப்படிப்பட்டதென்று கேட்கும்போது சொல்லுகிறார் மகான்களாற்சொல்லப்பட்டமார்க்கத்தில் மனவாக்குக்காயங்களாற்செய்யப்பட்ட யாதொருவியாபாரமுண்டோ அதுதான்பலத்தோடேகூடின புருஷ எத்தனம் மற்றது பயித்தியக்காரநடத்தை * எந்தப்புருஷனானவன் எந்தப்பதார்த்தத்தையிச்சிக்கிறானோ அந்தப்புருஷன் அந்தப்பதார்த்தஞ்சித்திக்கவேண்டியதற்காக சாஸ்திரத்திற்சொல்லியிருக்கிறபடிக்கு எத்தனம்பண்ணி பாதியில்விடாமற் செய்தாலவசியமாக அந்தப்பலத்தையடைகிறான் * (அ - கை) முன்சொன்னநியமத்தைத்தானேதிஷ்டாந்தங்களினால் திடப்படுத்துகிறார் | விசேஷமாயிருக்கிற ஒருபிராணியானவன்புருஷ எத்தனத்தினாலேயே மூன்றுலகத்திலுமுள்ள பாக்கியங்களினாலழகாயிருக்கிற இந்திரபட்டத்தையடைந்தான் * விசேஷமாயிருக்கிற ஒருபிராணியானவன்புருஷ எத்தனத்தினாலேயே அன்னப்பட்சியோடு கூடிக்கொண்டிருக்கிற பத்மாசனத்தையுடைய பிரமபட்டத்தை யடைந்தான் * ஒருபுருஷன்தன்னுடைய வலுவானபுருஷ எத்தனத்தினாலேயே கருடக்கொடியையுடையதாயிருக்கின்ற விஷ்ணுபட்டத்தையடைந்தான் * இவ்வுலகத்தில் ஒருபிராணியேபுருஷ எத்தனத்தினாலேயே சந்திரசூடனாயும் அருத்தனாரீச்சுவரனாயுமிருக்கின்ற உருத்திரபட்டத்தையடைந்தான் * புருஷ எத்தனமானது முன்னுண்டானதென்றுமிப்போதுண்டானதென்றுமிரண்டுவிதமாகவறியும் அதிலிப்போதுண்டானஎத்தனமானது முன்னுண்டானஎத்தனத்தைச்செயிக்கின்றது * (அ - கை) அனந்தகோடிகற்பகாலங்களாற்சம்பாதிக்கப்பட்டும் அனேகமாயுமிருக்கிறமுன்சென்மத்திற்செய்யப்பட்டகருமங்களுக்குஇப்போதுசெய்கிற அற்பமானபுருஷ எத்தனத்தினால்நாசமெப்படிவருமெனில் | எத்தனமுள்ளவர்களாயும்வலுவான அப்பியாசமுள்ளவர்களாயும் நல்லபுத்திசந்தோஷங்களோடுகூடிக்கொண்டும்பிரளயகாலத்துக்கதிகாரியான தேவதையாயிருக்கையையடைந்துமிருக்கிற புருஷர்களால் மகாமேருமுதலான பர்வதமுந்தங்களுக்குள்ளே மறைக்கப்பட்டுப்போகின்றதுகளாகையால் முன்செய்யப்பட்ட கருமமனேகமாயிருந்தபோதிலும் அதற்கெல்லாமூலமான அஞ்ஞானமொன்றான படியினால் அதுநசிக்கும்போது அந்தக்கருமங்களும்வருத்தமில்லாமற்றானேசெயிக்கப்படுமென்கிறத்துக்குக் கேட்கவேண்டியதென்ன விருக்கின்றது * (அ - கை) இப்போதுசொன்ன அருத்தத்தை முடித்து அந்தப்புருஷ



எத்தனத்தைச்சாஸ்திரப்படி செய்யாமற்போனாலுண்டாகுமனர்த்தத்தைச் சொல்லுகிறார் | சுருதிமுதலானதுகளால் நியமம் பண்ணப்பட்ட புருஷ எத்தனத்தையே எப்போதும் அவசியஞ் சம்பாதிக்கத் தக்கது அதுதான் வேண்டியபலத்தினுடைய சித்தியின்பொருட்டாகுது விரோதமானபுருஷ எத்தனமோவென்றால் அனர்த்தத்தின்பொருட்டாகுது * (அ - கை) அற்பஎத்தனங்கள் அற்ப பலங்கள் அற்பபுத்தியுள்ளவர்களுக்கு அதிகமாயிருக்கிறஎத்தனங்கள் அதிகமானபலங்கள் அதிகமான புத்திகளுள்ளவர்களால் சாதிக்கத்தக்கபுருஷ எத்தனங்களுடையபலமானது எப்படிகிடைக்குமெனில் அவர்களுக்குந் தன்சத்தியினாற்செய்யப்பட்ட புருஷ எத்தனங்களுடையவரிசையினாலிச்சென்மத்திலாவது சென்மாந்தரத்திலாவது பலஞ்சித்திக்குது நல்லதிசையாவது கெட்டதிசையாவது ஒருவனுக்கெப்போதுமிருக்கிறதில்லை என்கிறகருத்தினால சாஸ்திரப்படிக்குச்செய்கிற எத்தனத்துக்கும் அதற்கு விரோதமாகச்செய்கிற எத்தனத்துக்கும் மிகவும் பலத்தினாலுண்டான பேதத்தைத்தெரிவிக்கிறார் | புருஷனுக்குச்சாஸ்திரங்களிற்சொல்லப்பட்ட எத்தனங்களைச்செய்யாமலிருக்கும்போது தனக்குத்தானே உண்டாயிருக்கிற ஆசைமுதலான தோஷங்களாலுண்டான கெட்டமார்க்கத்தில் தானிருக்கிறத்தினாலுண்டான தாரித்திரியம் ரோகம் பந்தமுதலானகெட்டதிசைவந்திருக்கும்போது தன்கைகால்முதலானதும் சுவாதீனமாயிருக்காததினால் நுனிவிரல்களுடையவணக்கத்தினால்சம்பாதிக்கத் தக்கதாயும் உள்ளங்கைக்குள்ளடங்கியிருக்கிறதாயுமிருக்கிற சலம் வாயில்விடத்தக்க ஒருபித்துகூட சிரமப்பட்டுங்கிடைக்காததினால் மிகவும்பெரிதாகுது அந்தப்புருஷனுக்குத்தானே சாஸ்திரங்களிற்சொல்லப்பட்ட புருஷஎத்தனம் பலத்திருக்கும்போது தருமங்களுடையஆதிக்கத்தினாலே பிரியவிரதன்முதலான அரசர்களைப்போலஏழுதீவுக்குமதிகாரியாயிருக்கிறஒருதிசையிலிரட்சிக்கத்தக்கவர்களானபின்னவைகளைக்குறித்து அந்தந் திபாந்தரங்களைப்பிரிவினைபண்ணுகிறதும் பெரிதல்ல அப்படியேபுராணத்தில் பிரியவிரதர் உத்தானபாதரிவர்களிரண்டுபேருமுன்னாலேகஷ்டப்பட்டுத் தபசுபண்ணிக்கொண்டிருக்கும்போதுமேலே மண்மூடி கள்ளிமாமுளைத்திருந்து அதன்பின்பு அரசர்களாகவிருந்து வெகுசுகங்களை அனுபவித்தாரென்றுபிரசித்தமாயிருக்கின்றது. *

நான்காவதுசருக்கமுற்றிற்று.

[ மற்றவை நடந்துவருகின்றன. ]

# பிழை திருத்தல்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தல் | பக்கம் | வரி | பிழை | திருத்தல் |
|---|---|---|---|---|---|---|---|
| ௫ | ௰௧ | ஞுவ | ஞுவ் | ௫௫ | ௰௯ | ஞுல | ஞுல |
| | ௰௨ | ஞுலி | ஞுல் | ௫௮ | ௨௮ | கும்ப | குமர |
| | ௰௬ | அதன | அதன் | ௫௯ | ௩ | லென் | லென |
| | ௰௭ | குற்றம | குற்றம் | | ௨௩ | வேத | வெகு |
| | ௨௧ | நநத | நத்க | ௬௨ | ௩௰ | அப | அக |
| | '' | வமெள | வமெளா | ௬௭ | ௨௯ | கா | கர |
| ௬ | ௨ | தனமி | தன்மி | ௬௮ | ௮ | ஞுல்ல | ஞுலல |
| | ௫ | தரா | தார | ௭௧ | ௰௨ | யடபா | யடையா |
| | '' | தன | தன் | ௭௫ | ௩௰ | கைகி | கைக்கி |
| | ௰௨ | முதல | முதல் | | ௩௩ | தலிர | தலிா |
| | ௰௩ | இதற | இதற் | ௮௫ | ௨ | ளித | ளில்த |
| | ௰௭ | வன | வர் | ௮௭ | ௰௭ | சென்ன | செனன |
| | ௰௯ | ருப | ருப | ௮௮ | ௨௭ | சின் | கின் |
| ௭ | ௰௫ | ஆதம | ஆத்ம | | ௩௰ | வர்க் | வர்க |
| | ௨௫ | டைவ | டையவ | | ௧ | விருக்கிக் | விருக்கி |
| | ௨௬ | துறப | துற்ப | ௮௯ | ௬ | யோகி | போகி |
| ௮ | ௩௩ | சஸ் | சஸ | | ௨௧ | மரன | மான |
| ௰௨ | ௩௧ | பொரல | போரல | ௯௫ | ௰௧ | பொது | போது |
| ௰௫ | ௨ | ருப | ருப | ௯௬ | ௨௧ | நகிக்கி | நசிக்கி |
| | ௬ | ருப | ருப | ௱௧ | ௰௯ | யிருக்கிற் | யிருக்கிற |
| | ௨௯ | தாா | தார | ௱௭ | ௨௪ | கெம்பீர் | கெம்பீா |
| ௨௬ | ௰௮ | டிரு | டுபிரு | ௱௰௪ | ௩௩ | சாரவின | சாரவிண |
| ௨௭ | ௫ | தால | தால் | | ௯ | யர | யா |
| ௨௮ | ௰௫ | கால | கால் | ௱௰௫ | ௨௬ | பிரமர | பிரமா |
| ௪௧ | ௰௬ | கரல | கால | ௱௨௭ | ௩ | வன்மு | சிவன்மு |
| ௪௪ | ௬ | சென | சென | ௱௩௪ | ௨௧ | அவ்வத் | அவ்வாத் |
| ௪௫ | ௰௯ | பைந | யைப் | | | | |
| ௫௪ | ௨௰ | கித்த | சித்த | | | | |

இப்புத்தகம் வேண்டியவர்கள் புதுவையில் தருமசிவ செங்குசெட்டியார்வீட்டிலும். மோரீசு - முத்துசாமிபிள்ளைவீட்டிலும் வாங்கிக்கொள்ளலாம்.


கலியுக ௵ ௪௲௯௱௪௰௫

குரோதி ௵ கார்த்திகை ௴

☞ இதன்விலை. ௯. ௩.

தீதகங்காரஞ் சடமாய்ப் பயனிலியாய் துவசமாய் = கொடிய அகங்காரமானது அறிவில்லாததாய்ப் பிரயோஜன மில்லாததாய்ப் பாவசமாய், சீவனுலே சாதமுறும் = உயிரினுலேயுண்டாம், இது சிறுவர் மயக்கத்திற்பேய் தோன்றுந் தன்மைபோலாம் = இது பாலர்க்குப் பிராந்தியினுலே வேதாளந் தோன்றுந் தகைமையே போலவாம், ஓதிய சீவனும் தொழிலே வடிவாய் = கூறியஜீவனும் வினையேயுருவமாய், காற்றுருவாகி யிதயமுற்று = பிராணவடிவமாகி இருதயத்திலிருந்து, மேதகைய சுகுமாரமா யுள்ளே = மேம்பட்ட கோமளமாய் அந்தர், மற்றென்றால் மேவிவாழும் = பிறிதொன்றினுலே பொருந்தி வாழாநிற்கும்.

(ஸ்ரீ - வீர.) முதல் முதலில் தேகமானது அசேதனமாம் அதனுனே யொன்று மறியாததாம், யான் அல்லவென்பதே துணிபாம், பாலர்முதலிது துணியப் பெற்றதேயாம், பொத்தையன்யான் வெள்ளையன்யான் என்பதாதி புத்தி விருத்திகள் இருந்தபோது மாத்திரம் அநுபவிக்கப் பெறுகின்றதேயன்றிச் சுதந்திரமா யநுபவிப்பதில்லையாம், ஆகவே யதற்குச் சடத்தன்மையாம், கர்மேந்திரியகணமும், இத்தேகத்தினும் அபின்னஹஸ்த பாதாதியவயவான்மகமாம், அவயவ அவயவிகட்கு வேற்றுமையின்றும் ஜடமேயாம்; ஞானேந்திரிய கணமும் இவ்வாறே சரீர அவயவவடிவமேயாம், ஜடமேயாமெனக் காணப்பெறுகின்றது; எங்ஙனமேனும் அணுக்களும் என்னும் சூத்திரத்தில், இந்திரியப்பிராணுதிகள் சூக்குமங்கள் லிங்கதேக அவயவங்களே, தூலதேக அவயவங்கள் அல்லவாம் என்று ஸ்ரீ பாதராயணமகரிஷியினுலே நிச்சயிக்கப்பெற்றுளதாம்; அங்ஙனமாயினும் அவற்றிற்குத் தேகாவயவத்தன்மையானே பண்டிதன்முதற் பாமரனீருக அநுபவமுண்மையின் அவயவம்போலத் தேகசையுக்தத்தன்மை யுண்மையினுனும், அதனதவயவம்போலும் ஜடத்தன்மையதேயென்பது கருத்தாம்; சூத்திரப்பொருளிதுவாம், "அணுக்களும் = ஈண்டுத்கிராந்தியாதி சுருதிக்கு, பிராணன்கள் சருவங்கள் அநந்தங்கள் என்னும் இந்திரிய விபுத்தன்மைச்சுருதியுடன் விரோதமுளதா? இலதா? என்னும் சந்தேகமுளதாகவே, விரோதமுளதாமெனப் பூர்வபக்ஷம், சித்தாந்தமோ, இப்பிராணன்கள் அணுக்கள் பரிச்சின்னங்கள், இந்திரிய அக்கிராகியத்தன்மையானே சூக்குமத்தன்மை யுண்மையின்; விபுத்துவசுருதிக்கு உபாசனுபரத்தன்மை யுண்மையின், அதனேடு உற்கிராந்தியாதி சுருதிக்கு விரோதமிலதாம் என்பது துணிபாம். மனமாதிக்கும் ஜடதேகாதிப் பிரோகத்தன்மை யுண்மையின் தற்சையோகயோக்கிய திரவியத்தன்மையானே தடியாதிபோல ஜடத்தன்மை சித்தமாம் எனல்:—தடியினுலென்பது. புவியிலோடுகள் தடியினுற்போல எக்காரணத்தினுல் மனத்தால் ஏவப்பெறுகின்றதோ அக்காரணத்தினுல் ஜடமேயாம்; மனமும் இவ்வண்ணம் ஜடமேயாமென வெண்ணுகின்றேன்; சங்கற்பவடிவ சக்தியுடையதாதலின்; கல்லானது இராஜஜா யந்திரங்களினுற்போலப் புத்திநிச்சயங்களினுலே மனம் பிரேரிக்கப் பெறுகின்றது, புத்திநிச்சயரூபமிவ்வண்ணம், ஜாட்டிய இயற்கையதே என்பது துணிபாம்; இருகரையிடைப்பட்ட ஆழ்ந்த தேசத்தால், நதிபோல, அத்தியந்தம் அந்தப் புந்தியானது அகங்காரத்தினுலே யேவப்பெறுகின்றது, அகங்காரமும் சாரமற்றதேயாம், ஜடமேயாம், சவான்மகமாம், மயக்கவடிவமாய இபக்கன்பாலனுற்போல ஜீவனுலதுண்டாக்கப்பெறும்=பிராணுவச்சின்னசிதாபாசனுலத்தியசிக்கப்பெறும், பெறவே யக்ஷதேகம் போலும், அதற்கு அத்தியஸ்தத்தன்மையுண்மையினுனே ஜடத்தன்மையாம்; ஜீவனும் சேதனுகாசன் பிராணேபாதிகன் இருதயத்திலே யிருப்பன், சுகுமாரனுகியே

T சர்வான்மகேம்.



யுள்ளே யாதோ வேறென்றினுலே நன்கு ஜீவிப்பன் = தனது அந்தர்யாமியாகிய பிம்ப சைதன்யத்தானே பரிபூரணனுய் வாழ்வன் என்பதாம்.

(ச.) முதலான வுடல்சடமாம், இதற்கேது, மூகமாய்=மூடமாம்; அதனுல் நானென்று மொழியலாகா, நான் அன்றென்பதே நிச்சயம், கருமஞானேந்திரியங்கள், சடமாகி தேகத்தினும் வேருகாதாம், தடிபோல், மனத்தாலே + செய்யுப், அதனுல் நானன்ருகு மென்பது அந்நுவயம், மூடம் = விசித்தம். சங்கர்பான்ம சக்தியாகிய சித்தந்தானும் கவணுலெறிகற்போல், புந்தி + எய்தும், அதனுல், சடமாமென் றெண்ணுகின்றேன், கவண் = கயிறு கட்டையாதிமய யந்திர விசேடமாம், அறுதியிடலே வடிவாய் = நிச்சயரூபமாய், அறிவுறுபுந்தியும், பள்ளத்தால் = பறித்தலிற் சனித்தகுழியால், நதிநீர் போல் அகங்காரத்தாற் செய்கையையுறும், அதனுல் ஜடமேயாமென்பது நிச்சயம். கவண்= கல்லெறிதற்குரிய கருவி விசேடம். அகங்காரமும் தீது, சேட்டையின்மையின் சத்துவமின்மையாய் விபரீதஞானரூபமாதலின் பயனிலியாய், அவசமாய் = பரவசசுபாவமாய், சிறு + போல், சீவனுலே, சாதமுறும்=கற்பிதமாம், அதனுல் சடமேயாம், சீவனும், அந்தக்கரணப் பிரதிபலித சைதன்யரூபனுதலின், தொழிலே வடிவாய் கற்பிதசுபாவமாய், பிராணமயனுதலின் காற்றுருவாகி, சுகுமாரமாய் = தினந்தோறுஞ் சுழுத்தியில் ஆன்மாவில் நசிக்கின்றமையின் அத்திருவமாய், உள்ளே, தனக்குள்ளும் புகுந்துறையும், மற்றென்றால் = விவகரிக்கத்தகாத பிராணதாதாவான புருடனுல், மேவிவாழும், அதனுற் சீவனும் பாரமார்த்திகமான ஆன்மசொரூபமன்றுமென்பது பொருள். கடாதியுபாதியி லவச்சின்னமும் அநவச்சின்னமுமான ஆகாசமிருத்தல்போலும் ஜலாதியுபாதியிற் பிரதிபிம்பமும் விம்பமுமான ஆகாசமிருத்தல்போலும், சர்வப்பிராணிகளி னிருதயத்திலும் ஜீவனும் ஈசனும் இருக்கின்றார்கள் என்பதாம்.

இதற்குதாரணம்:—[^]குகையிற் புகுந்தவர் ஆன்மாக்களேயாம் அது தரிசனத்தினுல் என்பதாம், அவற்றினு மாயா விதேயன் சீவன், விதேயமூ[௨] யனீசுவரன் என்பதுபேதம் இதற்குதாரணம்: ஸ்ரீகௌட பாதாசாரியர்:—காரிய உபாதி யிச்சீவன், காரணேபாதி யீசுவரன், காரிய காரணத்தை விட்டுப் பூரணபோதனுய்ச் சேடிப்பா யென்பதாம். (10-11-12)

(ஸ்ரீ-வீர - அ-கை.) குகையிற் புகுந்தவர்கள் ஆன்மாக்களே யாவர்கள், அது காணப்பெறுதலின்=ஈண்டுப் பூர்வ பக்கத்தில் புத்திபின்ன ஜீவஞானம், சித்தாந்தத்திலோ, ஜீவவிலக்ஷண பரமாத்மஞானம், எனப் பலவேற்றுமையாம்; கடவல்லி யுபநிடதத்தில் இவ்வண்ண மியம்பப் பெறுகின்றது, தாஞ்செய்த கருமத்தின் பலமாந்துவார்கள் இத்தேசத்தில், என்பதாதி, ஆண்டென் புத்தி ஜீவர்கள் புகுந்தவர்களா அல்லது ஜீவ பரமாத்மாக்களா என்னும் ஐயம் உற்றுழி, புத்தி ஜீவர்கள் என்பது பூர்வபக்ஷமாம், சித்தாந்தமோ ஈண்டுக் குகையிற் புகுந்தவர்கள் ஜீவபரமாத்மாக்களே, ஏனெனின், எக்காரணத்தால் ஆன்மாக்கள் சேதனர்கள் ஆவர்களோ, பலத்தைக் குடிப்பவர்கள் எனக் கருமபலபோகங் கேட்கப்பெறுதலானே ஒன்றற் கான்மத் தன்மையேல், இரண்டாவதற்கும் ஆன்மத்தன்மை நியாயமாம், அதன்கட்காரணம்:—அது காணப்பெறுதலின், சங்கைச் சிரவணத்திலோ, சங்கையுடையவர்களின் ஏகரூபத்தன்மை யுலகிற் காண்டலின்.

இதனுனும் ஜீவபரமாத்மாக்களே. குகையிற் பிரவேசித்தவர்களாவார்கள் எனல்:—சிறப்பானும்=அவன் இச்சம்சார மார்க்கத்தின் கரையை படைவன், தேவனை யுணர்ந்து தீரனை



० இருதயம் · T யயன். ௨ மாயையையுடையவன்

வன் ஆவன் மகிழ்சி வாட்டம் விடுவன், எனச் சீவ பரமான்மாக்கட்கே இந்தப் பிரகரணத்தில், செல்பவன் சேர்வது ஆந்தன்மையானேயும் சிறப்பித்துண்மையின் என்பதாம். என்றிவ்வண்ணம் பிரஹ்மசூத்திரம் கூறுதலின் இப்போது அக்நகைக்கு ளிருக்கும் ஆன்மாவைத் தரிசித்து அதனியல்பை யுரைத்தல்:— ஆற்றுமவென்பது.

ஆற்றுமதத் துவவறிவென் றறிந்தேனீ தறிபொருளா லழுக்குமேவா
தேற்றுமென துருவமாய்ச் சீரணமாஞ் சித்துருவாற் சீவன் வாழுந்
தோற்றுபொருள் களின்மயங்குஞ் சித்துருவாற் சீவன்வாழ் தொடர்ச்சிகூறிற்
காற்றதனுன் மணம்போலும் பள்ளத்தா னீர்போலுங் கருதுங்காலே.

(ப - ரை) ஆற்றும தத்துவ வறிவென்றறிந்தேன் = ஆன்ம தத்துவ சைதன்யமென்றுணர்ந்தேன், ஈது அறிபொருளால் அழுக்குமேவாது = இந்த வஸ்துவானது திருசியங்களாற் களங்க மடையாது, எற்றுமென துருவமாய் = போற்றும் என்னுடைய வடிவமாய், சீரணமாம் = அநாதியாம், சித்துருவாற் சீவன்வாழும்=சைதன்ய உருவத்தாற் சீவனனது ஜீவிக்கும், தோற்று பொருள்களின் மயங்குஞ் சித்துருவால் = பிரதீதியாகும் திருசியங்களின் பிரமவானுகிய அறிவுருவினுலே, சீவன்வாழ் தொடர்ச்சி கூறில் = ஜீவன் ஜீவிக்கும் முறைமையைச் சொல்லில், காற்றதனுல் மணம்போலும் = வாயுவினுலே கந்தம்போலும்; பள்ளத்தால்=குழியால், நீர்போலும்=ஜலமேபோலும், கருதுங்கால்=ஆராயும்போது. ஏ-அசை; அல்லது தேற்றமாம்.

(ஸ்ரீ - வீர.) ஆ! அகோ! ஆச்சரியம் நிச்சயமாக அறியப்பெற்றது, சாக்ஷி பாவத்தானே விடயங்களைப் பிரகாசிப்பிக்கு மதனுல், அநாதி தமிகு கதியதாம், இச்சிந்தனமான சித்து வடிவ ஆன்மரூபியால், ஜீவன் ஜீவிக்கின்ருன்; சேத்தியப் பிரமவானுகிய, சித்துருபத்தினுலேயே ஜீவன் வாழுதல், பவனனுல் ஆமோதம்போலும் பள்ளத்தினுல் நதிப்பிரவாகம் போலும் ஆம்.

(ச.) ஈதறிந்தேன், அது யாதென்பதற்குத்தரம், இந்தச் சீவன், அறிபொருளா லழுக்குமேவா = திருசிய சம்பந்தத்தாற் களங்கமுறாது, பிரதி பிம்பரூபக் களங்கரகிதமாய், தோற்றுமென துருவாகி=சகலருக்கும் ஆன்ம ரூபமாய், சித்தமாய், அநாதியாகிய சித்துருவால்=சிற்சொருபத்தாலே, வாழும்=பிராணன்களைத் தரிக்கும், இதனைத் திருஷ்டாந்தத்தோடு கூறல், தோற்று பொருள்களின் மயங்கும்=திருசியங்களிற் பிரதிபலித்துத் தாதான்மிய அபிமானமுறும், அழுக்குமேவித் தோற்றும் என்றும் பாடபேதமுளது, களங்கமாய்ப் பின்பு தெளிவிக்குமென்பது பொருள். ஆ என்பது நினைவையூட்டும் அவ்வயம், அகோ என்பது ஆச்சரியம். (13)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஆண்டுப் பொருத்தத்தை யுரைத்து இரங்கல் :—பொய்யாகி யென்பது.

பொய்யாகிச் சடமான வறிபொருளின் புணர்ச்சியாற் போதரூப
மையான சடமாகிப் பெருநீருட் கனல்போற்றன் வடிவை விட்டு
மெய்யான சித்துருவ மிப்படியே யறிபொருளை மேவலாலே
யையோபொய் யாய்ச்சடமா மறிவினு லறிவிக்க வறிந்ததன்றே.

௨ வாசிக்க.



(ப - ரை.) பொய்யாகிச் சடமான அறிபொருளின் புணர்ச்சியால் = அசத்தாகிச் சடமான திருசியத்தின் சம்பந்தத்தால், போதரூபமையான சடமாகி=சித்துருபம் களங்கமான ஜடமாகி, பெருநீருட் கனல்போல் தன் வடிவை விட்டு=மிகுதியாய ஜலத்தில் நெருப்புப்போலத் தன்னுடைய சொரூபத்தை விடுத்து, மெய்யான சித்துருவ மிப்படியே யறிபொருளை மேவலாலே=உண்மையான அறிவுருவம் இவ்வண்ணமே திருசியத்தை மருவலாலே, ஐயோ=அந்தோ, பொய்யாய்ச் சடமா மறிவினு லறிவிக்க அறிந்தது=அசத்தாய்ச் சடமாய் சைதன்யத்தினுல் உணர்விக்க உணர்ந்தது. அன்று ஏ-அசைகள்.

(ஸ்ரீ - வீர. அசத்தியஜட திருசியாம்ச தாதாத்மிய சம்சர்க்க அத்தியாசத்தானே சித்தியர்கையதாயினுமது, ஜடம்போலடையும் பெருநீராகிய வெந்நீர் கடனீர், அதன்கணுற்ற அக்கினியேபோலத் தனது பிரகாச சொரூபத்தை விடுகின்றது; இதனுனே சத்தாம் சத்திற் சித்வைலக்ஷண்யம்போல அடைவுற்றதான, குட மிருக்கின்றது ஆடை யிருக்கின்றது என்னுஞ் சத்தையானது கடபடாதிய சித்தாகார சமரசாநுபவத்தை யடைகின்றது; கடாதி யாகாரத்தின் மிருதாதிகளில் இலயமாம்போது, கடமில்லை படமில்லையெனச் சத்தாகாரத்தையும் விடுகின்றன, அபாவத்தன்மையையும் அடைகின்றனவென்பது கருத்தாம். சைத்திய, ஒருமையை யுற்றபோது, உளதுருவமாதல் இலதுருவமாதல் யாதுதான் வாதனையால் வந்ததாய்த் தானே யிலங்குகின்றதோ அதுவேயாய்க் கணத்தி லத்தியந்தம் பூரண சொரூபத்தை விட்டொழித்து, அச்கணத்திலேயே தானே யாகின்றது. கூறிய முறையே உண்மையாகச் சித்துருபமாயினும், இது, அவித்தையாவரணத்தினின்றும் அத்தியாச பரம்பரையானே திருசிய நாட்டத்தானே தானே ஜடமாயும் சூனியமாயும் அசத்துல்லியமாயும் உற்றுச் சகத்துருவம், புத்தியில் மறைபடா வியற்கையானேயுற்ற சைதன்யத்தினுலேயே, அவ்வவ் வாகாரவிருத்தி வியாப்தியினுலேயே; மூலாவித்யாவரண பங்கவாயிலாக வுணர்த்தப்பெறுகின்றது.

(ச) போதரூபம் = சிற்சொரூபம், பொய்யாகிச் சடமான; அறிபொருளின் = திருசியாங்கிசங்களின், புணர்ச்சியால், சடமாகி, பெருநீருட்சேருங் கனல்போல, தன் வடிவை= சிற்சுபாவத்தை, விட்டு=விட்டதாய், மெய்யான சித்துருவ மிப்படியே=முற்கூறிய பிரகாரமாக அறிபொருளை மேவலாலே=திருசியபாவனையால், தானே, பொய்யாய் = அசத்துக்கொப்பாய், சடமாம்=சாட்டிய சம்பந்தமாம், பின்பு அறிவினுல்=தனக்குள்ளுறுஞ் சைதன்யத்தால், அறிவிக்க வறிந்தது. அது சிருட்டித்து அதுவே பின்புகுதும் என்னுஞ் சுருதியினுனென்க. சயனம்=உபசயம்=விருத்தி. (14)

(ஸ்ரீ-வீ - அ-கை.) ஆயின் மூலாவித்யாவரண பங்கத்தானே இந்தப் பிரஹ்மசித்தானது எவ்வுபாயத்தாற் றிருசிய சொப்பனத்தைவிட்டுப் பிரபோதமுடைய தாயதெனச் சிந்திக்கத் தொடங்கல்:—இந்தவென்பது.

இந்தவறி வெத்தாற்கா ணப்பட்ட தென்னில்வே றேதுமில்லை
யந்தமில்கா லத்தாலே யறியவேண் டியதறிந்தே னம்மவம்மா
மூந்துவறி வின்பரப்பை முடிவாக மனங்காண முதலவெல்லாஞ்
சிந்தனைசெய் யாமையா லுதித்தனவாஞ் சிந்தித்தாற் சேரப்பொய்யே.

(ப - ரை) இந்தவறி வெத்தாற்காணப் பட்டதென்னில் = இவ்வுணர்வு எதனுலே நோக்கப்பெற்றது என்னின், வேறேதுமில்லை=அயலொன் றுமில்லை, அந்தமில்காலத்தாலே=

† சேத்தியபாவம்.

அளவறு காலத்தினுலே, அறியவேண்டிய தறிந்தேன் = தெரியவேண்டியதைத் தெரிந்து கொண்டேன், அம்ம அம்மா=ஆச்சரியம் ஆச்சரியம், முந்து அறிவின் பரப்பை = முதன் மையான சைதன்யத்தின் விஸ்தாரத்தை, முடிவாக = பரியந்தமாக, மனங்கரண் முதல வெல்லாம்=மனம் கரணம் முதலன யாவும், சிந்தனை செய்யாமையால்=சிந்தியாமையால் உதித்தனவாம்=உதயமாயினவாம், சிந்தித்தாற் சேரப்பொய்யே=சிந்தனைசெய்தால் அனைத் தும் அத்தியந்தம் மித்தையேயாம்.

(ஸ்ரீ - வீர) இவ்வண்ணம் சூடாலையானவள் நன்கு சிந்தித்து, எதனுல் இச்சித்தானது அவிர்விக்கப் பெறுகின்றது என்று நெடும்போது சிந்தித்தனள், பின்னினிக்கூறும் வகை யானே யுணர்வுற்றனள்; அந்தோ! அந்தோ! ஆச்சரியம், வெகுகாலங் கழித்து அறியவேண் டிய ஆதிவியாதி யற்ற ஆன்ம தத்துவத்தை யறிந்துகொண்டேன்; எதனைத்தான் உணர்த லுற்றபின் னெதவுமே விடுபடுவது கிடையாதாமோ, எப்புருடனுமே பரம புருடார்த்தத்தி னின்றும் நழுவவே மாட்டானே, அல்லது, எக்காமியப்பொருளும் ஹானியடையமாட் டாதோ, அதனடை வினுலேயே எல்லாக் காமமும் அடையப் பெறுதலின், அல்லது எவ்வத் துவையும் திக்கசாதனமெனு மதியானே விடமாட்டானே. யாவற்றிற்குமே ஆனந்த ஏகரசத் தன்மையடைவு இருத்தலின்; ஹான அசம்பவ்க் கூற்றுனது உபாதானத்திற்கு முபலக்ஷண மாம். இந்த மனேபுத்தி யிந்திரியாதிகள் யாவுமே சித்துவிலாசத்தினது பரிச்சேத ஹேதுக் களாம்; இல்லாதனவாகிய இவை யாவுமே, அந்தோ, இரண்டாவது இந்துபதத்திருப்பன வாம் அதாவது, திமிரம் வாய்ந்த திருஷ்டியினுலே நன்கு கற்பிக்கப்பட்ட இரண்டாவது சந்திரனுடைய ஸ்தானத்தி லிருப்பனவாம், பிராந்தி கற்பிதங்கள் என்பது திரண்டுருண்ட பொருள். சர்வ காமாப்திக் குதாகரணமாக, எல்லா வாழ்வினையுமுறும் சார்வ பௌமிமாதி யென்பதையும் ஈண்டுதாகரித்துக்கொள்க. இது. வே-சூடாமணி.

(ச) இந்த வறிவு, எத்தால், எந்த வேதுவினுல், காணப்பட்டது, மனே புத்தியாதி ரூபமாக விவர்த்தமாயிற்று என்னில் = என்றிதனை யிப்போதியான் விசாரிக்குங்கால், வேறேதுமில்லை, ஈதோர் வாக்கியம்; அறியவேண்டியது, அறிதற் கிச்சிக்கப்பட்ட சித்து விவர்த்த நிமித்தமாகை யென்பதுபொருள்; ஈதோர் வாக்கியம். அஃதியாதென்பதற் குத் தரம், சடப்பொருள்களிற் சைதன்யப் பிரதிபலன மறிவின் பரப்பாம், அதை முடிவாக = அதைப் பரியந்தமாகவுடைய, முந்து மனங்கரண முதலவெல்லாம்=இந்த மனே புத்தி யிந் திரியாதி யனைத்தும், உண்மையாகப் பொய்யேயாயினும், சிந்தனை செய்யாமையால், ஏகாக் கிரமின்மையின், உதித்தனவாம்=உண்டாயின, ஆன்மாவின் சொரூபநிட்டை யின்மையே வடிவமான பிரமாதத்தா லுதித்தனவாம், அருவதானமே சித்து நானுரூபமாக விவர்த்த மாதற் கேதுவென்பது பொருள். (15)

(ஸ்ரீ-வீர - அ-கை) சகல ஆரோபங்களின் அதிஷ்டானமாகிய அப்பொருளையே பெரு மைப்படுத்தி யுரைத்தல்:—எல்லையிலென்பது

எல்லையில்பே ரறிவேயிங் குளதிதனைப் பேருண்மை யென்றுஞ்சொல்வா
ரல்லலுறுங் களங்கமறச் சமமாகி யகங்காரமில் வடிவமாகித்
தொல்லையொளி யொருக்காலே துலங்குவதாய் நித்தபரி சுத்தமாகி
மல்லலுயர் பிரமமெனப் பரமமெனப் பெயர்பெற்று வழங்குமன்றே.



(ப - ரை) எல்லையில் பேரறிவே=வரம்பின்றிய பெருஞ் சித்தே, இங்குளது = இவ் விடத்திருக்கின்றது, இதனை=இப்பொருளை, பேருண்மை யென்றும் = பெருஞ் சத்தை யென்றும், சொல்வார்=கூறுவார், அல்லலுறுங் களங்கமற = இடர்ப்படுத்துங் குற்றங்கள் எல்லாம் நீங்கி, சமமாகி யகங்காரமில் வடிவமாகி=ஒப்பாகி யகங்காரமில்லாத சொரூபமாகி, தொல்லையொளி யொருக்காலே துலங்குவதாய் = ஆதியற்றதாய அந்தப் பிரகாசம் ஒரு முறையே ஒளிர்வதாகி, நித்தபரி சுத்தமாகி=எப்போதும் பரம தூயதேயாகி, மல்லலுயர் பிரமமெனப் பரமமெனப் பெயர்பெற்று வழங்குமன்றே = அதி விமலமாகி விரிந்த பிரம மென்றும் பரம்பொருள் என்றும் நாமம் பெற்றுச் சாஸ்திரங்களிலே விவகரிக்கப்பெறும். அன்று ஏ-அசைகள்.

(ஸ்ரீ - வீர) மகாசித்து ஒன்றே யுண்டுண்டு, மகா சத்தையென்றது மலரப்பெறும், சொரூபமா ளங்கமற்றுச் சமமாய்ச் சுத்தமாய் அகங்கார மற்றதாமது, சுத்தசம் வேதனுமே சொரூபமா யுடையதது, பூமானந்த ரூபத்தன்மையாற் பரமமங்களமாமது, சன்மாத்திரமாம், அத் தகைய இயற்கையா லொருபோதும் நழுவாததாகிய அச்சுதமது, மூலாவித்யாவரண பங்கத் தானே யொருமுறை யிலங்குவது, மறுபடி யெதனுனும் மறைபடுவதே கிடையாது, இத ஞனே நித்திய உதயமுடையதாம், எப்போதும் விமலமாம், அது பிரஹ்ம பரமான்மாதி நாமங்களானே, வேதாந்தாதி யத்திமாத்ம சாஸ்திரங்களிலே யிலக்கணையானே யினிது பிரதிபாதிக்கப் பெறுகின்றது.

(ச) பேருண்மை = மகாசத்தை, பரபரியாயமாம், களங்கமற = நிட்களங்கமான, போறிவேயுளது இதுவே பிரமம், பரமான்மாதிப் பேர்பெற்று வழங்குமென்பது அந்நுவ யம், சமம்=சர்வான்மகம் அலதேகரூபமாம். மூ: சமா இருமுறை கொடுத்ததின் அபிப் பிராயம், ஒன்று சர்வ சப்தபரியாயம், சர்வான் மகமென்பது பொருள், மற்றொன்று விடம பாவமின்மையைக் கூறுவதாம், ஏகரூப மென்பது பொருள், இவ்வாறாகவே கூறியது கூறல் என்னும் குற்றமின்றாம். (16)

(ஸ்ரீ-வீர - அ - கை.) இவ்வண்ணம் விசாரத்தானே யுண்டாகிய தத்துவஞானத்தின் பயிற்சியானே தினக்கிரமமாக உத்தரோத்தர பூமியேறி யதை யுரைத்தல்:—இவ்வாறுள் ளென்பன.

இவ்வாறு தினந்தோறுந் தன்சொரூபத் தேகளிக்கு மிதயநோக்காற்
றவ்வாத பகுதிநிலை யாயாசை போய்ச்சங்கஞ் சற்றுமின்றி
யொவ்வாத தொந்தனைபோய்த் தொழிலின்றிப் பற்றுவி டொன்றுமின்றிக்
கவ்வாத வியற்றெழில்செய் துயர்பரமப் பெரும்பேற்றுற் கருத்துமுற்றி.

உள்ளுறுபூ ரணமெய்தி யுவமைகட்கப் பாலாகி யொருவராலுந்
தெள்ளியுள விடவொண்ணு நிலையாந்தன் விவேகத்தின் செறிபழக்க
வெள்ளமுறத் தன்சொருபம் வெளியாய்மென் மலர்க்கொடிபோல் விளக்கமுற்று
ளெள்ளரிய வதிசுவமரம் பேரொழில்கூ ரிவள்பொலிவை யினிதுநோக்கி.

(ப - ரை.) இவ்வாறு தினந்தோறும்=இவ்வண்ணமே தினந்தினம், தன் சொரூபத் தே களிக்கு மிதயநோக்கால் = தனது ஆன்மசொரூபத்தே யானந்திக்கும் உண்ணோட்டத்

